தமிழ்ப் புத்தகாலயம்

# தமிழ் நாவல்கள்

## நாவல் விழாக் கருத்துரைகள்

# தமிழ் நாவல்கள்

நாவல் விழாக்
கருத்துரைகள்





தமிழ்ப் புத்தகாலயம்

576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5.

முதற் பதிப்பு: டிசம்பர் 1966


விலை: ரூ 3-00

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவில் பதினான்காவது எழுத்தாளர் மாநாட்டில் தமிழ்நாடு தலைமை நீதிபதி கனம் மா. அனந்த நாராயணன் அவர்களால் வெளியிடப் பெற்றது.

TAMIL PUTHAKALAYAM
576, Pycrofts Road,
Triplicane :: Madras-5

அச்சிட்டோர்:
ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ்
சென்னை-17

# பதிப்புரை

1966 ஜூலை மாதம் தமிழ் எழுத்தாளர் சங்கத்தினரால் நடத்தப்பெற்ற நாவல் விழாவில் பேசப் பெற்ற ஆராய்ச்சி விமர்சனக் கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல். இதைத் தொகுத்து வெளியிடும் வாய்ப்பினை எங்களுக்களித்த எழுத் தாளர் சங்கத்தலைவர் திரு. அழ. வள்ளியப்பா அவர்கட்கும், சங்க அங்கத்தினர்களுக்கும் முதற்கண் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நாவல் விழா மூன்று நாட்கள் நடைபெற்றது. 15 தமிழ் நாவல்களைப்பற்றி 15- எழுத்தாளர்கள் பேசினார்கள். ஆனால் இந்நூலில் 13 கட்டுரைகளும், மூன்று தலைமை உரை களுமே இடம் பெற்றுள்ளன.

பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்களின் ''கரித் துண்டு'' பற்றி திரு. பி. ஸி. கணேசன் அவர்கள் பேசினார் கள். அவர்களுடைய நல்ல விமரிசனப் பேச்சை வரிவடிவில் ஆக்கித்தர அவர்கள் எடுத்துக் கொண்ட காலம் முடிவின்றி நீண்டுகொண்டே போகிறது. மாநாட்டில் புத்தகத்தை வெளியிட வேண்டுமென்ற நிலையில் அக்கட்டுரை இந் நூலில் இடம் பெறவில்லை. 1966-ஆம் ஆண்டில் வெளி யிடப் பெறும் ஒரு நாவல் விமரிசன நூலில் டாக்டர் மு. வ. அவர்களின் நூல் பற்றிய விமரிசனம் இடம் பெறவில்லை என்பது ஆச்சரியப்படக் கூடிய விஷயம் மட்டுமல்ல; பதிப் பாளர், என்ற முறையில் எங்களுக்கு மிகவும் மனவேதனை யளிக்கும் விஷயமும் ஆகும்.

இன்ெறொன்று திரு. ஜெகசிற்பியனவர்களின் ''திருச் சிற்றம்பலம்'' நாவலைப் பற்றி திரு. கோவி மணிசேகரனவர் களின் ஆய்வுரை. திரு. கோவி மணிசேகரனவர்கள் தமக்குச் சரியென்று பட்டதைத் துணிவுடனும், அழுத்தமாகவும் தெரிவித்திருக்கிறார். மேடையில் பேசுகிறபடியே எழுத்தில் வெளியிடுவது சுலபமல்ல; அதிலும் புத்தக வடிவில் வரும் போது இன்னும் அதிகக் கவனமும், இங்கிதமும் அவசியம். ஜனநாயகத்தன்மை கொண்ட எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவில் வெளியிடப்பெறும் ஒரு நூலில் பலருடைய மனதைப் புண்படுத்தக் கூடிய கருத்தைத் தக்க காரணங்கள் இன்றி வெளியிடுவது விரும்பத் தக்கதல்ல. கோவி மணி சேகரனவர்களையும் பிறருக்காக அவரது கருத்தை மாற்றிக் கொள்ளும்படி கேட்பதும் சரியல்ல. இந்த தர்மசங்கடமான நிலையில் ஒரு பதிப்பாளரின் பொறுப்புணர்ச்சிமிக்க கடமை என்று கருதி வருத்தத்துடன், அக்கட்டுரையை நூலில் சேர்க்காமல் விட்டு விட்டோம்.

இந்த ஆண்டிலேயே தமிழ்ச் சிறு கதைகளைப் பற்றி இரண்டு விமர்சன நூல்களும், ''புதிய தமிழ்க் கவிதை'' பற்றி ஒரு ஆய்வு நூலும் வெளியிட்டுள்ளோம். அதைத் தொடர்ந்து தமிழ் நாவலைப் பற்றியும் ஒரு நல்ல ஆராய்ச்சி நூல் வெளியிட வேண்டுமென்ற எங்கள் ஆவல் பூர்த்தி யடையத் துணை புரிந்த தமிழ் எழுத்தாளர் சங்கத்திற்கும் இந்நூலில் தம் கட்டுரைகளையும், தலைமை உரைகளையும் வெளியிட அனுமதி தந்த எழுத்தாள அன்பர்களுக்கும் எங்கள் மனப்பூர்வமான நன்றி உரித்தாகுக.

சென்னை
1—12—66.

**கண. முத்தையா**
தமிழ்ப் புத்தகாலயம்

முதல் நாள்

# தலைமை உரை

---

கி. வா. ஜ

தமிழ் எழுத்தாளர் சங்கத்தில் மிகவும் பயனுள்ள காரியங்கள் நிகழ்கின்றன என்பதற்கு இந்த நாவல் விழா ஒரு சான்று. நாவல்களைப் பற்றிய ஆராய்ச்சியை எழுத்தாளர்கள் வரவேற்பார்கள். தமிழில் விமரிசனம் இல்லை என்ற குறையை அடிக்கடி சொல்லி வருகிறோம். அந்தக் குறையைப் போக்க இத்தகைய முயற்சிகள் உதவும். விமரிசனம் அல்லது திறனாய்வு என்பது இலக்கியத்தின் குணங்களையும் குற்றங்களையும் தெரிந்து எடுத்துக் கூறுவது தான். ஆனால் அது எளிதான காரியம் அன்று. குற்றங்களையே வரிசைப்படுத்திக் கூறுவதோடு நின்றால் அது திறனாய்வு ஆகாது; அப்படியே குணங்களை வானளாவப் புகழ்ந்தாலும் நியாயமான விமரிசனம் ஆகிவிடாது. விமரிசனம் செய்கிறவன் தன்னுடைய விருப்பு வெறுப்புக்கள் காரணமாக ஒன்றை ஆராயப் புகுந்தால் நேர்மையான விமரிசனம் வெளிவராது.

விமரிசனம் என்பதும் ஒரு கலை. இலக்கியப் படைப்பு வகைகளில் அதுவும் ஒன்று. ''இதெல்லாம் மட்டம்'' என்று தடிகொண்டு அடிப்பதோ, ''ஆஹா! இதைப் போல

வருமா?'' என்று வானளாவப் புகழ்வதும் நடு நிலையில் நின்று ஆராய்வது ஆகா. விமரிசனம் மேலும் மேலும் நல்ல இலக்கியங்களைப் படைக்கத் தூண்டுகோலாக இருக்க வேண்டும். சுகாதார இன்ஸ்பெக்டரின் அறிக்கை மாதிரி இருக்கக் கூடாது. ஆராயும் படைப்பில் உள்ள நலங்களை யும் குறைகளையும் எடுத்துச் சொல்லி, இன்னவகை நலங் களும் இணைந்திருந்தால் சிறந்து நிற்கும் என்றும், இன்ன வகைக் குறைகளை மாற்றினால் நல்லது என்றும் பரிவோடு சொல்ல வேண்டும். அப்போதுதான் விமரிசனமும் இலக்கியத் தரத்தைப் பெறும். அப்படிச் சொல்வதிலும் ஒரு பண்பு வேண்டும்.

இன்று சரித்திர நாவல்களைப் பற்றிய ஆராய்ச்சியை ஐந்து அன்பர்கள் செய்யப் போகிறார்கள். மேல்நாட்டு இலக்கிய வழியைப் பின்பற்றியே இன்று புதிய இலக்கியங் களைப் படைத்து வருகிறோம். நாவல் என்பது அத்தகைய வற்றில் ஒன்று. அதன் வகைகளில் ஒன்றாகிய சரித்திர நாவல் என்பது எழுத்தாளனுடைய இருவகைத் திறமை யைக் காட்டுவதாக இருக்கும். சரித்திர நாவல் எழுதப் புகும் ஆசிரியன் நாவலில் வரும் சரித்திரப் பகுதிகளுக்கு நிலைக்களமான நூல்களை நன்கு படித்திருக்க வேண்டும். அதாவது அவன் நல்ல சரித்திர மாணவனாக இருக்க வேண்டும். அதோடு நாவல் எழுதுவதற்குரிய படைப் பாற்றலும் உடையவனாக இருக்கவேண்டும். சரித்திர நாவல் என்பது சரித்திரத்தையே நாவலாக எழுதுவது அன்று. சரித்திரத்தின் கூறுபாடுகளை வைத்துப் பின்னுவது அது. குறிப்பிட்ட சரித்திர காலத்தில் அந்த நிகழ்ச்சிகள் நடந்திருக்கலாம் என்ற எண்ணத்தை உண்டாக்கவேண்டும். சரித்திரத்தில் வரும் மன்னர்களின் பெயர்களையும் வேறு பெயர்களையும் அங்கங்கே தெளித்து வைத்தால் மட்டும் சரித்திர நாவல் ஆகிவிடாது. சரித்திரத்துக்கு மாறுபட்ட நிகழ்ச்சிகளோ, அந்தக் காலத்துக்கு ஒவ்வாத செய்திகளோ நாவலில் வந்தால் அதுவும் முரணானது. பழங்காலத்துச்

சோழர் வரலாற்றை நிலேக்களமாகக்கொண்டு ஒரு நாவலே ஒருவர் எழுதுகிருர். அதில், பகைவர் கண்ணில் மிளகாய்ப் பொடியைத் தூவிஞன், மன்னனுக்கு ரோஜாப்பூ மாலே போட்டான் என்று வந்தால் அவை கால வழு (anachronism) ஆகும்.

சரித்திரத்தில் வரும் சூழ்நிலேயை வைத்துக்கொண்டு நிகழ்ச்சிகளேக் காலவழு வராமல் அமைத்துக் குணசித்திரங் கள் நன்ருக அமையும்படி செய்து கதையில் ஓட்டம் உண்டாகும்படி சமைக்கும் ஆற்றலுடையவர் சரித்திர நாவலே எழுத வல்லவராக இருப்பார். சரித்திரத்தைக் கற்றுத் தேர்ந்த அறிவும் நாவலே எழுதும் கற்பனே ஆற்ற லும் ஒருங்கே பொருந்தியவர்கள் சரித்திர நாவல்களே எழுதும் தகுதியையுடையவர்கள்.

தமிழில் சரித்திர நாவல்களே எழுதும் துறையில் வழி காட்டியவர் அமரர் கல்கியவர்கள். பல்லவர் காலத்து வரலாற்றையும், சோழர் சரித்திரத்தையும் படித்து அறிந்து அவற்றை நிலேக்களமாகக் கொண்டு அவர் படைத்த பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன் என்பவை வாசகர்களின் உள்ளத்தைக் கவர்ந்தன. சிவகாமியின் சபதத்துக்கு ஒரு வரலாற்றுப் பேராசிரியரே முன்னுரை எழுதியிருக்கிருர். சரித்திரக் கூறுபாடுகள் எவ்வாறு மாறுபாடின்றி அந்த நாவலில் இணேந்து விளங்கு கின்றன என்பதை அவர் அந்த முன்னுரையில் எடுத்துக் காட்டியிருக்கிருர்.

ஒரு பத்திரிகையின் ஆசிரியராக இருந்து தொடர் கதை எழுதும் கடமையை மேற்கொண்ட கல்கிக்கு மிக நீண்ட நாவல்களே எழுத இந்த வரலாற்றுச் செய்திகள் உதவின. வரவர அளவில் பெரிய தொடர் கதைகளே எழுதிஞர். அவரைப் பின்பற்றி இப்போது சரித்திர நாவல்களேச் சிலர் எழுதி வருகிருர்கள். சரித்திரத்தோடு ஒப்பு நோக்கிச் சரித்திரக் கூறுபாடுகளுக்கு முரணுனவை மிகுந்து இருப்ப

தாகத் தெரிந்தால், அதைச் சரித்திர நாவல் என்று சொல்வதைவிடச் சரித்திர நாவற் போலி என்றுதான் சொல்ல வேண்டும்.

தமிழ் நாட்டுச் சரித்திரம் மிக விரிவானது. பல கதைகளுக்கு ஏற்ற நிலைக்களங்களை உடையது. அதை ஆழ்ந்து பயின்று நாவல்களை எழுதும் எழுத்தாளர்கள் இன்னும் மிகுதியாக வரவேண்டும் என்று விரும்புகிறேன்.

கல்கியின்

# சிவகாமியின் சபதம்

---

புத்தனேரி ரா. சுப்பிரமணியம்

பல ஆண்டுகளுக்கு முன், நண்பர்கள் சிலருடன் முதல் முறையாக மகாபலிபுரம் என்னும் மாமல்லபுரத்திற்குச் சென்றிருந்தேன். சிற்ப விளக்கம் செப்புவோரின் துணையில்லாமலே நாங்கள் சிற்பக் கோயில்களின் அற்புதத்தைக் கண்டு வியந்து கொண்டிருந்தோம்.

அழகிய பெண்ணின் சிலை ஒன்றின் முன்னால் அமெரிக்க யாத்திரீகர் மூவர் வியப்புடன் நின்று ரசித்துக் கொண்டிருந்தனர். ஒட்டுப் போட்ட பழைய குப்பாயம் அணிந்த கிழவர் ஒருவர், அவருக்குத் தெரிந்த அரைகுறை ஆங்கிலத்தில் சிற்பத்தின் சிறப்பை மேலை நாட்டினருக்கு விளம்பிக் கொண்டிருந்தார்.

''இந்த நடனச் சிற்பத்தில் உள்ள அழகியின் பெயர் சிவகாமி. இந்த மாமல்லபுரச் சிற்பங்களை உருவாக்கிய ஆயனச் சிற்பியின் அருமை மகள். பல்லவ இளவரசர் மாமல்லர் நரசிம்மரின் காதலி...'' என்றெல்லாம் சிவகாமிக்கு வரலாற்று முத்திரை கொடுத்துக் கதையளந்து கொண்டிருந்தார் அந்த முதியவர். அவரது கதையைக் கேட்கக் கேட்க அந்த அமெரிக்க அன்பர்களுக்கு மட்டுமல்ல; ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த எங்களுக்குக்கூட மிகவும் இனிப்பாகத்தான் இருந்தது!

அமரர் 'கல்கி' அவர்களின் சொல்லிலே உருவான சிவகாமி, எப்படியோ கல்லிலும் நிலைத்து விட்டாள் என்று

யான் களிப்புற்றேன். கற்பனையாக ஒரு பாத்திரத்தைப் படைத்து, அதனைக் கலை வடிவமாகக் கல்லிலும் நிலைபெறும் அளவுக்குப் பெருமையளித்த சிந்தனைச் சிற்பியின் பேனா எத்துணைச் சக்தி வாய்ந்தது என்பதை எண்ணி எண்ணி வியந்தேன்.

அது மட்டுமா? அண்மையில் வெளியான திரைப்படம் ஒன்றில் கதாநாயகி தன்னைச் சிவகாமியாகவே கற்பனை செய்துகொண்டு, சித்தப் பிரமை பிடித்திருந்த நிலை சித்திரிக்கப் பட்டிருந்ததைக் கலையன்பர்கள் கவனித்திருப்பார்கள்.

''நவீன சிவகாமி—நரசிம்மர் காதல்'' நகைச் சுவை எழுத்தோவியம் ஒன்று புகழ்மிக்க வார இதழ் ஒன்றில் வெளியான புதுமையையும் வாசக அன்பர்கள் அறிவார்கள்.

சின்னஞ் சிறு பெண்களிடம் நடன மோகம் பொங்கியுள்ள காலம் இது. நடனத்திலே தேர்ச்சி பெற்ற நங்கை ஒருத்தி சற்றே ஆணவம் பிடித்தவளாக இருந்தால், ''நடனத்தில் என்னவோ பெரிய சிவகாமி என்றுதான் மனத்திலே நினைப்பு!'' என்று மற்றவர்கள் சுட்டிக் காட்டும் அளவுக்குச் சிவகாமியின் பெயர் நிலைத்துவிட்டது!

தலைசிறந்த தமிழ் எழுத்தாளர் ஒருவரின் கற்பனையில் மலர்ந்த நடன அழகி சரித்திர நாயகர்களையும் மிஞ்சக்கூடிய வண்ணம் வலுவான இடம் பெற்று மக்கள் மனத்திலே நிலைத்து விட்டாள் என்றால், எழுத்தாளர் உலகம் பெருமைப் பட வேண்டாமா?

நாவல் எழுதுவது எளிதான காரியமல்ல என்பதை எழுத்தாளர்கள் அறிவர். சிந்தனைத் தெளிவும், கற்பனைப் பொழிவும் உடையவர்களால் மட்டுமே தலைசிறந்த நாவலைப் படைக்க முடியும். சாதாரண நாவல்களைவிடச் சரித்திர நாவல்களை உருவாக்குவது மிகப் பெரிய சாதனை என்பதில் ஐயமில்லை. வரலாறு நிகழ்ந்த காலம், அதனோடு ஒட்டிய பழக்க வழக்கம், வாழ்க்கை நியதி, ஆடை—அணி—துணைக் கருவிகள் முதலானவற்றை எல்லாம் நன்கு

ஆராய்ந்து, சம்பவங்களோடு சுவை ததும்பப் பொருத்திக் கதையை உருவாக்க வேண்டுமல்லவா ?

சரித்திர நாவலில், வரலாற்று அம்சம் எவ்வளவு, கற்பனை எவ்வளவு என்பதை வாசகர்கள் பொதுவாகத் துருவிப் பார்க்கத் துணிய மாட்டார்கள். ஆயினும், ஆராய்ச்சியாளர்கள் இதனைக் கவனிக்காமல் விடமாட்டார்கள். தினையளவு சரித்திரப் புள்ளியும், பனையளவு கற்பனையும் கொண்டு நாவல்களைப் படைக்கும் விற்பன்னர்களும் உளர். வாதுமைப் பருப்பே இல்லாமல், வாசனைச் சாறு தெளித்து, 'வாதுமை அல்வா' எனத் துணிவோடு வழங்கும் மகா வித்தை, வரலாற்று நாவலாசிரியர்கள் சிலருக்கும் தெரிந்திருக்கக் கூடும்.

நாவலின் கருவாக அமையும் சரித்திர உண்மைகளில் தவறு இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது வரலாற்று நாவலாசிரியர்களின் கடமை. புகழ் பெற்ற சர். வால்டர் ஸ்காட்டின் நாவல்களில்கூட வரலாற்றுத் தவறுகள் உள்ளன என ஆராய்ச்சியாளர்கள் சுட்டிக் காட்டியுள்ளனர். ஆயினும் அவருடைய நாவல்களின் சுவையான கட்டுக் கோப்பின் கவர்ச்சியினால் சரித்திரத் தவறுகள்கூட வாசகர்களின் கண்ணில் படாமல் மறைந்துவிடுகின்றனவாம் !

மேற்கண்ட உண்மைகளையெல்லாம் மனத்தில் ஏந்திக் கொண்டு கல்கி அவர்களின் சிவகாமியின் சபதத்தை ஆராய்வோமானால் அதன் தனிச் சிறப்பு நன்கு புலனாகும்.

தமிழில் முதன் முதலாகச் சுவை ததும்பும் வரலாற்று நாவல் இலக்கியத்தைப் படைத்து வழிகாட்டியவர் அமரர் கல்கி. ''பார்த்திபன் கனவு'' என்ற அவரது முதல் வரலாற்று நாவலும், அதைத் தொடர்ந்து அவர் படைத்த ''சிவகாமியின் சபதம்'', ''பொன்னியின் செல்வன்'' ஆகிய புதினங்களும் இலட்சக் கணக்கான வாசகர்களின் இதயத்தைக் கவர்ந்துள்ளன.

வரலாற்று அடிப்படை உண்மைகளைத் தங்கக் கம்பிகளாக இழைத்து, முறுக்கிய வலுவான சரட்டிலே கற்பனை

என்னும் அற்புத முத்துக்களைக் கோத்து, அழகான நல்முத்து மாலையாகச் ''சிவகாமியின் சபதத்''தைத் தமிழன்னைக்குச் சூட்டியுள்ளார் கல்கி. இந்த நாவலை நுட்பமாக ஆராய்ந்த பேராசிரியர் திரு கே.வி. ரங்கசாமி ஐயங்கார், ''வரலாறு அல்லது பூகோள அடிப்படையில் ஒரு சிறு தவறுகூட இந்த நாவலில் தென்படவில்லை'' எனத் தெளிவாகச் சான்று கூறியுள்ளார். கல்கி அவர்கள் முன்னே படைத்த 'பார்த்திபன் கன'வையும், பின்னே படைத்த 'பொன்னியின் செல்வ'னையும் வெல்லும் அளவுக்குக் கட்டுக் கோப்பும் பாத்திர யாப்பும் அமைந்துள்ள தன்னிகரற்ற நாவல் இலக்கியம் ''சிவகாமியின் சபதம்''

பல்லவப் பேரரசர் இருவரது வரலாற்றுப் பின்னணியில் இந்த நாவல் உருவாக்கப்பட்டுள்ளது. கி. பி. 600 முதல் 630 வரை மகேந்திர சக்கரவர்த்தியும், கி.பி. 630 முதல் 668 வரை மாமல்லர் நரசிம்மப் பல்லவனும் பல்லவ நாட்டில் புகழ்க் கொடி நாட்டினர் என்பது வரலாறு.

பல்லவர்கள், தொண்டைமான் இளந்திரையன் வழிச் சோழர் மரபினராகவே இருக்க வேண்டுமென நிலைநாட்ட முற்பட்ட கல்கி, ''தமிழகத்துக்குப் பலவகையிலும் பெருமை தந்த காஞ்சிப் பல்லவர்களை அந்நியர்கள் என்று சொல்வது போன்ற கட்டுக்கதை உலக சரித்திரத்தில் வேறு கிடையாது'' என ஆணித்தரமாகக் குறிப்பிட்டுள்ளதைக் 'கடல் தந்த குழந்தை' என்னும் அத்தியாயத்தில் காணலாம்.

''மகேந்திர வர்மன் தன் நாட்டின்மீது படையெடுத்த பகைவர்களைப் புள்ளலூரில் முறியடித்துத் துரத்தினன்'' என்று காசக்குடிப் பட்டயம் கூறுகின்றது.

மகேந்திர வர்மனுக்குப் பின் மாமல்ல நரசிம்மன் சாளுக்கியர்மீது பெரும்படை எடுத்துப் புலிகேசியைவென்று, கி.பி. 642ல் சாளுக்கியரின் தலைநகரான வாதாபியைத் தீக்கிரை யாக்கினன் என்பதும் வரலாற்று உண்மை. வாதாபிப் போரில் மாமல்லனுக்குத் தளபதியாக இருந்து

வெற்றி தேடித் தந்தவர் பரஞ்சோதியார் என்னும் சிறுத் தொண்டர் என்பதையும் வரலாற்று ஆராய்ச்சியாளர் ஒப்புக் கொள்கின்றனர்.

'மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாபித்
தொன்னகரம் துகளாகத் துணைநெடுங்கை
வரைஉகைத்துப்
பன்மணியும் நிதிக்குவையும் பாட்டினமும்
பரித்தொகையும்
இன்னனஎண் ணிலகவர்ந்தே இகலரசன்முன்
கொணர்ந்தார்!''

எனச் சேக்கிழார் பெருமானும் பரஞ்சோதியின் வீரம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

எனவே இந்த நாவலில் வரும் முக்கிய பாத்திரங்களான மகேந்திரச் சக்கரவர்த்தி, மாமல்ல நரசிம்மன், பரஞ்சோதி, புலிகேசி முதலானோர் வரலாற்றில் நிலையான இடம் பெற்றவர்களாவர். திருநாவுக்கரசர், இலங்கை அரசன் மானவன்மன், பாண்டியன், நெடுமாறன், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், ருத்ராச்சாரியார், சீன யாத்திரிகர் 'ஹியூ-வான்-சங்' முதலான வரலாற்றுத் தொடர்புடைய பாத்திரங்களும் கதையுடன் பின்னிப் பிணைகின்றனர்.

மாமல்ல புரத்தின் அற்புதத்தைக் காணும்போது அதன் சிற்பக் கோயில்களை அமைத்த தலைமைச் சிற்பி ஒருவர் இருந்திருக்க வேண்டும் என்று யூகிக்க இடமிருக்கிறதல்லவா? அந்தத் தலைமைச் சிற்பியைக் கற்பனைக் கதாபாத்திரமாக உலவவிட்டார் கல்கி. ஆயனச் சிற்பியைப் படைத்தார்; அவருக்குச் சிவகாமி என்னும் அழகிய மகளைப் படைத்தார்; அவளிடம் நடனத் திறமையைப் படைத்தார்; கன்னியின் மனத்தில் கலையோடு இணைந்த காதலைப் படைத்தார்; காதற் கொடி படர்ந்து இளவரசன் மாமல்லனின் இதயத்தைத் தழுவும் இன்பச் சூழ்நிலையையும் படைத்தார்; கலையும்

காதலும் வீரமும் இழையோடும் நாவல் உருவாகி விட்டது.

போருக்கு இடம் கொடாத வீரப் பெருவேந்தனுகவும், கொலை வழியான போரைத் தவிர்த்துக் கலைவழியிலே கருத்தைச் செலுத்தும் காவலனுகவும் புகழ்பெற விரும்பிய மகேந்திர வர்மன், வடக்கே சாளுக்கிய மன்னனையும், மேற்கே கங்க நாட்டுக் காவலனையும், தெற்கே பாண்டிய வேந்தனையும் சமாளிக்க வேண்டிய நெருக்கடியில் எத்தனை வகையான உத்திகளைக் கையாண்டான் என்பதைத் தித்திக்கத் தித்திக்கச் சித்திரிக்கிறது 'சிவகாமியின் சபதம்.'

காஞ்சி மாநகரை முற்றுகையிடத் துணிந்து ஏமாற்றம் கண்ட வாதாபி வேந்தன் புலிகேசி வெறிகொண்டு சிற்பக் கூடங்களை யெல்லாம் இடித்துத் தள்ளுமாறு தன் வீரர்களுக்குக் கட்டளையிட்ட சமயம் மகேந்திரச் சக்கரவர்த்தி கையாண்ட ராஜதந்திரம் மெய்சிலிர்க்கச் செய்வதாகும். எதிரி ஒற்றரான நாகநந்தி அடிகளையே தந்திரமாகப் பயன்படுத்தி மாமல்லபுரச் சிற்பங்கள் அழியாமல் பாதுகாத்த மதிநுட்பம் பல்லவப் பேரரசனுக்கு 'விசித்திர சித்தன்' என்ற பட்டப் பெயர் தகும்—தகும் எனச் சான்று பகர்கின்றது.

நாட்டின் நன்மையைக் கருதி, சிவகாமி—மாமல்லன் காதலை அறுத்தெரியவும், நாகநந்தியின் நயவஞ்சகங்களை உடைத்தெறியவும், மகேந்திர வர்மன் மாறு வேடங்கள் பல புனைந்து, சுறுசுறுப்புடன் பம்பரமாய்ச் சுழன்று, சிக்கல்களை விடுவிக்க முனையும் ஒவ்வொரு கட்டமும் நாவலாசிரியர் திறமையை எடுத்துக் காட்டுகின்றது. மகேந்திரனின் ராஜதந்திரச் செயல்களின் காரணமாகவே 'மகேந்திர ஜாலம்' என்ற தொடரே பிறந்திருக்குமோ என்றுகூட எண்ணத் தூண்டுகிறது.

பெரும்பகுதி மகேந்திர வர்மனின் ராஜதந்திரங்களே வியாபித்திருந்த போதிலும், இந்த நாவலின் கதாநாயக

ைகக் கருதப்படவேண்டியவன் மாமல்லனே. காதலும் வீரமும் இரு கண்களாகக் கொண்ட மாமல்லனைத் தசரத இராமனுக்குச் சமமான மன உறுதி வாய்ந்தவனாகப் படைக்க முயன்றிருக்கிறார் ஆசிரியர்.

''இந்த உலகத்தில் செய்ய முடியாத காரியம் ஒன்று உண்டு என்றால், அது என் தந்தையின் கட்டளையை மீறுவது தான். நெற்றிக் கண்படைத்த சிவபெருமானே என் கண்முன் னால் பிரத்யட்சமாகி மகேந்திரப் பல்லவரின் கட்டளைக்கு விரோதமான ஒரு காரியத்தைச் செய்யச் சொன்னால் அதை ஒருநாளும் செய்யமாட்டேன்!'' சிவகாமிக்கு எழுதிய காதல் மடலில் மாமல்லனின் மணிவாசகம் இது. இந்த ஓலையைத் தந்திரமாகப் படிக்க நேர்ந்த சக்கரவர்த்தி, ''இராமனைப் பெற்ற தசரதனைவிட நான் பாக்கியசாலி'' எனப் புளகாங்கித உணர்ச்சி பெறுவதும், ''இராமனைவிட நூறு மடங்கு மன உறுதி கொண்டவன் மாமல்லன்'' என நற்சான்று கூறுவதும் மாமல்லனின் பாத்திரத்திற்குச் சிறப்புத் தருகின்றன.

''இந்த இப் பிறவியில் இருமாதரைச் சிந்தையிலும் தொடேன்!'' என்ற இராமனைப் போலவே சிவகாமியைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் சிந்தையில் ஏற்காதவன் மாமல்லன். இறுதிக் கட்டத்தில் பல்லவப் பேரரசின் நன் மைக்காக மாமல்லன் பாண்டிய ராஜகுமாரியை மணந்து கொள்ளத்தான் வேண்டுமென்று தந்தை மகேந்திர வர்மனும் தாயார் புவனமகாதேவியும் மந்திரி மண்டலத் தாரும் வற்புறுத்தி மன்றாடிய காரணத்தால், வேறு வழி யின்றி 'பல்லைக் கடித்துக் கொண்டு' சம்மதம் கொடுத்து உறுதி தளர்ந்த சமயத்திலும் மாமல்லனது இதயத்திலிருந்து சிவகாமியை இறக்கிவிட முடியவில்லை!

பாண்டிய ராஜகுமாரியை மணந்து கொண்ட பிறகும் மாமல்லனால் சிவகாமியை மறக்க முடியவில்லை. ஒன்பது ஆண்டுகளுக்குப் பின், சிவகாமியின் சபதத்தை நிறைவேற்று வதற்காக நரசிம்மவர்மன் வாதாபி மீது பெரும் போர் தொடுக்கக் கிளம்பிய சமயம், பட்டத்தரசி பாண்டியன்

செல்வியிடமே தன் மனக் குமுறலை வெளியிட வேண்டிய நெருக்கடி ஏற்படுகிறது. "...இன்னமும் சிவகாமியை நான் மறந்துவிட வில்லை. மறக்கவும் முடியவில்லை!..." எனத் தன் மனத்தைக் கீறி உணர்ச்சியைக் கொட்டுகிருன் மாமல்லன்! காதலின் சக்தி அது.

அந்தக் காலத்து அரசர்கள் நாட்டின் நன்மைக்காக என்று சொல்லிக் கொண்டு, எத்தனையோ அரசகுல மாதரை மணம் செய்து கொள்வார்களாம்! மகேந்திர வர்மனுக்குக் கூட மனைவியர் மூவர் இருந்தனராம்! புலிகேசிக்கோ ஆறு மனைவியர்! அப்படிப்பட்ட ஒரு காலத்தில் மாமல்லனை ஏக பத்தினி நாயகனாக நிலைநிறுத்த முயன்றிருக்கிருர் ஆசிரியர். சிவகாமி தன் காதலைத் தியாகம் செய்து இறைவனுக்கே தன்னைக் காணிக்கையாக்கிக் கொண்டதன் மூலம் மாமல் லனைப் பாண்டிய ராஜகுமாரியுடன் ஏகபத்தினி நாயகனாக வாழ விடுகிருள் என்பதுபோலக் கதையை முடித்திருக் கிருர்.

காதலில் தோல்வி கண்டாலும் வீரத்தில் மாபெரும் வெற்றிகண்டவன் மாமல்லன்.

"யானைக் கூட்டத்துக்குச் சிங்கம் போன்றவனும் நரசிங்கப் பெருமானை ஒத்தவனும் வணங்காமுடி மன்னர் மகுடத்தின் மேல் இருக்கும் சூடாமணியைப் போன்ற வனுமான நரசிம்மவர்மன் வெற்றி என்னும் பதத்தைப் புலிகேசியின் முதுகாகிய பட்டயத்தின்மேல் எழுதினான்" என்று கூரப் பட்டயத்தில் குறிக்கப்பட்டுள்ளதுபோல், வாதாபி வெற்றியில் மாமல்லனின் வீரம் கொடிகட்டிப் பறக்கிறது.

தளபதி பரஞ்சோதியின் பாத்திரம் நாவல் முழுவதிலும் நன்கு பளிச்சிடுகிறது. நான்கு பாகங்களாக வகுக்கப் பெற்றுள்ள இந்நாவலின் முதற் பாகத்துக்கே "பரஞ்சோதி யாத்திரை" என மகுடம் சூட்டியுள்ளார் ஆசிரியர்.

மதம் கொண்ட யானைமீது வேல் எறிந்து சிவகாமியை யும் ஆயனரையும் காப்பாற்றிய வீர இளைஞனாக அறிமுக மாகும் பரஞ்சோதி, ஒருவேளை சிவகாமியின் காதலனாகி விடுவானோ என்று ஐயுறும் அளவுக்கு வாசகர்களின் ஆவலைத் துண்டிவிடுகிறார் ஆசிரியர். பின்னர் பதினாலாவது அத்தியாய மான தாமரைக் குளக் காட்சியிலேதான் சிவகாமியின் உண்மைக் காதலன் இளவரசன் மாமல்லனே என்பது உறுதி யாகிறது. இந்த வீரன் பரஞ்சோதி இன்னல்களை யெல்லாம் தாண்டித் தளபதி உயர்வு பெற்று, இறுதியில் வாதாபியை அழிப்பதுவரை மாமல்லரின் உயிர்த் தோழனாக இருந்து துணை புரிகிறான். வாதாபி வெற்றியில் இவன் கண்டெடுத்த கணபதி சிலையும், சிவகாமியின் கருணைஒலையும் இவனுடைய ஞானக் கண்களைத் திறந்து விடுகின்றன. இதன் காரணமாக, பரஞ்சோதி போர் வெறியைத் துறந்து சிறுத் தொண்ட ராகத் துறவு நிலை பெறுவது பொருத்தமாகச் சித்திரிக்கப் பட்டுள்ளது.

சாளுக்கிய வேந்தன் புலிகேசி கலாரசனை யற்றவன், நெஞ்சழுத்தம் கொண்டவன் என்றெல்லாம் நிலைநாட்ட முற்படும் ஆசிரியர், அவனது போர்த் திறமையையும் படை பலத்தையும் தக்கவாறு மதிப்பிடத் தவறவில்லை. தென்னகம் நோக்கிப் படையெடுத்த புலிகேசி கொள்ளிடத்தின் குறுக்கே யானைகளை நிறுத்திப் பாலம் அமைத்து, ஆற்றைக் கடந்து பாண்டியனைச் சந்தித்தான் என ''யானைப் பாலம்'' என்னும் அத்தியாயத்தில் வர்ணிக்கப்படும் கற்பனையழகு வியக்கத் தக்கது.

சிவகாமி, ஆயனச் சிற்பி, நாகநந்தி அடிகள் முதலான கற்பனைப் படைப்புகளின் கட்டுக் கோப்பு உண்மையில் இது நடந்த வரலாறுதானோ என்று நம்பும்படியாகச் சுவை தருகின்றது.

சிவகாமி அழகு மயில்; ஆடற் கலையரசி; எத்தனையோ இன்னல்களிலும் எதிர் நீச்சல் போட்டு உத்தமப் பெண்ணின்

பெருமையை நிலைநாட்டிய கலைச் செல்வி; மாமல்லனை மறந்து விடும்படி மன்றாடிய மகேந்திரச் சக்கரவர்த்தியையும் வென்றோங்கி நின்றது அவளது மன உறுதி. பாரசீகத் தூதர் முன்னால் நடனம் ஆட முடியாது என்று புலிகேசியையே எதிர்க்கத் துணிந்தது அவளது தன்மானம்; சாட்டையடி படும் தமிழ் நாட்டு அபலைகளைக் காப்பாற்றுவதற்காக நாற் சந்தியில் நடனமாடவும் துணிந்தது அவளது தமிழ் மானம்!

''மாசிலாக் கலையைப் பழித்த புலிகேசி சாகவேண்டும்; வாதாபி நகரம் தீயில் வேகவேண்டும்'' என்றது அவளது வஞ்சினம்! போரினால் விளைந்த அழிவைக் கண்டதும், ''இனி யாவது இரத்த வெள்ளம் பெருகுவது நிற்கட்டும்!'' எனத் தளபதி பரஞ்சோதிக்கு மடல் அனுப்பியது அவளது அருள் மனம்.

'சிவகாமி கலைத் தெய்வம்' என நயவஞ்சகன் நாக நந்தியே நாவாரக் கூறச் செய்துள்ளார் ஆசிரியர். ''சிவகாமி மனிதப் பிறவிக்குரிய அற்ப சுகங்களில் காலங்கழிக்கப் பிறந்தவளல்லள்; தெய்வீகக் கலைச் செல்வி அவள்'' என் றெல்லாம் மகேந்திரரின் வாய்மொழியாலும் அப்பர் சுவாமி களின் வாக்காலும் வலியுறுத்திப் பாத்திரப்பண்பை உயர்த்தி யுள்ளார் கல்கி. ''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்'' என்ற தேவாரப் பாடலைத் திருநாவுக்கரசர் சிவகாமிக் காகவே இயற்றினாரோ என்றுகூட எண்ணத் தோன்று கின்றது. ஆசாபாசங்களையும் அல்லல்களையும் வென்று இறுதி யில், ''தலைப்பட்டாள் நங்கை தலைவன்தாளே!'' என்று முத்தாய்ப்பு வைத்துப் பாத்திரப் பண்பை நிறைவு செய்திருப் பது நாவலுக்கும் முழுமை தருகிறது.

ஆயனச் சிற்பியின் மூலம் மாமல்லபுரத்தை உருவாக்கிய மகா சிற்பிக்கு ஒரு பெயரையும் வடிவத்தையும் கொடுத்து விட்டார் கல்கி. 'அஜந்தா வர்ண ரகசியம்' என்ற மாயச் சொற்களின் பேரில் அப்பாவி ஆயனரை ஆட்டிப் படைத்த நாகநந்தி அடிகளின் நயவஞ்சகத் திருவிளையாடல்கள் ஆசிரி யரின் சிந்தனை சக்தியைப் புலப்படுத்துகின்றன.

மூலிகைகளின் உதவிஞல் உடம்பினை வஜ்ரமாக்கி, அதி மானுட நச்சுச் சக்தியை ஏற்றிக் கொண்ட நாகநந்தி இறுதிக் கட்டத்தில் சிவகாமியுடன் வாழவேண்டும் என்ற ஆசையிஞல் உந்தப்பட்டு, மீண்டும் தன் உடலைச் சாதாரண மனித நிலைக்குக் கொண்டுவந்தான் என்ற கற்பனை மிகமிக நுட்பமானது. ''சிவகாமி மீது எனக்கு ஆசையில்லை! அவளது கலையின்மீதுதான் காதல்'' என்றெல்லாம் கூறிவந்த புத்த பிக்ஷுவின் மனத்திலேயே கலையார்வம் வற்றிக் காதல் வேகம் பற்றியதால்தான் அவனுக்கு அழிவுகாலம் வந்தது என்பது பொருத்தமான முடிவு என்பதில் ஐயமில்லை.

சிவகாமியின் சபதத்தை மாமல்லர் நிறைவேற்றுவதற்குள் ஒன்பது ஆண்டுகள் ஓடி விடுகின்றன. இந்த நீண்ட நெடுங்காலத்தில், வாதாபியில் தனித்திருந்த சிவகாமியின் நிலைபற்றித் தொடர்பான விளக்கம் இல்லை. ஏற்கெனவே அவள் அடைந்த அல்லல்களே போதும். ஆதலால் 'சிறையிருந்த சிவகாமி'யின் ஒன்பது ஆண்டுத் துன்பங்களை ஆசிரியர் வர்ணித்திருந்தால் வாசகர்களின் நெஞ்சம் தாங்க முடியாமற் கூடப் போகலாம் அல்லவா?

காஞ்சிக் கோட்டை, வடபெண்ணைப் பாசறை, சிற்பக் கூடம், தாமரைக் குளம், மல்லைத் துறைமுகம், திருப்பாற் கடல் ஏரி உடைப்பு, பானைத் தெப்பம், அஜந்தா குகை முதலான வர்ணனைகளெல்லாம் வளமான தமிழ்ச் சொல் லோவியங்களாக மனத்தைக் கவர்கின்றன.

209 அத்தியாயங்கள் கொண்ட மாபெரும் நாவலான 'சிவகாமியின் சபத'த்தைக் கையில் ஏந்திப் படிக்கத் தொடங்கிஞல் கீழே வைக்கவே மனம் வராது. எத்தனை தடவை படித்தாலும் தித்திக்கும் கதைச் சுவை ததும்பும் காவியம் போன்றது 'சிவகாமியின் சபதம்'.

தமிழ் நாட்டிற்கும் தமிழ் இலக்கியத்திற்கும் பெருமை தரும் தனிச்சிறப்பு வாய்ந்த இந்த வரலாற்று நாவலும், இதில் உலவும் பாத்திரங்களும் மாமல்லபுரச் சிற்பங்களைப்

போலவே காலத்தை வென்று, 'கல்கி' அவர்களின் புகழைப் பரப்பும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

நாடகமாகவும், நாட்டிய நாடகமாகவும் கலைமேடை களில் வெற்றிபெறச் 'சிவகாமியின் சபத'த்திற்குப் புது உருவம் கொடுக்கும் பேறு பெற்றவன் யான். எனவே, இந்த வரலாற்று நவீனத்தின் பெருமையை நன்கு உணர்ந்து மதிப் பிடும் பெருமையும் கிடைத்தது.

சாண்டில்யனின்
# கன்னி மாடம்

---

' ஆர்வி '

'கன்னிமாடம்' என்ற சரித்திர நாவலைப்பற்றிப் பேசுவதில் எனக்கு ஒரு விதத்தில் மகிழ்ச்சி உண்டாகிறது. காரணம், இதை எழுதிய ஆசிரியர் திரு. சாண்டில்யன் என் பெருமதிப்புக்குரிய நண்பர். கிட்டத்தட்ட கால் நூற்றுண்டுக் காலமாக நாங்கள் உண்மையான நேயத்தோடு பழகி வருகிறோம். இன்றுள்ள இந்தத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தோன்றுவதற்கு நாங்கள் இருவரும் மூலகாரணமாக இருந்தோம். இலக்கியத்தைச் செழிப்புள்ளதாகச் செய்யவும் இலக்கியாசிரியர்களின் நலன்களை ஆராய்ந்து பாதுகாக்கவும் இப்படி ஒரு சங்கம் பரந்த மனப்பான்மையுடன் அமைய வேண்டும் என்று நாங்கள் பல எழுத்தாளர்களை நேரில் சென்று சந்தித்து, முகவரிகளைச் சேகரித்து, கூட்டங்கள் போட்டு இந்தச் சங்கம் வலுவாக அமைவதற்கான விதிமுறைகளை வகுக்கும் பல பணிகளைச் செய்தோம்.

எதற்காக இதைக் குறிப்பிடுகிறேன் என்றால் எழுத்து, எழுத்தாளர் நலன் ஆகிய விஷயங்களில் எங்கள் லட்சியம் ஒரே மாதிரியாக இருந்து வந்திருக்கிறது என்பதைக் குறிப்பிடத்தான். நாவல் விழா என்று ஏற்படுத்தி, அதில் '0

எழுத்தாளர்களுடைய படைப்புக்களைப் பற்றிப் பல எழுத்தாளர்கள் முன்னிலையில் பேசுவது என்றால், அதைவிட மகிழ்ச்சிதரக்கூடியது வேறு என்ன இருக்கிறது? இந்த வாய்ப்புத் தந்ததற்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

''பொதுவாகச் சரித்திர நாவல்கள் பெரும்பாலும் சரித்திரக் குப்பைகளாகத்தான் இருக்கின்றன'' என்று மதிப்பு வாய்ந்த இலக்கியவாதி ஒருவர் ஒரு சமயம் குறிப்பிட்டார். அதில் சரித்திரமும் இல்லை; நாவலுக்குரிய அம்சமும் இல்லை என்பதே அவருடைய குற்றச்சாட்டு. நான் அறிந்த வரையில் எழுத்தாளர்களில் பலருக்கும் இதே அபிப்பிராயம் இருக்கிறது. சரித்திர நாவல் என்கிற பெயரில் நம்முடைய நாட்டையும் அரசர்களையும் வைத்துக் கொண்டு, ஊர்களையும் பேர்களையும் வைத்துக்கொண்டு வேறு நாட்டுச் சரித்திர நவீனங்களின் சிதைவுகளே வெளி வருகின்றன என்று அந்த இலக்கியவாதி கருதுகிறார். அலெக்சாண்டர் டூமாஸும், ரெயினல்ட்ஸும், ஸ்காட்டும், ரபேல் சரிடினியும் எழுதிய பகுதிகளே சக்கையும் மொக்கையுமாக இவற்றில் கலந்திருக்கின்றன. நம்முடைய நாட்டின் உண்மையான சரித்திர நிகழ்ச்சிகளையும் உணர்ச்சிகளையும் ஆதாரமாகக் கொண்ட நாவல்கள் மிகவும் அரிதாயிருக்கின்றன. நம்முடைய வரலாற்றுக் கால வாழ்க்கை முறைகள், பண்புகள், கலாசாரங்கள், சிந்தனைத் துறைகள், சமய உணர்ச்சிகள், சான்றுகள் கொண்ட கற்பனைகளை இந்த மாதிரியான நாவல்களில் காண முடிவதில்லை. வீரமும் தியாக உணர்ச்சிகளும் கேலிக் கூத்தாக வருகின்றன. நிகழ்ச்சிகளோ தெருக்கூத்துக் காட்சிகளாக அமைக்கப்பட்டிருக்கின்றன. பாத்திரங்களும் தெருக்கூத்துகளில் வரும் ராஜா ராணிகள்தான், அட்டைக் கத்தி வீரர்கள்தான். மக்குப் புலவர்கள், சிவனடியார்கள், ஆழ்வான்கள், யவனர்கள் இப்படிப்பட்டவர்கள் வராத நாவல்களே மிகவும் சொற்பம் தான். இங்கிலாந்தும் பிரான்சும் இங்கே தமிழ்நாடும் இலங்

கையுமாக வருகின்றன. அங்கே கார்டினல் ஒருவர் வந்தால் இங்கே சிவனடியார் ஒருவர் வருவார். காலம், இடம், பொருத்தம் பாராமல் நினைத்த இடங்களில் தோன்றுவார். அங்கே மாங்க் ஒருவர் வந்தால் இங்கே சாமியார் ஒருவர் வருவார். அங்கே சர்ச்சு வந்தால் இங்கே ஒரு புத்த விஹாரம் வரும்; சமணப் பள்ளி வரும்; அல்லது காளி கோயிலாவது வரும். அங்கே நடந்த நிகழ்ச்சிகளுக்கு ஏற்ற நிகழ்ச்சிகளை, தமிழ் நாட்டு வரலாற்றில் எந்த இடத்தில் நுழைக்கலாம் என்றுதான் பெரும்பாலான ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றனவோ என்றுகூடத் தோன்றும். செப்பேடுகளையும் சிலர் சாஸனங்களையும் பட்டயங்களையும் பொருத்துவதற்கு வாய்ப்பாக, உடுக்குறியிட்டு, சரித்திர ஆராய்ச்சிப் புலமையைக் காட்ட வசதியாகப் பாண்டியர் காலம் தேவலையா, பிற்காலச் சோழர் காலம் தேவலையா, இருண்ட காலம் என்று போட்டுவிட்டால் அது எத்தனை பொருத்தமாக இருக்கும் என்ற ஆராய்ச்சிகளே இங்கே பெரும்பாலான நாவல்களுக்குத் தேவையாக இருக்கின்றன. ராஜாக்களை உருவாக்குவது மிகவும் சுலபமானதாகி விட்டது. வெறும் சோதாக்களாக அவர்கள், கண்ட நேரத்தில், கண்ட இடத்தில், கண்ட காரியத்துக்கெல்லாம் போகிறார்கள். அப்புறம் அவர்களே அரியணையிலும் வந்து உட்கார்ந்து, அரியணைக்கு ஏற்காத வறட்டுப் பெருமைகளையும் புளி சுருட்டுக்களையும் தேர்தல் கூட்டத்தில் பேசுவதுபோல் பேசுகிறார்கள்.

இதெல்லாம் அந்த இலக்கியவாதி கூறுகிற வாதம். அவருடைய கூற்றை ஏற்றுப் பேசவோ மறுத்துப் பேசவோ நான் இங்கே வரவில்லை. கன்னி மாடம் என்ற சரித்திர நாவலைப் பற்றிப் பேசுவது ஒன்றுதான் என் வேலை.

கன்னி மாடம் என்ற இந்த நாவல் பிரபலமான தமிழ்ப் பத்திரிகை ஒன்றில் தொடர்கதையாக வெளிவந்ததை நாம் அறிவோம். லட்சக் கணக்கான வாசகர்கள் இதைப் படித்துப் பெரிதும் ரசித்திருக்கிறார்கள். இந்த நாவலை எழுதிய

ஆசிரியரை நேரில் பார்க்க வேண்டும் என்று துடித்தவர்கள் பலர் உண்டு. நானே பார்த்திருக்கிறேன். 'இவரா சாண்டில்யன்?' என்று ஓடோடி வந்து பார்த்துவிட்டுத் திகைத்தவர்கள் எத்தனையோ பேர். அவ்வளவு பிரபலமடைந்துள்ள சாண்டில்யனுடைய இந்த நாவலை நான் விமர்சனம் செய்ய வருவது சற்றுப் பொருந்தாதோ என்று முதலில் பயந்தேன்.

இலக்கியத்தில் குற்றம் குறைகளை அடுக்கிச் சொல்வது மட்டும் விமரிசனம் ஆகாது. அதன் நிறைவுகளையும் சிறப்புக்களையும் மனம்விட்டுப் பார்த்துத் தெரியவைப்பதும் விமரிசனத்தின் நோக்கமாகும், ரஸாநுபவம்தான் முக்கியம். Enjoyment என்கிறோமே அது. இன்பம் துய்ப்பதற்காகத் தான் இலக்கியம் படிக்கிறோம். குற்றம் குறை கண்டு பிடிப்பதற்காக மட்டும் நாவலைப் படிப்பது கூடவே கூடாது. நாவலில் என்ன, நாவலின் மூலப் பதிப்பான வாழ்க்கையில் கூடத்தான் எத்தனையோ குற்றம் குறைகள்.

எழுத்தாளன் பெரிதும் கற்பனை உலகில் சஞ்சரிப்பவன். இளகிய மனம் படைத்தவன். எதிலும் சட்டென்று வசப்பட்டு ஈடுபட்டு விடுவான். அவனுக்குச் சில பலவீனங்கள், சபலங்கள் வேறு உண்டு. ஆனால் எழுத்து என்று வருகிற போது அவன் தன் சிறுமைகளையோ பலவீனத்தையோ கூட விட்டு வைக்காமல், மனித சமுதாயத்தின் நலனுக்காகப் பணயம் வைத்துப் பலியிட்டுவிடத் தயங்கமாட்டான். அவனுடைய கலையுணர்வு இந்தச் சிறுமைகளை விலகி நின்று பார்த்து, உண்மை அழகும் வண்ணமும் பயனும் விளக்க வல்ல ஒரு கலைப் பொருளாக மாற்றத் தயங்குவதில்லை.

இந்த உண்மையை நம்முடைய தமிழ்நாட்டு விமரிசகர்களில் சிலர் மறந்து விடுகிறார்கள். சிலருக்கு இந்த உண்மை படுவதேயில்லை. படைப்பு இலக்கியம் செய்து தோற்றுப் போய் விமரிசனம் செய்ய வருகிறவர்களுடைய உள்ளத்தில் பரிவும் சந்தர்ப்பச் சூழ்நிலையைப் பார்க்கிற பக்குவமும்

இருப்பதற்கில்லை. கசப்பும் எரிச்சலுமே உள்ளத்தில் நிறைந்தவர்களுக்கு ரஸானுபவத்துக்குத்தான் முதலிடம் என்றால் ஏருது.

ஆகவே கன்னி மாடத்தின் வெற்றிக்கு அல்லது, நாவல் என்ற அளவில் அதற்குரிய மதிப்புக்கு, இடத்துக்கு, அதை ஆசிரியர் எப்படி உருவாக்கியிருக்கிறார் என்று பார்க்கவே முதலில் நான் விரும்புகிறேன்.

கி.பி. பன்னிரண்டாவது நூற்றாண்டின் பிற்பகுதியில், ஈழமும் சோழவள நாடும் பாண்டிய நாட்டின் அரசியலில் தலையிட்டு நின்ற காலத்தில் அமைந்திருக்கிறது கதை.

அப்போது பாண்டிய நாடு இரண்டாகப் பிரிந்து நின்றது. குலசேகரப் பாண்டியன் என்பவன் நெல்லையிலும் பராக்கிரம பாண்டியன் என்பவன் மதுரையிலுமாக அரசு புரிந்து வந்தார்கள். இருவரும் தாயாதிகள். இவர்களுக்குள் மனஸ்தாபம் ஏற்படவே, குலசேகரன், பராக்கிரம பாண்டியன்மீது படையெடுத்து வந்தான். பெயர்தான் பராக்கிரம பாண்டியனே ஒழிய, அவன் உதவிக்கு ஈழத்து அரசனை அழைத்தான். ஈழத்து அரசனும் பராக்கிரம பாகு இலங்காபுரத் தண்டநாயகன் தலைமையில் ஒரு பெரும் படையை மதுரைக்கு அனுப்பி வைத்தான். அதற்குள் பராக்கிரம பாண்டியன் தலை போய்விட்டது. ஆனால் அவன் மகன் வீர பாண்டியனை அரியணையில் அமர்த்தி விடுகிறான் அந்த இலங்காபுரத் தண்ட நாயகன். குலசேகரன் மதுரையைவிட்டு ஓடிவிட்டான். வீர பாண்டியன் இலங்காபுரத் தண்ட நாயகனுக்குக் கைப் பொம்மையாக விளங்குகிறான். இலங்காபுரன் பாண்டிய நாட்டைச் சிங்களத்தின் ஒரு பகுதியாக்கிவிடத் திட்டம் போட்டு, சிங்கள நாணயத்தைப் புகுத்தி, பல வகையிலும் தமிழர்களை ஓங்க விடாதபடி செய்து வந்தான். இதற்கு இலங்காபுரனுடைய தங்கை மகள் மாதவி என்னும் பெண் உதவியாக

இருக்கிறாள். அந்தச் சிங்களத்துப் பைங்கிளி இளம் அரசன் வீர பாண்டியனை மயக்கும் விழிகளாலும் மொழிகளாலும் கோழையாக ஆட்டி வைக்கிறாள்.

குலசேகரப் பாண்டியன் சோழ அரசனுடைய உதவியை நாடினான். தமிழ் நாட்டில் வேரூன்றிவரும் சிங்களத்துச் செல்வாக்கை ஒடுக்க, பேரமைச்சர் பல்லவராயர் வருகிறார். அவர் கிழவர். மகா பெரிய ராஜதந்திரி. அவர் பாண்டிய எல்லையைக் கவனித்து வருகிறார். அந்த எல்லையில் மழவ ராயன் என்ற சிற்றரசனையும் அவனுக்கு ஒரு சிற்றரசையும் நிறுவியிருந்தான் இலங்காபுரன், இந்த மழவராயனைத் தன் பக்கம் இழுத்துக்கொள்ள, குலசேகரன் முயன்று வந் தான். அந்தக் கிழவர் அதாவது சோழப் பேரமைச்சர் தமிழ் நாட்டில் சிங்களத்துப் பலத்தை ஒடுக்க இவர்களைக் கைக்குள் போட்டுக் கொள்ளத் தயாராக இருந்தார். இதற்கு நடுவே பாண்டியனுடைய சேனாதிபதியான அபரா ஜிதனுக்கும் மழவராயன் மகள் கார்குழலிக்கும் சந்திப்பு நிகழ்ந்து அது அன்பாக வளர்கிறது. பாண்டிய சேனாதிபதி தன்னுடைய இணையற்ற வீரத்தாலும் மக்களுடைய ஆதர வாலும் இலங்காபுரனைத் தடுத்து அவனுக்கு உதவியாக ஈழத்திலிருந்து வந்த மற்றொரு தண்ட நாயகனான ஜகத் விஜயனையும் சிறைப் பிடித்து, பாண்டிய அரசைக் குலசேகர பாண்டியனிடமே ஒப்படைக்க உதவுகிறான். சோழப் பேரமைச்சர் இந்தச் சமயம் பார்த்து உள்ளே புகுந்தவர் தம் முடைய பெரும் படையை, பாண்டிய நாட்டைக் கண் காணிக்க அங்கே நிறுத்தி வைத்து விடுகிறார். சிங்களத்துப் பலம் அழிந்து, சோழருடைய ஆதிக்கத்தில் பாண்டிய அரசு நடக்கிறது. அபராஜிதனுக்கும் கார்குழலிக்கும் கல்யாணம் நடக்கிறது. இந்தச் சண்டையின் பயனாக அவள் அடைந்த பயன் தந்தையை இழந்ததும் சிற்றரசுப் பதவியை இழந்த தும்தான். இவ்வளவுதான் கதை. அபராஜிதன், கார் குழலி, மாதவி, அடிகளார் இவர்கள் எல்லாரும் கற்பனைப் பாத்திரங்கள். மற்றவர்கள் பெயர்கள் சரித்திரத்தில் காணப்

படுகிறவை. சரித்திரத்தில் இப்படி ஒரு கற்பனையை ஓட்டி, கதையை நிகழ்த்தியிருக்கிறார் ஆசிரியர்.

இதை 62 அத்தியாயங்களாக, 615 பக்கங்கள் வரும்படியாக எழுதி வெற்றி கண்டிருக்கிறார் சாண்டில்யன். 62 அத்தியாயங்களை 61 திகைப்பூட்டும் காட்சியோடு முடித்திருக்கிற சாமர்த்தியம் இருக்கிறதே அதை எப்படி மெச்சுவது என்று எனக்குத் தெரியவில்லை.

சரித்திர நாவல்களை இத்தனை லட்சம் பேர் படித்துவிட்டார்கள் என்று சொல்லி மதிப்பிட வந்தால் அதன் உண்மையான தகுதியை அளந்து விட்டதாகாது. சரித்திர நாவல்கள் பெரும்பாலும் பத்திரிகைகளின் தேவையை முன்னிட்டுத் தான் தொடர்கதைகளாக எழுதப் படுகின்றன. தொடர் கதைகள்தான் பத்திரிகைகளின் ஜீவநாடி. இலக்கியத்தை மன உல்லாசத்துக்காகவும் ஆனந்தத்துக்காகவும் இலக்கிய இன்பத்தில் காணும் அமைதிக்காகவும் படிக்கிறவர்கள் தொகை மிகவும் சொற்பம். குத்து, கொலை, காதல் ஏமாற்றம், நடிக நடிகைகளின் அந்தரங்க விவகாரங்கள் ஆகியவற்றை அக்கப்போராகப் படித்துப் பொழுது போக்க விரும்புகிறவர்களுக்கு மனவெழுச்சி, கிளர்ச்சி, திகைப்பு இவைதான் தேவையானவை.

இலக்கிய அருவியில் திளைக்கச் செய்து இதமான இன்பத்தை வழங்கவல்ல கதைப் பகுதிகள்கூட தொடர் கதையாக வரும்போது வேறு உருக்கொண்டு விடுகின்றன.

தொடர் கதையாகப் படித்துக்கொண்டு வருகிற வாசகர்கள், 'கொண்டா கொண்டா, அடுத்த வாரம் எப்போது வரப்போகிறது? கொண்டுவா பத்திரிகையை' என்று எதிர்பார்க்கும் ஆவலை உண்டாக்கி, ஒவ்வொரு அத்தியாயத்தையும் முடித்திருக்கிறார் ஆசிரியர். வாசகர்களின் வெறியை வாரா வாரம் திருப்திப்படுத்தி யாகவேண்டிய அவசியம் இவரை அப்படிப் பிடித்துக்கொண்டு விட்டதோ, என்னவோ !

ஆவலை எழுப்புகிற இந்த உத்தியும் பாணியும் எல்லாருக்குமே பலித்துவிடுவதில்லை. எத்தனையோ சரித்திர நாவலாசிரியர்கள் இந்த உத்தியைக் கையாள முடியாமல் பல்டியடித்திருக்கிறார்கள். அவர்கள் ஏற்படுத்த நினைத்த ஆவலுக்குப் பதில் ஆத்திரத்தைக் கொடுத்து, நாவலையே 'போர்' என்று தூக்கிப் போட்டுவிட்டுப் போகும்படி விழுந்திருக்கிறார்கள். ஆனால், சாண்டில்யன் அப்படி அலுத்துப் போகும்படி இந்த உத்தியை நலிய விடாமல், வாரா வாரம் ஆவல் தீனி போடுகிற வேலையைக் கச்சிதமாகக் கையாண்டிருக்கிறார்; வெற்றியும் கண்டிருக்கிறார்.

காரணம் அவர் கதையை நேராகத் தொடங்கி நேராகச் சொல்லிக்கொண்டு போவதுதான் என்று நான் நினைக்கிறேன். உத்திகளில் சிறந்தது நேராகச் சொல்லிக் கொண்டு போவதுதான். Straight Telling என்கிறார்களே, அது ஒன்றும் அத்தனை எளிதான வேலையல்ல. பிளாஷ் பாக்கையோ அல்லது பாத்திரங்களே கதை சொல்வது போன்ற உத்திகளையோ பாணியையோ கொண்டு கதையை எளிதாக நடத்திக்கொண்டு போய்விடலாம். ஆனால் முன்னால் நிகழ்ந்தது, பின்னால் நிகழ்ந்தது என்று குழப்பாமல் கதையைத் தொடங்கியது முதல் நேராகச் சொல்லிக் கொண்டு போவதுதான் கடினம். வாசகர்களைக் கதை வலு இல்லாமல் தொடர்ந்து படிக்கச் செய்ய முடியாது. நேராகச் சொல்கிற பாணியில் மேலே மேலே நிகழ்ச்சிகளும் காட்சிகளும் வந்துகொண்டேயிருக்க வேண்டும். அப்படி இவர் ஏதோ ஒன்றைச் சொல்லி, வாசகர்களைக் கவர்ந்து விடுகிறார்.

சாண்டில்யன் கதையைச் சொல்லச் சரித்திர ஆதாரங்களை எந்த இடத்திலும் அதிகமாக எதிர்பார்க்கவில்லை. சிங்களத்துத் தண்டநாயகர்கள் தலையோடு அவர்கள் செல்வாக்கு அழிந்து, பாண்டியன் அரசு கட்டில் ஏறியதும் சோழர்கள் மேலாதிக்கம் பாண்டிய நாட்டில் தோன்றியதும் தான் சரித்திர நிகழ்ச்சி. அதைச் சுற்றி முழுக்க முழுக்கக்

கற்பனையான நிகழ்ச்சிகளை உருவாக்கி, கற்பனைப் பாத்திரங்களைப் படைத்து, கதையைப் பின்னிக்கொண்டு செல்வது அவருடைய திறமையைக் காட்டுகிறது. அந்தச் சரித்திர உண்மையை ஒட்டி ஒரு கற்பனைக் கதை. சரித்திரம் வெறும் எலும்பு என்றால் சரித்திர நாவல் அதற்குச் சதையும் ரத்தமும் போல. மழவராயன் மகள் ஒரு கன்னிமாடத்தில் வசிக்கிறாள். அதனாலேயே ஆசிரியர் இந்த நாவலுக்கு அந்தப் பெயரைச் சூட்டியிருக்கிறார்.

எதையும் கவர்ச்சியாகக் காட்டுவதில் ஆசிரியர் விழிப்போடு இருப்பதை வாசகர்கள் காணலாம். அந்தக் கவர்ச்சியில் மயங்கும் வாசகர்களுக்குக் குற்றம் குறைகளை நின்று நிதானித்துப் பார்க்க நேரம் இல்லை. ஒவ்வோர் அத்தியாயத்தின் முடிவிலும் உள்ள திருப்பம் அவர்களைத் திகைக்க வைத்து அவர்களுடைய கவனத்தையெல்லாம் வேறு எங்கேயோ இழுத்துச் சென்று விடுகிறது.

12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழ் நாட்டு மக்களின் நிலை என்ன, அவர்களுடைய வாழ்க்கையும் குறிக்கோளும் என்ன, அவர்களுடைய உணர்ச்சிகள், சிந்தனைகள், நாகரிகம் எல்லாம் எப்படி இருந்தன; அந்தச் சமுதாயத்தில் தோன்றிய அல்லது எதிர்ப்பட்ட பிரச்னைகள் எவை, எதிர்காலச் சமுதாயத்தை எப்படி அவை பாதித்தன என்றெல்லாம் நின்று பார்க்க அவசியமே இல்லாதபடி கதை நிகழ்ச்சிகளை உருவாக்கி அதைத் தொடர்ந்தே வாசகர்களை அழைத்துச் சென்று விடுகிறது நவீனம்.

கதையின் காட்சிகளையும் ஆசிரியர் வண்ண எழிலோடு உருவாக்குவதில் கவனம் செலுத்தியிருக்கிறார். உதாரணமாக வங்கார முத்தரையனுடைய தலையையும் நிஷதராசனுடைய தலையையும் நீதி விசாரணையின்றிக் கொய்து, கழுகுகள் கொத்தித் தின்னும்படி கம்பத்திலே கோட்டை வாசலில் செருகி வைத்திருந்த காட்சியைச் சொல்லலாம்.

இன்னொரு இடம் மேலைமங்கலத்து எல்லையில் இலங்கா புரனைக் கூடாரத்தில் அபராஜிதன் சந்தித்த காட்சியைச் சொல்லலாம். அபராஜிதன் நாடு கடத்தப்பட்ட உத்தர வோடு தன் மஞ்சத்தில் படுத்திருக்கும் நேரத்தில், அவ னுடன் சரசமாடி அரசியல் நோக்கத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வருகிற மாதவியின் கோலத்தைச் சொல்லலாம். இப்படி இன்னும் சில காட்சிகளை ஆசிரியர் உருவாக்கிக் காட்டியிருப்பது வாசகர்களைப் பெரிதும் கவரக்கூடிய அம்ச மாகும். சிவனடியார் ஒருவரை, கோழையான வீர பாண்டியன் கிட்டிகட்டச் செய்து, அவர் வாயிலிருந்து உண்மையை வரவழைக்கிற இடம்கூட வாசகர்களைப் பிர மிக்க வைக்கிற கட்டம்தான்.

உண்மைபோல ஆசிரியர் கதாபாத்திரங்களின் உள்ளங் களிலே தோன்றும் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் சொல்லிச் சென்று, அவற்றை வாசகர்கள் நம்பும்படி செய்ய முனைகிறாரே, அதில்தான் அவருக்குள்ள சாமர்த்தியம் இருக்கிறது.

பார்க்கப் போனால் சாதாரண கதை. இலக்கியச் செறிவோ, பண்புகளோ, பயனோ இல்லாத உருவம். ஆயி னும் எழிலும் வண்ணமும் கலந்து ஒரு முழுமையை உண்டாக்கியிருக்கிறார் சாண்டில்யன்.

பொழுது போக்குக்காகத்தான் இலக்கியம். என்றாலும் அது அத்துடன் நின்றுவிடுவதில்லை. மனித குலம் பழமை யின் அனுபவங்களுக்குமேல் ஒரு புதுமையை, நன்மை பயக்கும் முன்னேற்றத்தை உருவாக்க உதவுகிறது இலக் கியம். புதிய சமுதாயத்தை உருவாக்கச் சரித்திர நாவல் கள் நமக்கு அறிவுக் கருவூலங்களை வழங்கவேண்டும். நேற்றிலிருந்து இன்று தோன்றிய நாம் நாளை இருப்பதற் கான அஸ்திவாரத்தை அமைக்க உதவுகிறது சரித்திர நாவல். ஆனால் இந்த நோக்கம் இப்பொழுது வெளிவருகிற சரித்திர நவீனங்களின் மூலம் ஈடேறுகிறதா என்பதே

கேள்வி. நாம் மீண்டும் அந்தப் பழங்காலத்துக்குச் செல்ல விழைகிறோமா, அந்தக் காலத்து முடியரசர் வாழ்வை மீண்டும் நிலைநாட்ட விரும்புகிறோமா, அந்தக் காலத்து அரசியல், சமயம், கலை, இலக்கியம், போர்முறை ஆகிய துறைகளை மீண்டும் புதுப்பிக்க விரும்புகிறோமா? இதுதான் இப்பொழுது எழுகிற கேள்வி.

வாசகர்கள் பெருகுவதற்கும் நிலைப்பதற்கும் பத்திரிகைகளுக்கு விறுவிறுப்பான தொடர் கதைகள் தேவைப்படுகின்றன. வாசகர்களின் ஆவலைத் தூண்டிக் கிளறிவிட்டு, வளர்க்கும் தொடர் கதைகள் தேவையாயிருக்கின்றன என்று சொன்னால் அதைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால், சரித்திர நாவலுக்குள்ள பெருமைகள் அனைத்தையும் இவற்றுக்கு வழங்கி, எழுதியவர்களைப் பேராசிரியர்களாகக் கொண்டாடிப் போற்றி, மற்ற இலக்கிய முயற்சிகளை மட்டம் தட்டும் அளவுக்கு உற்சாகம் காட்டுகிற நிலை வருகிறபோதுதான் நமக்குச் சில உண்மைகள் புதிர்களாகி விடுகின்றன.

சாண்டில்யன் என்றுமே அடக்கமானவர். யாருடைய சரித்திர நவீனமும் இவரளவுக்கு வாசகர்களைக் கொள்ளை வில்லை என்று சொல்லிவிடலாம். மூன்றரை லட்சம் குடும்பங்களுக்கு இவர் எழுதும் தொடர்கதை செல்கிறது. எத்தனை லட்சம் பேர் அதைப் படிப்பார்களோ? அந்தக் கணக்கெல்லாம் போடுவதற்காக நான் இங்கே வரவில்லை. ஆனால், அந்த நிலையிலும் ஒரு சமுதாயப் புரட்சி பண்ணத் தகுந்த நாவல் என்றோ, ஒரு சமுதாயச் சரித்திரத்தை உருவாக்கிக் காட்டி அதிலிருந்து பெறும் படிப்பினைகளைக் கொண்டு வருங்கால சமுதாயத்துக்கு உரம்போட்டு வளப்ப மாக்கும் நவீனம் என்றோ அவர் மார்தட்டிக்கொள்ளவில்லை என்று நினைத்தே இதைக் குறிப்பிடுகிறேன்.

இன்று நாம் 'ஆகா-ஓகோ' என்று கிணற்றுத் தவளைகளைப்போல மார்தட்டிப் பெருமை பேசுகின்ற சில நாவல்

களை இன்னொரு மொழியில், குறிப்பாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பார்த்தால், அப்போது தெரியும் அவற்றின் வண்டவாளங்கள். கன்னிமாடத்துக்கு அந்தப் பயமெல்லாம் இல்லை. ஆயினும் கன்னிமாடத்தைத் தனிப் பெறும் வரலாற்று நவீனம் என்று அழைக்க நான் விரும்ப வில்லை. ஆசிரியர் எப்படி நினைப்பாரோ எனக்குத் தெரி யாது. இந்த வரலாற்றுப் பாசனத்தினுல் கலையோ, பண்பு களோ, அறிவோ, ஆற்றலோ பாய்ந்து நாடும் குலமும் செழித்துவிடும் என்று நான் வாதிட வரவில்லை; நம்பவும் இல்லை. மனித சமுதாயம் செம்மைப் பட்டு, முன்னேறி விந்தை செய்யும் என்றே, உலகில் ஆனந்தமும் அமைதியும் நிலவச் செய்ய உதவும் என்றே நான் கூற வரவும் இல்லை. பொழுது போக்கு, சமுதாயத்தின் தேவை. அதை முற்றி லும் வெற்றிகரமாக வழங்குகிறது இந்தக் கன்னிமாடம் என்றுதான் நான் கருதுகிறேன்.

கடைசியாக இந்த நாவலில் ஆசிரியர் கையாண்டி ருக்கும் நடையைப் பற்றியும் குறிப்பிட வேண்டியது அவசியம்.

இவருக்கு ஒரு தனி நடை. மிகமிக நீளமான வாக்கிய அமைப்பு. இவ்வளவு நீளமான வாக்கியத்தை வாசகர்கள் புரிந்துகொண்டு ரசிக்கிறுர்கள் என்பது வியப்பாகத்தான் இருக்கிறது. புதுமை சேராத பாணியில் பழங்கால நடை யில் எழுதியே இவர் லட்சக்கணக்கான வாசகர்களைக் கவர்ந் திருக்கிறுர் என்றுல், அதில் இவர் புதுமையைப் புகுத்தி, மறுமலர்ச்சித் தமிழை வித்தையாகக் கையாண்டால் ஏது, இவர் எல்லாரையுமே பைத்தியமாக அடித்துவிடுவார் என்று தான் தோன்றுகிறது. அதனுல்தானே என்னவோ ஆண்டவ னுகப் பார்த்து இவரைப் பழைய பாணியிலேயே செல்ல விட்டிருக்கிறுர் போலிருக்கிறது!

வர்ணனைகள், உரையாடல்கள், எல்லாவற்றிலும் புதுமை மணம் வீசாவிட்டாலும், பழகின அரிசி சோறு

வடிக்கச் சுகமாகவும் வாய்க்குச் சுவையாகவும் இருப்பது போல அமைந்திருக்கின்றன.

இலக்கியத்திலே சுவைதான் முக்கியம். ஒன்பது விதச் சுவைகளிலே சிருங்காரச் சுவை தலைமையானது. சிருங்காரம் என்றதுமே முகத்தைச் சுளித்துக்கொள்கிற ஆசார சீலர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்காக நாவல் எழுதப்படுவதில்லை. அவர்கள் நாவல்களைப் படிக்க வராமல் இருப்பதே நல்லது. பாராயண நூல்கள் இருக்கின்றன. படிக்கட்டும். சில முற்போக்குவாதிகளும் இப்படித்தான். நாவல் எல்லாம் கொள்கை விளக்கங்களாக இருக்க வேண்டும் என்று எண்ணுவார்கள். காதலோ சிருங்காரமோ இல்லாமல் வெறும் வறட்டு வாழ்க்கை என்ன வேண்டிக் கிடக்கிறது? முற்போக்குவாதி பிள்ளை பெறாமலா இருக்கிறான்? ஆசார சீலர்கள், மகான்கள் பிள்ளைப் பேறு இல்லாமலா இருக்கிறார்கள்?

நாவல் படிக்கிறவர்களுக்கு விரசம் கலக்காத வரையில் சிருங்காரச் சுவையில் வெறுப்பு ஏற்பட நியாயமில்லை. ஆனால், எதுவும் அளவுக்கு மிஞ்சினால்தான் தொல்லை. சிருங்காரச் சுவை இந்த நாவலிலே கொஞ்சம் தூக்கலாகத் தான் இருக்கிறது. அதற்கு என்ன செய்ய? சிலருக்கு எதிலுமே கொஞ்சம் உப்புத் தூக்கலாக இருக்க வேண்டியிருக்கிறதே !

கன்னிமாடம் பொதுவாக ஆசிரியருக்கு ஒரு வெற்றியைத்தான் அளித்திருக்கிறது. வாசகர்களுக்கு அருமையான பொழுது போக்கை வழங்கியிருக்கிறது.

விக்கிரமனின்

# நந்திபுரத்து நாயகி

---

**பிருந்தா வரதராஜன்**

பொற்காலம் என்று கருதப்படும் மூவேந்தர்களது ஆட்சிக் காலத்தை யொட்டிய இலக்கியத்தை இதயம் ஒன்றிப் படிக்க வேண்டும், இன்புற வேண்டும் என்று எண்ணினுல், அம்மன்னர்கள் அரசோச்சிய நாட்டைப் பற்றியும், குறிப்பிட்ட இலக்கியம் தோன்ற ஏதுவாயிருந்த அந்நாட்டு மக்களைப் பற்றியும் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். இன்று நாமறியும் தமிழ் நாடு. அதனின்று முற்றிலும் வேறு பட்டதே. அன்றுபோல் போரடிக்க யானையைத் தேட வில்லை, இன்று. வயலில் வந்த வெம்புலியை விரட்ட முறத்தை வீச நினைக்கவும் மாட்டாள், இன்றைய தமிழ்ப் பெண். தர்மமும், தானமும், பக்தியும் தழைத் தோங்கிய நாடு, அன்று.

சரித்திர இலக்கியத்தைச் சுவை மிக்க இலக்கியம் என்று வழி காட்டியவர் ஸ்ரீ கல்கி அவர்கள். பள்ளியிலும் கல்லூரி யிலும் படிக்கும்போது அச்சுப் பிரதியில் ஓசை நயங்கொண்ட வெறும் பெயர்களாகவே தோன்றியதை, உயிரும் உணர்வும் கொண்ட மனிதர்களாக, ஆசாபாசங்களும், காதலும், வீரமும் வீரவிக்கிடந்த வாழ்க்கை நடத்தியவர்களாக, தனது திறமை எனும் மந்திரக்கோலால் நம்முன் நிறுத்தியவர் அவர்.

புத்தகம் ஒன்றைப் படித்ததும், ஆத்ம திருப்தியுடன், 'ஆஹா! என்ன இன்ப அனுபவம்!'' என்ற எண்ணம் ஏற்படு மானல், அதைவிட உயர்ந்த விமர்சனம் ஏது?

என்னைப் பொறுத்த வரையில் விமர்சிப்பது என்பது இலக்கியத்தில் அவரவர்க்கு ஏற்பட்ட தனிச் சுவையாகும். ஆசிரியர் அனுபவித்து எழுதியவைகளை இதயக் கசிவுடன் அகக்கண்ணுல் பார்த்து, பரவசமுற்று, அந்த அனுபவத் தைத் தான் மீண்டும் பெறுவதேயாகும். கவிஞனைப் போலவும், கற்றுத் தேர்ந்த அறிஞன் போலவும், மனத் தளவில் சுற்றிவர, இலக்கிய உலகமே விமர்சகருக் குக் காத்திருக்கிறது. பழுதடைந்த கடிகாரத்தைப் பிரித்து, அக்கு வேறு ஆணி வேருக்கி, எங்கே எதில் தவறு என்று கண்டு பிடித்து மீண்டும் ஒக்கிடுவது போலன்று இலக்கிய நயம். மலரின் அமைப்பைத் தெரிந்து கொள்ள, இதழ் இதழாக நளினமுடன் பிரித்தால், ஒவ் வொரு பகுதியிலும் முழுமையையும், அழகையும் காண லாம். ரோஜாவின் ஒவ்வொரு இதழும் ஒரு மலராகலாம். கவிதையின் ஒவ்வொரு சொல்லும் ஒரு ஸ்வரமாகலாம். நாவலின் ஒவ்வொரு அத்தியாயமும் ஒலிமயமான ராக ஸ்வரூபத்தின் அழகிய ஸ்வரக் கோவையாகலாம். தனி ஸ்வரமாகக் கேட்டாலும் தனித்தனி ஸ்வரக் கோவை களாகக் கேட்டாலும் முழுமையான ராக ஸ்வரூபத்தின் தேன் சிதறல்களே அவை என்ற அடிப்படை எண்ணம் மாறு வதில்லை; சிதறுவதில்லை. இலக்கிய நயமும் அப்படியே. அணு அணுவாக ரஸித்து, முழுவதையும் ரஸிக்கலாம்.

[நாவலாசிரியரும், நாடக ஆசிரியரும் அண்மையிலுள்ள வர்களின் செயல்களையும், குண விசேஷங்களையும், உடனுக் குடனே உணர்ந்து, சீர்தூக்கி, எடைபோட்டு, வேண்டு மெனும்போது எடுத்துக் கொள்ளலாம் என்று பத்திரப் படுத்தக்கூடிய ஆற்றல் உடையவர்கள். எல்லோரிடையும் இந்த ஆற்றல் சம எடையுள்ளது, ஒரே தரமுள்ளது என்று கூறமுடியாது.]

பளிங்குக் கற்கள்மீது ஓயாது ஜலதரங்க நாதத்துடன் டிங் டிங் என விழுந்து, அதை வெண் மணலெனப் பொடித்து. குறும்புச் சிறுர் போலச் சலசலத்தோடும் நீரோடையருகே, மரகதப் பாய் நடுவே பூத்த சிறு மலர், ஏதோ மஞ்சள் பூ என்று மட்டுமே தோற்றுமேயாளுல், இலக்கிய நயம் எதிரொலிக்காத இதயம் என்று கொள்ளலாம். எப்படியாயினும் சரி, படிப்பவர்களுக்குக் கிடைக்காத ஓர் அனுபவத்தை ஆசிரியர் எடுத்துத் தருகிறுர் என்பதில் ஐயமில்லை.

நம் தென்னகத்தில் கல்கி அவர்கள் சீருடன் துவக்கிய சரித்திர இலக்கியப் பணி, இன்று பல ஒப்பற்ற மலர்களை அப்பாதையில் மலர வைத்திருக்கிறது. சரித்திர இலக்கிய ரசனை எந்த நாவலாசிரியரும் பெருமிதம் கொள்ளும் அளவுக்கு மக்களிடையே விரிந்திருக்கிறது. அண்மையில் பூத்தமலர் அன்பர் விக்கிரமன் அவர்களின் ‘நந்திபுரத்து நாயகி.’

மன்னர் சுந்தர சோழர் பெரும் புண்ணியம் செய்தவர். சுத்த வீரர்களான ஆதித்தன், அருண்மொழி, மாமேதை குந்தவ்வைக்கும் தந்தை. கதை ஆரம்பிக்கும்போது, சூழ்ச்சிக்குப் பலியாகி விடுகிறுர் ஆதித்த கரிகாலர். நாட்டில் அரசுரிமைக்குப் போட்டி ஏற்படக் கூடாதென்று குந்தவ்வை, ‘‘வெளி நாடு சென்று அனுபவம் பல பெற்றுவா’’ என்று அருண்மொழி வர்மரை அனுப்பி வைக்கிறுள். சுந்தர சோழரின் இளைய சகோதரர் உத்தம சோழர் மன்னராகிறுர். சிற்றரசர்களும் பாண்டிய நாட்டுஆபத்துதவிகளும்அரசாங்கத்தைக் கவிழ்க்கத் திட்டம் தீட்டுகிறுர்கள். காளாமுகர்கள், கபாலிகர்களின் நடமாட்டமும் அதிகரிக்கிறது. இடையே, குந்தவ்வையின் அன்புக்குப் பாத்திரமான வாணகப்பாடிநாட்டு வந்தியத்தேவவல்லவரையார், ஆதித்தரைக் கொன்ற குற்றத்திற்காக, அபாண்டமாகப் பாதளச் சிறையில் தள்ளப்படுகிறுர். மன்னர் உத்தம சோழரின் மகன் மதுரன் கண்டராதித்தன் சிவநேசச்

செல்வியான தன் பாட்டியார் செம்பியன் மாதேவியாரோடு சிவதலங்களைத் தரிசித்துப் பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டு அரசியல் நினைவேயில்லாமல் வாழ்கிறான். இச் சூழ் நிலை அரசாங்கத்திற்கு எதிராகச் சதி செய்பவர்களுக்குச் சாதகமாகிறது.

வெளிநாடு சென்ற அருண் மொழி வர்மரின் வாழ்வில் கலையரசி இன்பவல்லி குறுக்கிடுகிறாள் — சிறிது நேரமே. பத்தாண்டுகளுக்குப் பின் தாய்த்திரு நாட்டுக்கு அவர் திரும் பும் போது, பெற்றோர் மறைவு, வந்தியத் தேவரின் சிறை வாசம், அரசாங்கத்தின் பலவீனம் — இவைகளை அறியும் போது திடுக்கிடுகிறார். மாறு வேடத்திலேயே நின்று, வேண்டுவன செய்து, சோழ நாட்டுப் பெருமையை மீண்டும் நிலை நிறுத்துகிறார்.

ஒரு வகையில், கல்கி அவர்களின் பொன்னியின் செல் வனின் தொடர்ச்சியாக இதைச் சொல்லலாம். ஆயினும் கல்கிஅவர்கள் படைத்த கற்பனைப் பாத்திரங்களை விக்கிரமன் இங்கு உலவ விடவில்லை. சரித்திரச் சான்றும் அனுமதியும் பெற்ற பாத்திரங்களே நந்திபுரத்து நாயகியின் சுவை குன்றாத ஆயிரத்திருநூறு பக்கங்களிலும் உலவுகின்றனர்.

சரித்திர இலக்கியம் உருவாக்குவது கடினம். நீள் கம் பியின்மேல், கயிற்றின்மேல் நடப்பதற் கொப்பாகச் சொல் லலாம். புராணங்களில் மனிதனுக்கு அமானுஷ்ய சக்திகள் வாய்ந்திருந்தன. கல் பெண்ணாக உருமாறியது என்றால், கண் இமைக்காமல் சுவாரஸ்யமாகக் கேட்கிறோம். நீதி போதனை யொன்றையே குறிக்கோளாகக் கொண்ட அரிச்சந்திரன் கதையில், கதாபாத்திரங்களோடு நாம் ஒன்றி விடுகிறோம். இப்படியும் நடக்கக் கூடுமா என்று விவாதிப்பதில்லை. கற்பரசி சாவித்திரி கால்நடையாகவே யமதேவனைப் பின் தொடர்ந்து, சாதுர்யமான பேச்சினா லேயே தர்மராஜனை வென்றாள் என்று கேட்கும்பொது அறிவுக்குப் புறம்பானது என்று நாம் தள்ளிவிடவில்லையே!

ஹாஸ்ய ரஸனையை மட்டும் அடிப்படையாகக் கொண்டு, அமெரிக்காவில் ஆருவது மாடியிலிருந்த, அம்மாஞ்சி சாஸ்திரிகள் தக்களியில் நூல் நூற்ருராம், அந்த நூல் அறுந்து விடாமல் பூமிக்குக் கீழே செல்ல, அங்கேபள்ளம் பறிப்போமா என்று அருகிலிருந்தவர்கள் ஆலோசனை செய்தார்களாம் என்று படிக்கும்போது, முகவாயைத் தூக்கி பெரிதாக வாய்விட்டுச் சிரிக்கிருேமே அல்லாமல், இதெப்படியாகும் என்று மூகத்தைக் கடுகடு வென்று வைத்துக் கொள்வதில்லையே! இப்பாத்திரங்கள் கற்பனைப் படைப்புகள். குந்தவையும், வானதியும், மாதேவியும் வளமிக்க சோழ நாட்டிலே, அரச குடும்பத்திலுதித்த கௌவரவம் வாய்ந்த பெண்கள்.

தேவி குந்தவ்வை பல அரச தலைமுறையினரின் வாரிசு. மனது அலை பாயும் பருவத்தில், அதை அடக்கக் கற்றவர். சிறந்த அரசியல் மேதை. வந்தியத் தேவரோ—பெயரிலேயே அவர் அருமை தெரிந்து விட்டதே. பிறரால் வந்தனை செய்யப்படும் தகுதி உடையவரன்ருே!

சரித்திர நாவல் எதையும், சீர்தூக்கிப் பார்க்குமுன், சரித்திரச் சான்றுள்ள பகுதி எம்மட்டு, அதல்லாத பகுதி எம்மட்டு என்று ஆராய்தல் வேண்டும். அடிப்படையான நாவலுக்குக் கருவூலமான சம்பவங்கள், பாத்திரங்கள், சரித்திர ஆதாரம் கொண்டவையாக இருந்தாலே போதுமானது. மற்றபடி நாவல் என்ற இலக்கிய வகைக் கேற்ப முக்கியமல்லாத சம்பவங்களைச் சேர்ப்பதிலும். பாத்திரங்களைப் படைப்பதிலும், ஆசிரியர் கற்பனைத் திறன் முழுவதையும் பயன்படுத்தி யிருந்தாலும், பாதகமில்லை. நாவலின் மொத்த அழகு மேலும் சோபிக்க வகையுண்டு. சென்ற பத்தாண்டுகளுக்குள் வெளிவந்த பல்வேறு சரித்திர இலக்கியங்களில் இக்கூற்று காணலாம்.

ஒரே ஒரு உதாரணம் சொல்ல விருப்பம். மகாகவி ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் அமரத்வம் வாய்ந்தவை.

அவைகளில் ஏதாவது ஒன்றை எடுத்துக் கொள்வோம். ஒதெல்லோ, நண்பன் என்ற பெயரில் ஒளிந்திருக்கும் கயவன் ஒருவனுடைய துர்ப்போதனையினல், அழகும் அன்பும் கொண்ட மனைவியைச் சந்தேகிக்கிறுன், கதாநாயகன். அவள் உயிரிழந்த பின்னரே அவன் தெளிவடைகிறுன். இதுதான் கதை. சித்திர, விசித்திர சம்பவப் பின்னல்களும், சொற்கோலங்களும், தொய்வில்லாத வார்த்தையாடல் களும் சேர்ந்து, ஒதெல்லோவை எப்பேற்பட்ட மகோன்னத சிருஷ்டியாக்கிவிட்டன! [சீதையை ராவணன் தூக்கிப் போனுன். அனுமனுடன் கூடச்சென்று அடித்துப் பிடித்து ராமன் அவளை மீட்டு வந்தானென்ருல், ராமாயண மஹா காவியமே அன்ருட தினசரிப் பத்திரிகையில் நான்கே வரி களில் அடங்கிவிடுமே!]

நந்திபுரத்து நாயகியில் இலக்கிய நயமும், சரித்திரம் தரும் சான்றும் சுவைபடப் பிணைந்திருக்கின்றன. ஆரம் பமே கலகலப்பாக இருக்கிறது. தேவி குந்தவ்வையுடன் ராஜ மாதா கல்யாணி தேவி சொல்லும் கதையைக் கேட்க விழை கிருேம். குந்தவ்வையின் குணச்சித்திரம் வெளிப்பட ஆரம் பித்துவிட்டது. சோழ சாம்ராஜ்ய சேனுதிபதி பார்த்தி பேந்திரன் உணர்ச்சியால் உந்தப்பட்டு, வரம்பு மீறிப் பேசி னுலும் உள்ளடக்கிய கோபமும், உதட்டிலே நெளியும் புன் னகையுமாக எதிராளியிடமிருந்து விஷயம் முற்றும் வெளிப் படக்கூடிய கேள்விகளைக் கேட்கிறுள். [உள்நாட்டுக் குழப் பம் ஏதுமின்றி தாய்த் திருநாடு வளமிகு பாதையில் முன் னேற வேண்டும் என்ற உயர்ந்த லட்சியத்தைச் செயல் படுத்த, உயிரினுமினிய இளவலை, வெளிநாடுகளைச் சுற்றிவர ஊக்குகிறுள்.] நாட்டை ஆளும் அரசர் ஒருவர் இருக்கும் போது, அவரிடம் செலுத்த வேண்டிய அன்பை நாட்டில் மற்ருெருவர் பங்கு போட்டுக் கொண்டால் சூழ்ச்சி யாளர்கள் எப்படியும் பயன்படுத்திக் கொள்வர், என்று மனத்திண்மையுடன் கூறுகிறுள். யாரிடம்? சொந்த மகனைப்போல் வளர்த்த தம்பியிடம் சொல்கிறுள். வெளி

நாட்டுப் பயணம் இளவலுக்குச் சுவையுள்ளதாக அமைய வேண்டும். அதே சமயம் நாட்டுப் பொருளாதாரம் பெருக வழியும் ஏற்பட வேண்டும் என்று எங்கெங்கு போக வேண்டுமெனத் திட்டம் தீட்டுகிருள், அரசியல் தீர்க்கதரிசி குந்தவ்வை!

எத்தகைய இடர் வரினும் அஞ்சா நெஞ்சமும், உணர்ச்சிப் பிழம்பாக மாறினுலும் எளிதில் வெளிக்காட்டாத திண்மையும், ''சிரிப்பும், நகைப்பும், முறுவலும் தானே வேதனையைத் தீர்க்கும் மருந்து: இப் பிரபஞ்சத்தை சரிவர நடத்த வேண்டிய பெரும் கடமை கொண்டுள்ள குஞ்சிதபாதன் முகத்தைப் பாரேன், குமிழ்ச் சிரிப்பு அரும்பி நிற்கவில்லையா? என்று வாழ்க்கை முழுதும் இன்முகம் காட்டியே நடத்துகிருள். குந்தவையின் அரசியல் மேதைக்கு எல்லோரும் மதிப்புக் கொடுக்கின்றனர். [சிறிய தந்தை பட்டமேற்க, இளவல் அயல்நாடு போகவேண்டுமென்று அவள் தீட்டிய திட்டத்தை யாரும் ஆக்ஷேபிக்கவில்லை. காஞ்சி மாளிகையிலிருந்து தஞ்சைக்குப் போகவேண்டுமா, இடையில் பாதை மாறி குடந்தை வழி போக வேண்டுமா, வந்ததும் வராததுமாக பழவூர் செல்ல வேண்டுமா, எது வாயினும் உடனுக்குடனே ராஜமாதா கல்யாணி தேவி, செம்பியன் மாதேவி முதற்கொண்டு அக்கணமே நிறை வேற்றுகின்றனர்.] குந்தவ்வை எது செய்தாலும் அது சரியே, என்ற நம்பிக்கை யாவரிடமும் நிலவியது. நந்திபுரத்து நாயகியின் இருபாகங்களிலும் இந்த குணசித்திரம் மாருது நிற்கிறது. குந்தவ்வையோடு ஏதாவது ஒரு வகையில், சிறிது நேரமே தொடர்பு கொண்ட சிறிய பாத்திரமும் அவளுடைய அன்பிலே ஒன்றி விடுகின்றது. [மாணிக்கம், சுமதி, இன்பவல்லி, இளைய பஞ்சவன் மாதேவி, வானதி யாவரும் இளையபிராட்டியின் அன்பிலே திளைக்கின்றனர். ''இளைய பிராட்டியின் அன்பு எனக்குத் தாயின் அன்பை நினைவு படுத்தியது.'' என்ருள் வானதி. 'அக்காவின் அன்புக்கு ஈடு இணையே கிடையாது',

என்கிறார் அருண்மொழி. அனாதை என்று இன்பவல்லி வருந்தியபோது, ''நீ கலை அரசி. கலை உள்ளம் படைத்த உனக்கு, அனாதை என்ற உணர்வு எழாமலேயே நான் பார்த்துக் கொள்ளுகிறேன்'', என்று ஒரு அரசிக்குள்ள உயர்வோடு அபயமளிக்கிறாள் குந்தவை.]

சில விஷயங்களில், ராணி எலிசபெத்தின் குணாதிசயங்கள் குந்தவைக்கு இருந்ததுபோல் தோன்றுகிறது. இவள் இளைய பிராட்டி. அவள் அரசி. பலரிடம் பல சந்தேகங்களைக் குறித்து விளக்கம் கேட்டாலும், இறுதியில் தன்னுடைய அறிவுக்குச் சிறந்ததென தோன்றியதையே, இருவரும் கடைப்பிடிப்பார்கள். இருவருக்கும் தங்கள் தங்கள் நாடுகளில் போர் ஏதும் மூளாமல், அமைதி நிலவ வேண்டுமென்று நினைத்தவர்கள். No war, My Lords, No war என்று அரச உரிமை ததும்பும் குரலில் எலிசபெத். சொன்னால், சண்டை மூளாதிருக்க அரசுரிமை பெறவேண்டிய தம்பியையே வெளிநாட்டுக்கு அனுப்பி வைத்தாள். எலிஸபெத் கவிஞன் ஸ்பென்ஸருடன் கவிதையைப் பற்றி உரையாடுவாள். Bruno-விடம் வேதாந்தம் பேசுவாள். எஸ்ஸெக்ஸ் பிரபுவின் பணிவை மகிழ்வுடன் ஏற்பாள். ஆடையணிகளில் உற்சாகம்கொண்டு தோழியரோடு உற்சாகமாகப் பேசி, அடுத்த நிமிஷமே பொக்கிஷதாரர் ஸிஸிலுடன் கணக்குப் பார்ப்பாள். ஏதோ ஒரு உள்உணர்வால், எந்த காரியம் வெற்றிபெற யாரை நியமிக்க வேண்டுமெனத் தெரிந்து கொண்டு, அப்படியே செய்வாள். மக்கள் அவளிடம் உயிரையே வைத்திருந்தனர்.

இளைய பிராட்டியும் அவ்வாறே. மக்களின் நாடித் துடிப்பை எப்போதும் கண்காணிப்பில் வைத்திருந்தார். வந்தியத்தேவரிடம் தீவிர அன்பு கொண்டாள். ராஜமாதாக்களிடம் மதிப்பு. அரசிளங் குமரிகளிடம் அன்பு. கலைஞர்களுக்கு உதவினாள். நந்தவனத்து ஏழை மூதாட்டி குந்தவைக்கு எந்த விதத்திலும் தொண்டு செய்யக் காத்திருந்

தாள். அன்பு செலுத்தினுள். உண்மை. ஆனுல், இருவருக்கும் யாரிடமும் வெறுப்பு கிடையாது. அதுவும் உண்மை.

ராணி எலிஸபெத், இளையபிராட்டி குந்தவை—இரு வரும் நம் அகத்தே நிறைந்து மனதைக் குளிர்விக்கிருர்கள்.

வீரதீரமிக்க இளைஞராக அருண்மொழிவர்மர் நமக்கு அறிமுகப் படுத்தப்படுகிருர். இளவயதில் வானதியை மணந்து, இன்பவல்லியின் கலைக்கு அடிமையாகி, இறுதியில் இளையபஞ்சவன் மாதேவியை மணக்கிருர். சிறு வயது. அபார வடிவழகு. அரச குடும்பத்தவர். அதிகாரம் செலுத்தியே வாழ்நாளெல்லாம் இனிதாகக் கழிக்கக்கூடிய அந்தஸ்து. ஆனுல் அவையடக்கம் என்ற பண்பிலே வளர்ந்தவர். இளையபிராட்டியாரை முன்னேடியாகக் கொண்டவர். நாட்டின் நலனுக்காக, நல்வழி நடப்பவர். இவருடைய குணசித்திரமும் தொய்வில்லாமல் தீட்டப் பட்டிருக்கிறது. ஓரிடம் தவிர. பெரிய பழவேட்டரையர் மகள் மாதேவியை, இளைய பழவேட்டரையரின் வேண்டு கோள், ஏன் வற்புறுத்தலுக்காகவே மணந்து கொள்கிருர். பேதைபோல் அரியணை ஏறமாட்டேன் என்று விளையாட் டாக சபதம் செய்த வானதிக்கு அரியணை ஏறும் வாய்ப் பில்லாமலே போய்விடுகிறது. மாதேவி பட்டத்தரசி யாகும் பேறு பெறுகிருள். ஆனுல் கலையரசியான இன்ப வல்லியின் நிலையோ, பரிதாபத்திற்கு உரியது. முல்லைத் தீவில் அவள் இதயம் கவர்ந்து செல்கிருர். இருவருரிடையே அடுத்த சந்திப்பு நிகழ்வதற்குள், பெரிய சில மாறுதல்கள் ஏற்பட்டு விடுகின்றன. இந்தச் சந்திப்பின்போதும், இன்ப வல்லியின்மீது அன்பைப் பொழிகிருர் — அதோடு சரி. பேதைப் பெண். இளவரசரை மீண்டும் பார்க்க மாட்டேன் என்று இளைய பிராட்டியிடம் சத்தியம் செய்துவிட்டு, அஜந்தா சித்திரங்களைப் பார்க்கப் போய்விடுகிருள், அந்தக் கலைச் செல்வி.]

இளைய பஞ்சவன்மாதேவி மனதில் நில்லாது போய் விடுகிருள். துடிப்புள்ள இளம் பருவத்துப் பெண்ணுக,

பழுவேட்டரையரின் மகளாக அரச மாளிகைக்கு வருகிருள். சிறிய தந்தையின் ஆணைக்கேற்ப இளைய பிராட்டியாரின் அன்பைச் சம்பாதித்துக்கொள்ள வருகிருள். பழுவேட்டரையர் இளைஞன் மதுராந்தகன் கண்டராதித்தன் அரச பதவியேற்கக் கூடுமென்று கருதிஞர். தன் மகளும் மதுரன் கண்டராதித்தனும் உரையாடுவது கண்டு மகிழ்கிருர். அருண்மொழி மன்னராவது நிச்சயம் என்று கண்டுகொண்டதும், மகளின் மனத்தில் மாற்றம் ஏற்படுத்துகிருர். சொக்கட்டான் காயை நகர்த்துவது போல், மாதேவியும் கண்டராதித்தரிடமிருந்து மனதைப் பறித்து, அருண்மொழி வர்மரிடம் செலுத்துகிருள். ஆனுல் வானதிதேவியின் வாழ்நாள் முடியும் தருவாயில், பட்டத்தரசியானுலும், அடுத்த பட்டத்துரிமை வானதியின் மகனுக்கே எனும்போது, ஸ்திரமில்லாத பேதை நெஞ்சத்தில் இவ்வளவு உயர்ந்த மாற்றமா என்று வியப்புறுகிருேம்.

வந்தியத்தேவன் ஓர் உயர்ந்த படைப்பு. சோழநாட்டு அரசிளங்குமரர்களோடு வளர்ந்தான். அன்னியநாட்டினரான பரமேஸ்வர், தங்கள் நாட்டு படைத்தளபதியாக பதவியேற்க அவரிடம் கெஞ்சுமளவுக்கு வீரம் படைத்தவர். குந்தவையின் அன்புக்குப் பாத்திரமானவர். அபாண்டமாகப் பழி சுமத்தப்பட்டு சிறையிலடைக்கப்பட்டாலும், தன் நிலை தவருதவர். தப்பித்துப் போகப் பல வகையில் பலர் தூண்டிஞலும், 'அநியாயமாகப் பழி சுமத்தப்பட்டேன், தப்பித்துச் சென்ருல் பழியை ஏற்றுக் கொள்வது போலாகும். தண்டனை விதித்தவர்கள், தாமே அதைத் தவறு என்று உணர்ந்து விடுதலை செய்யும் வரை வழி திறந்திருந்தாலும் தப்பித்துப் போக மாட்டேன்,' என் உறுதி பூண்டவர். விடுதலை பெற்ற பிறகும் கௌரவத்துடன் உணர்ச்சிகளை வெளிக் காட்டாது இருந்து, ஆதித்தரின் கொலைக்கும், தனக்கும் சம்மந்தமில்லை என்று தெளிவான பின்னரே தேவி குந்தவையை மணம் புரிந்துகொள்ள இசைந்தான்.

சிவநேசச் செல்வராக மதுரன் கண்டராதித்தனையும், செம்பியன் மாதேவியாரையும் சிறப்பாகத்தீட்டி இருக்கிறார். மதுரக் குரலில், பக்திப்பாடல்களை மதுரன் கண்டராதித்தன் பாடும்போது அருகிலிருந்தவர்கள் நெக்குருகி அனுபவிப்ப தாக வர்ணிக்கும் போது, நாமும் நம் வசமிழந்து அந்தப் பாக்களின் நயத்திலே உருகி விடுகிறோம்.

[அரச பதவிக்கு போட்டி எப்போதும் உண்டு. வேறு நாட்டு ஒற்றர்களின் நடமாட்டம், காபாலி ககாளாமுகர் களின் உருட்டல் மிரட்டல்கள். காளிமாதேவிக்கு நரபலி கொடுக்கும் திட்டங்கள். யாவும் தத்ரூபமாகத் தோன்று கின்றன].

சரித்திர நாவல், குறிப்பிட்ட எல்லைக்குள்ளேயே விரிய வேண்டும். [உயரக் கட்டிய கம்பி மேல் நடப்பதற்கு ஒப் பாகும் எனச் சொல்ல நேர்ந்தது.]தொடர்கதையாக வெளி வருவதிலும் ஒரு கஷ்டம் இருக்கிறது. ஒவ்வொரு இதழ் முடி விலும், அடுத்து வரும் தொடரின் வித்து ஊன்றப்பட வேண் டும். சமூக நாவல்களில் அப்படி ஆனாலும் ஒப்புக் கொள்ள லாம். ஆனால், சரித்திர நாவலில் அதற்கு இடமேயில்லை. நாவல்ரூபமாக படிக்கும் போது, அம்முறை சிறந்ததல்ல என்று தெளிவாகும். நந்திபுரத்து நாயகி, தொடர் கதை யாக வெளி வந்த போதும் சுவை குன்றாதிருந்தது. புத்தக வடிவில் வெளி வந்தும் அச்சுவை மாறாமலிருப்பது போற்றத் தக்கது.

பிரபல நாவலாசிரியை ஜேன் ஆஸ்டினின் நாவலில், திடுக்கிடும் சம்பவங்களில்லை, மர்மமில்லை, கொலையில்லை. ஐந்து பெண்களைக் கொண்ட ஒரு நடுத்தரக் குடும்பக் கதை. தந்தை சற்றே மேதாவிலாசம் பொருந்தியவர். தாய், தன் பெண்கள் திருமணத்திற்காகவே உயிர் வாழ்ந்தாள் என லாம். இவ்வளவுதான். ஆனால், இதைப் படித்ததும், புத்தி சாலியான நண்பரொருவருடன் உரையாடுவதைப் போன்ற மன நிறைவு ஏற்படுகிறது. நுண்ணிய மெல்லுணர்ச்சிகளைத் திறம்பட விவரிக்கிறார் ஆசிரியை.

அதே போல் Mrs. Gaskellன் Crawfordம் மெல்ல மெல்லக் கண்கள் பளிச்சிட, இதழ்கடை யோரங்கள் மட்டும் மேல் நோக்கி வளைய, யாரோ முறுவலிப்பது போல் தோன் றும். கை தேர்ந்த பொற் கொல்லரின் நகாஸ் வேலையை மெல்ல மெல்ல ரஸிப்பதுபோல்தான் இதுவும். நந்தி புரத்து நாயகியின் சில பகுதிகள் இவைகளை நினைவுறுத்து கின்றன.

வைகையாற்றின் வர்ணனை. அது அவ்விடத்தில் வளைந் தும் குறுகியும் காணப்பட்டது. சலசலவென மணலை அரித் துக் கொண்டு வந்த அந்த நதி,பாறைகளின் வழியே புகுந்து, சமப் பகுதியில் துள்ளி, குடுகுடுவென ஓடி வந்தது. பாறை யைத் தழுவி வரும் போது பாறையின் அணைப்பில் துயின்று கொண்டிருந்த பச்சைப் பாசிக் கொடிகள், சிறிது தூரம் பிர வாகத்துடன் வரமுயன்று, பிடிக்காமலோ என்னவோ பாறையின் பிடியை விடாமல் நின்றன. ஆனால் துள்ளித்திரி யும் மீனினங்கள் மட்டும் அங்கேயே வட்டமிட்டு அன்றைய உணவுக்கு வழி செய்து கொள்ளப் பார்த்தன. கதிரொளி யில் வெள்ளிக் கட்டி ஒன்று நீரிலே துள்ளுவது போல் தோற்றமளித்தன.

அடுத்து நாட்டிய வர்ணனை..

'ஜல் ஜல் என்ற நூபுரத்தின் ஓசை கேட்டது. இன்ப வல்லியின் பாதங்கள் ஒலித்தன. வளை குலுங்கும் கரங்கள்வளைந்தன. விரல்கள் நெளிந்து நெளிந்து பல விதத் தோற்றங்களைக் காட்டின. அவை என்ன நான் முகனின் கைகளா? பல பலத் தோற்றங்களைக் காட் டின. துள்ளும் மானைப் புலப்படுத்துகின்றன. அசையும் யானையை, நெளியும் பாம்பை, ஆடும் மயிலை, குவியும் மலரை, விரியும் பூவை, வட்டமதியை, வானத் தாமரையை கடும்புயலை, கொடிய வில்லை, நெடிய மலையை, அடர்ந்த மரத்தை...

மாளிகையின் கூடங்கள் கூட இசை கேட்டுப் பொலி வடைந்தன. சதங்கை ஒலி கேட்டுச் சிரித்து மகிழ்ந்தன. ஒரு

கணம் அக்கூடம் சுவர்க்கத்தின் பகுதியாகியது. ஒரு கணம் அந்தக் கூடம் கலைமகள் வதியும் இடமாகியது. ஒரு கணம் இந்திரன் இல்லாது அரம்பையர் மட்டும் ஆகும் கூடமாகக் காட்சியளித்தது.

மேலும்...

கோத்த மகிழம் பூ மாலைக் காற்றில் உருண்டோடுவது, தேர்ச் சக்கரம் உருளுவது போலிருக்கிறதாம்.

உரையாடல்களும் விறுவிறுப்பாக, தொய்வில்லாமல் இருக்கின்றன.

கல்கியின் படைப்புக்களுக்குச் சரியான வாரிசுதான் நந்திபுரத்து நாயகி, என்பதில் ஐயமில்லை.

அரு. இராமநாதனின்

# வீர பாண்டியன் மனைவி

---

'பூவண்ணன்'

''வரலாறு என்பது மந்திர வித்தையன்று. ஆனால் அதைக் காணும் கண் பெற்றார் வரலாற்றில் நிறைந்த மந்திர வித்தை இருப்பதைக் காணலாம்'' என்று குறிப்பிட்டார் நேரு. அத்தகைய கண், வரலாற்றைப் படிக்கும் அத்தனை பேருக்கும் இருப்பதில்லை. அந்த அற்புதக் கண்ணை ஆற்றல் மிக்க எழுத்தாளர்கள் பெற்றிருக்கின்றனர். எனவே, அவர்கள் வெறும் நிகழ்ச்சிகளிடையே, வெறும் குறிப்புகளிடையே சுவையான கதைகளைக் கண்டு களிக்கின்றனர். தாம் அறிந்தவற்றை எழுத்தில் வடித்துப் பிறரையும் களிப்புறச் செய்கின்றனர்.

ஆற்றில் மிதந்துவந்த கூந்தலிழையை வைத்து, தான் அதற்கு முன் காணாத பெண்ணின் உருவத்தை உள்ளவாறு அமைத்து விட்ட ஓவியனைப் பழங் கதைகளில் பார்த்திருக்கிறோம். அந்த ஓவியனின் உள்ளம் பெற்றவர்கள் எழுத்தாளர்கள். எனவே கூந்தலிழையைப் போன்ற ஒன்றிரண்டு வரலாற்று நிகழ்ச்சிகளையும் குறிப்புகளையும் கொண்டு அற்புதமான சரித்திர நாவலை உருவாக்கி விடுகின்றனர். அத்தகையோரில் ஒருவரே அரு. இராமநாதன் அவர்கள்.

பாண்டியர் வரலாற்றைப் படிப்பவர்கள் சடையவர்மன் வீரபாண்டியன் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண்டிநாட்டை ஆண்டதை அறியலாம். அவன் ஆட்சியில் நடந்த மூன்று நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு எழுப்பப்பட்ட எழில் மாளிகையே 'வீர பாண்டியன் மனைவி'.

1. கி. பி. 1180ல் மூன்றும் குலோத்துங்கன், வீர பாண்டியன்மீது படையெடுத்துச் சென்று, அவன் நாட்டை வென்று குலசேகர பாண்டியனின் மகன் விக்கிரமபாண்டியனுக்கு அளித்தான். இப் போரில் வீரபாண்டியனின் புதல்வரில் ஒருவன் இறந்தான்.

2. சோழனை எதிர்க்க நினைக்கும் வீரபாண்டியனைச் சோழப் படை நெட்டூரில் சந்தித்துச் சமர் புரிந்தது. இப் போரிலும் பாண்டியன் தோற்றான். சோழன் பாண்டியனின் முடியைக் கைப்பற்றினான். மேலும் வீர பாண்டியனின் பட்டத்தரசியைச் சிறைப்பிடித்து வேளம் ஏற்றினான். (அந்தப்புரத்துத் தாதியாக்கினான்).

3. சோழனை வெல்ல முடியாத வீரபாண்டியன் சேர நாடடைய, அவனுக்கு உதவி செய்தால் சோழனின் பகையைத் தேடிக்கொள்ள நேரும் என்றஞ்சி வீரபாண்டியனுடனும் அவன் மக்கள் வீரகேரளன், பருதிகுலபதி ஆகியோருடனும் சோழனை அடைகிறான் சேரன். சோழன் பாண்டியனுக்கு அவன் நாட்டில் ஒரு பகுதியும் முடியும் அளித்து அவன் மக்களுக்குத் தன் பக்கம் இருக்கும் சிறப்பளித்தான்.

இந்த மூன்று வரலாற்று நிகழ்ச்சிகளைக் கொண்டு, மூன்று பாகங்களும், நூற்றிருபத்தாறு அத்தியாயங்களும், ஆயிரத்தி நானூற்றுப் பதினாறு பக்கங்களும் கொண்ட சுவையான சரித்திர நாவலைச் சமைத்த ஆசிரியரின் திறன் போற்றத் தக்கது.

இனி, 'வீரபாண்டியன் மனைவி'யின் கதைச் சுருக்கத்தைக் காண்போம்.

மூன்றும் குலோத்துங்கன் பாண்டியனை வெல்லத் தன் படையை அனுப்புகிறான். பாண்டியனின் படைத் தலைவருள் ஒருவனான அஞ்சுக்கோட்டை நாடாள்வானின் வஞ்சகத்தாலும், சோழ வீரன் வீரசேகரனின் தீரத்தாலும் பாண்டியன் தோற்று, அவன் மனைவியுடனும் ஒரு மகனுடனும் ஓடுகிறான். மற்றொரு மகன் சோழரின் ஒற்றர் படைத் தலைவன் ஜனநாதனின் சூழ்ச்சியால் கொல்லப் படுகிறான்.

வீரபாண்டியன் நெட்டூரில் தங்கிச் சோழனை வெல்லப் படை திரட்டுகிறான். வீரசேகரன் அங்கும் பாண்டியனை வெல்கிறான்; அவன் முடியைக் கைப்பற்றுகிறான். சேரனின் மகளான பாண்டியனின் இளம் மனைவியைச் சிறைப் பிடித்துச் சென்று மதுரையில் காவலில் வைக்கிறான்.

குலோத்துங்கன் வீரபாண்டியன் மனைவியை அடைய விரும்புகிறான் என்று ஜனநாதன் கூற, வீரசேகரன் காவலைப் பலப்படுத்துகிறான். வீரபாண்டியனும் அவனைச் சார்ந்தோரும் பாண்டிமா தேவியை விடுவிக்கப் பலமுறை முயன்று தோல்வி காண்கின்றனர். இறுதியில் ஜனநாதன் பாண்டியனைச் சோழனிடம் செல்லுமாறும், அதன் மூலம் அமைதியான இன்ப வாழ்வு பெறுமாறும் கூறுகிறான். சர்வாதிகாரம் நிறைந்த சோழ சாம்ராஜ்யத்தை அழிக்கும் பணியில் தான் ஈடுபட்டுள்ளதாகவும், வருங்காலத்தில் பாண்டியனின் மகனைச் சோழனின் பகைவனாக்கி, அவனுடன் சேர்ந்து சோழ சாம்ராஜ்யத்தை அழித்து விடலாம் என்றும் கூறிப் பாண்டியனைச் சோழனிடம் அனுப்பி வைக்கிறான். இடையே வீரசேகரன் பகைவனான வீரபாண்டியனின் கூட்டத்தைச் சார்ந்த ஊர்மிளா என்னும் பெண்ணைக் காதலிப்பதும் அவளுக்காகப் பல உதவிகளைச் செய்து, முடிவில் அவளுடன் சாவிலே இணைவதும் சுவையாகக் கூறப்படுகிறது.

இது கதை. வீரசேகரனும் ஊர்மிளாவும் ஆசிரியரின் கற்பனைப் படைப்புகள். மீதியுள்ளவர்களில் முக்கியமான பலரும் வரலாற்றில் வாழ்பவர்கள். அஞ்சுக்கோட்டை நாடாள்வான், ஆடையூர் நாடாள்வான். சம்புவராயன், ஏகவாசகன் வாணகோவரையன் முதலியோர் வரலாற்றுப் பாத்திரங்களே. இப் பெரிய நாவலில் கதாநாயகனையும் பின்னே தள்ளி எதிலும் முன்னிற்பவன், வாசகர்களை எளிதில் கவர்ந்து அவர்தம் இதயத்தில் இடம் பிடிப்பவன் ஜனநாதன்.

''ஜனநாதன்தான் கதையை நடத்துகிறன்; ஜனநாதன் தான் கதையில் திருப்பங்களை உண்டாக்குகிறன். ஜனநாதன் தான் எங்கும் நிறைந்திருக்கிறன். ஜனநாதன் ஒரு வர லாற்றுப் பாத்திரம். சோழனின் முக்கிய அதிகாரிகளில் ஒருவன் இவன் என வரலாறு குறிப்பிடுகிறது. இவனுடைய முழுப் பெயர், கூடல் ஏழிசை மோகன், மணவாளப் பெருமாள், வாள் நிலை கண்ட பெருமாளாகிய இராசராசக் காடவராயன் ஜனநாதன். இவன்தான் இச் சரித்திர நாவலின் இலட்சியத்தை உருவாக்கிக் காட்டுகிறன்.'' எந் நாடும் அளவுக்கு மீறிய சக்தி பெறக்கூடாது. சாம் ராஜ்யம் சர்வ சக்தி வாய்ந்ததாகப் பெருகப் பெருக, அதன் விஸ்தீரணம் அதிகரிக்க அதிகரிக்க, ஆட்சியாளரிடம் சர்வாதிகாரம் குவியக் குவிய, ஜனங்களின் உரிமையும், வாழ்வும், செல்வாக்கும் பறிபோய்விடும். சர்வ வல்லமை பொருந்திய சாம்ராஜ்யம் என்பது யதேச்சாதிகாரப் பாதையிலே ராஜ நடை போட்டு, தன்னுடைய ஆட்சி நீடிப்பதையும், அதிகாரங்களையும், ஆடம்பரங்களையும், அபிலாஷைகளையும், மூர்க்கத்தனமான லட்சியங்களையும், முரட்டுத்தனமாக நிலை நாட்டுவதிலேயே தன் கருத்தை யெல்லாம் செலுத்திக் கொண்டிருக்குமே தவிர, மக்களின் உரிமைகளையோ, நன்மைகளையோ சிறிதும் பொருட் படுத்தாது! மக்களுக்கு நன்மை செய்வதாகச் சொல்லிக் கொண்டே மறைமுகமாக மக்களை மிதித்து, நசுக்கிக்

கொண்டு, தன்னுடைய சொந்த நன்மைகளைத்தான் அத்தகைய அரசாங்கம் கவனித்துக் கொண்டிருக்கும்.'' என்று கூறும் ஜனநாதன் அப்படிப்பட்ட நிலையடைந்த சோழ சாம்ராஜ்யத்தை அழித்துக் கிராம ராஜ்யத்தை உண்டாக்குவதே தன் இலட்சியம் என்று கூறுகிறான். மக்களின் உரிமைகளைக் காக்க மாபெரும் சாம்ராஜ்யத்தை அழித்தே தீரவேண்டும்; கிராம சுய ஆட்சி வந்தேயாக வேண்டும்! இந்த இலட்சியத்தை நிறைவேற்றவே ஜனநாதன் ஒவ்வொரு செயலையும் செய்கிறான்.

பாண்டிமாதேவியைச் சிறைப் பிடித்தது, அவளைக் காவலில் வைத்தது, அவளைச் சோழ மன்னர் விரும்புவதாக ஒரு செய்தியைப் பரப்பியது, இறுதியில் பாண்டிமாதேவியைச் சோழப் பேரரசின் தாதியாக வேளமேற்றியது, ஆகிய இத்தனை செயல்களுக்கும் காரணகர்த்தா ஜனநாதனே! இச் செயல்களினால் சோழ மன்னர்மீது மக்களுக்கு வெறுப்பு ஏற்படும் என்றும், அதனால் சோழ சாம்ராஜ்யம் அழிய வாய்ப்பு நேரும் என்றும் கூறுகிறான். அதற்கேற்ப வீரசேகரன் உட்பட பலரைச் சோழனின் பகைவர்களாக மாற்றுகிறான். ஜனங்களின் உரிமைக் காகச் சாம்ராஜ்யம் சரிந்தே தீரவேண்டும் என்னும் இலட்சியத்தை ஜனநாதன் இறுதியில் வெளிப்படுத்தும்போது தான், ஜனநாதனின் புதிர்ச் செயல்களுக்கு விளக்கம் கிடைக்கிறது. இந்த இலட்சியத்தை மெல்ல மெல்ல உருவாக்கி இறுதியில் வெளிப்படுத்தும் ஆசிரியரின் திறமை போற்றத் தக்கது.

சோழனின் முக்கிய அதிகாரியான ஜனநாதன் சோழனின் பகைவன்; அவன் அருகே இருந்தே அவனுக்குக் குழி பறிக்கிறான். இதைச் சரித்திரமும் கூறுகிறது. ஜனநாதனுக்குப் பிற்காலத்தில் (முதலாம்) ''கோப்பெருஞ்சிங்கன்'' என்று பெயர். இவன் நன்றி மறந்து தன்னலங் கருதிச் செய்த அடாத செயல்களே கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் நடுவில் சோழ இராச்சியத்தில் அமைதியின்மையையும்,

ஆட்சியில் தளர்ச்சியையும், உண்டுபண்ணி விட்டமையோடு இறுதியில் சோழர் பேரரசு வீழ்ச்சி எய்தி மறைந்தொழியுமாறும் செய்துவிட்டன என்பது ஒருதலை'' என்று கூறுகிறது 'பிற்காலச் சோழர் சரித்திரம் !'

சரித்திரம் துரோகி என்று ஜனநாதனைத் தூற்றுகிறது. ஏனென்றால், அவன் தன்னை ஆதரித்த சாம்ராஜ்யத்தை அழிக்க முற்பட்டான். அதையே ஆசிரியர் தியாகமாக்கிக் காட்டுகிறார். ஜனநாதன் சோழ சாம்ராஜ்யத்தை அழிக்க முயன்றதற்கு ஓர் அற்புதமான இலட்சியத்தை காரணமாக்குகிறார். ஜனநாதன் வாசகர்களுக்கு ஓர் இலட்சிய வீரனாக, மக்கள் உரிமையைக் காக்கும் மாபெரும் தலைவனாகத் தென்படுகிறான்.

தமிழகம் முழுவதையும் வென்று அடிமைப் படுத்தும் குலோத்துங்கனின் அருகே, அவனை அழிக்கக் கருதும் ஒருவன் செல்வாக்கோடு நிற்கிறான். அப்படியானால் அவன் எப்படிப் பட்ட திறமை மிக்கவனாக இருக்கவேண்டும்? ஆசிரியர் இராமநாதன் இதை நன்கு உணர்ந்து ஜனநாதனை உருவாக்கியுள்ளார். அவர் படைத்த ஜனநாதன் எப்படிப் பட்டவன் தெரியுமா? இதோ ஜனநாதனே தன்னை அறிமுகப் படுத்திக் கொள்கிறான்; கேளுங்கள் :

''உறவாடிக் கெடுக்கும் உத்தம குணம் என் குணாதிசயங்களில் தலை சிறந்தது. சுயநலம், நயவஞ்சகம், நம்பிக்கைத் துரோகம், விஷமம், ஏளனம், பொறாமை, பேராசை—முதலான நம் நீதி நூல்கள் கண்டிக்கும் துர்க்குணங்களெல்லாம் என்னிடம் பொதிந்திருக்கின்றன...நான் ராஜதந்திரத்தில் 'குள்ளநரி. அரசியல் கட்சிகளில் அடிக்கடி நிறம் மாறும் பச்சோந்தி. மத நம்பிக்கைகளில் கூடுவிட்டுக் கூடு பாயும் வேதாளம். பதவி மோகத்தில் வேட்டை நாய். பணப் பசியில் மலைப் பாம்பு. பழி தீர்ப்பதில் மத யானை. மத்தியஸ்தம் செய்வதில் ருத்ராக்ஷப் பூனை. ஆனால், அரசியலில் என் அந்தஸ்து நிலைத்திருப்பதற்கு இத்தனை மிருகக் குணங்களும் எனக்கு அத்தியாவசியமாய் இருக்கின்றன.''

ஜனநாதன் எத்தன்மையன் என்று புரிகிறதல்லவா? அவனைக் கண்டால், அவன் பெயர் கேட்டால் பாண்டிய அதிகாரிகளுக்கும், சோழ அதிகாரிகளுக்கும் ஒரே அச்சம்; நடுக்கம். ஜனநாதன் நாவசைத்தால் யார் தலை உருளுமோ என்று பயந்து சாவார்கள். ஆம், அவன் அத்தகைய தீயவன்; அல்லது திறமைசாலி !

வீரபாண்டியனின் முதல் மகன் பராக்கிரமனை ஜன நாதன் கொல்ல விரும்புகிறான். ஆனால், அதை அவன் செய்யவில்லை. அவனைச் சற்றே அலட்சியப் படுத்திய பாண்டிநாட்டு அதிகாரி அஞ்சுக்கோட்டை நாடாள்வான் செய்யுமாறு தூண்டிவிடுகிறான். நாடாள்வான் பாண்டி யனின் மகனைக் கொன்று, மக்களின் வெறுப்பைச் சம்பாதித் துக் கொள்கிறான். ஜனநாதன் அவன் கொட்டம் அடங்கி யது என்று கை கொட்டிச் சிரிக்கிறான்.

ஜனநாதனுக்குப் பிடிக்காதவன் சோழ அதிகாரி ஆடையூர் நாடாள்வான். அவனிடம் பெரிய படை இருந் தது. அதை நெட்டூர் கோட்டை முற்றுகையில் ஜனநாதன் வஞ்சகமாகப் பலி தருகிறான். தன்னை வெறுக்கும் முத்தரை யனைத் தந்திரமாகக் கொல்கிறான். இப்படித் தான் நினைத் ததைச் சாதித்துக்கொள்ளும் சாமர்த்தியசாலி, ஜனநாதன்.

ஜனநாதன் எப்போதும் சிரித்துக் கொண்டிருப்பான். சிரிக்கப் பேசிச் சிந்தனையைக் கிள்ளுவான். ஒருமுறை ஜனநாதன் விசாரணைக் கூடத்தில் சாட்சி சொல்ல வரு கிறான். அவன் சொல்வதெல்லாம் உண்மை என்று கடவுள் மீது சத்தியம் செய்து கூறவேண்டும் என்று ஏகவாசகர் கூறுகிறார். ஜனநாதன், ''என்மீதே சத்தியம் செய்கிறேன்! ஏனென்றால் நானும் ஒரு கடவுள்தான்'' என்கிறான். ஏகவாசகர் திடுக்கிட்டு, ''என்ன?'' என்று கேட்டதும், ''நான் ஓர் அத்துவைதி! ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இரண்டல்ல; ஒன்றுதான் என்கிற ஆதிசங்கராச்சாரியாரின் அத்வைதக் கொள்கையை நம்புகிறவன். அந்தக் கொள்கைப்

படிப் பார்த்தால், நானும் ஒரு கடவுள்தான்'' என்று விளக்குகிறுன் ஜனநாதன். ''இல்லை. அதெல்லாம் முடியாது. ஜனநாதா! நீ ஏதாவது ஒரு கடவுளின் பெயரால் தான் சத்தியம் செய்ய வேண்டும்'' என்று வற்புறுத்துகிருர் ஏகவாசகர். ''அப்படியாளுல் ஜனநாதன்மீது சத்தியம் செய்கிறேன். ஜனநாதன் என்பதும் கடவுளரின் பெயர் களில் ஒன்றுதான்'' என்று ஜனநாதன் கூறும்போது ஏகவாசகரால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

ஜனநாதனைக் கொன்றுவிடுவதாகக் கூறும் ஒருவன், ''உனக்கு வைகுந்தப் பதவி தருகிறேன்'' என்கிறுன். ஜனநாதன் ''அரசியல்வாதிகள் ஆசைப்படாத பதவி அது ஒன்றுதான்'' என்று நகைச் சுவை ததும்பக் கூறுகிறுன்.

ஜனநாதன் அறிவும் ஆற்றலும் மிக்கவன். அதளுல் அவனைக் கண்டு மற்றவர் பயப்பட வீரசேகரன் அவனை விரும்புகிறுன்; அவனைத் தன் உற்ற நண்பளுகப் பாவிக் கிறுன். ஜனநாதன் வீரசேகரனை மட்டுமே விரும்புகிறுன். பிறரைத் தன் அரசியலுக்குப் பயன்படுத்திக்கொள்ளத் தயங்குவதில்லை. வீரசேகரனுக்குக்காகத் தன் காதலி அகல்யாவைக்கூடப் பலி கொடுத்து விடுகிறுன். வீரசேகரன் இறக்கும்போது, பிறந்தபோதும் அழாத கல்நெஞ்சளுன ஜனநாதன் கண்ணீர் வடிக்கிறுன். வீரசேகரனை ஜன நாதன் காப்பாற்றி யிருக்க முடியாதா? முடியும் என்றே தோன்றுகிறது. ஏகவாசகரின் மகன்தான் வீரசேகரன் என்ற உண்மையை மறைத்து வைத்துக் கடைசி நேரத்தில் வீரசேகரன் யானைக்காலால் இடரப்படும் நேரத்தில் வெளிப் படுத்தி, ''ஏகவாசகரே, உம் மகனைக் கொல்லும் சோழப் பேரரசை எதிர்த்து என்னுடன் சேர்ந்து வாள் உயர்த் துங்கள்'' என்று கூறுகிறுன். தம் இலட்சிய வெற்றிக்காக எதையும் செய்யும் இயல்பினன் ஜனநாதன். இல்லை யென்ருல் வீரசேகரன் யார் என்ற உண்மையை முன்னரே வெளிப்படுத்தி அவனைக் காத்திருக்கலாமல்லவா?

ஜனநாதனின் தெளிந்த அறிவிற்கு ஒரு சான்று வேண்டுமா? இதோ இராஜ பக்திக்கும் தேச பக்திக்கும் உள்ள வேறுபாட்டை அவன் விளக்குவதைக் கேளுங்கள்.

''தம்பி, இராஜ பக்தி என்பது வேறு; தேச பக்தி என்பது வேறு. ஆளும் அரசாங்கத்தைக் கண்மூடித்தன மாகப் பின் பற்றும் பக்தி வேறு; ஆளப்படும் தன் நாட்டைக் கண் திறந்து பார்க்கும் பக்தி வேறு....கண்மூடித் தனமான அரசாங்க தாசர்களால் கொடுங்கோன்மையும் சர்வாதிகார வெறியுமே உருவாகும்.''

ஜனநாதன் சோழப் பேரரசின் அழிவைத் தன் இலட்சிய மாகக் கொண்டு செயல்படுகிறுன். இதனைச் சோழ மன்னர் அறியாமல் இருப்பாரா? இருந்தும் ஜனநாதன் சோழ அரசியலில் இருப்பது எப்படிச் சாத்தியமாகிறது என்று வீர சேகரன் கேட்கிறுன். யானை இருந்தாலும் ஆயிரம் பொன் இறந்தாலும் ஆயிரம் பொன் என்பார்களே, அந்த யானை யைப் போன்றவனும் ஜனநாதன். ''ஜனநாதன் அரசவை யில் இருந்தாலும் ஆயிரம் தொல்லை, இல்லாவிட்டாலும் ஆயிரம் தொல்லை என்பது சோழ மன்னருக்குத் தெரியும். அதனுல்தான் அவர் என்னை ஒன்றும் செய்வதில்லை'' என்று ஜனநாதன் கூறும்போது, ஜனநாதனின் ஆற்றலை நாம் உணருகிறோம்.

'வீரபாண்டியன் மனைவி' நாவலுக்குக் கதைப்படி கதாநாயகன் வீரபாண்டியன்தான்! ஆனுல், வீரசேகரன் தான் கதாநாயகனே என்ற ஐயம் முதலில் ஏற்படுகிறது. கதையைப் படித்து முடித்ததும் ஜனநாதனே கதாநாயகன் என்று முடிவு செய்கிறோம். ஒரு நாவலின் வெற்றிக்குக் காரணங்கள் பல! அவற்றுள் ஒன்று பாத்திரப் படைப்பு! ஜனநாதன் ஒரு முழுமையான பாத்திரப் படைப்பு! நாவலைப் படித்து முடிக்கின்றவர்களின் நெஞ்சில் நீங்காத இடத்தை நிலையாகப் பெறுகிறுன் ஜனநாதன்.

வீட்டை அழகு படுத்த வீட்டின்முன் செடிகள் நடலாம். செடிகளுக்குப் பதில் ஓர் ஆலமரத்தை நட்டால், அது ஓங்கி உயர்ந்து செழித்து வளர்ந்து அந்த வீட்டையே மறைத்துக் கொண்டு நிற்கும். ஜனநாதன் பாத்திரம் அந்த ஆல மரத்தை ஒத்தது. கதையின் பிற பாத்திரங்களை மறைத்து இது ஒன்றே எல்லா இடத்தையும் ஆக்கிரமித்துக்கொண்டு நிற்கிறது. அதனுல் பிற பாத்திரங்கள் தங்கள் முக்யத்து வத்தை இழந்துவிடுகின்றன.

இளம் மனைவியிடம் உயிரை வைத்து, காத லுக்கும் கடமைக்கும் இடையே சிக்கி இன்னலுறும் வீரபாண்டியன், அவனைக் காக்க முனைந்து நிற்கும் காத்தவ ராயன், அவன் காரியங்களுக்குக் கைகொடுக்கும் சக்தியும் சாகசமும் நிறைந்த ஊர்மிளா, துரோகமும் சூதும் தொட முடியாத வீரசேகரன், அவன்மீது வெறி கொண்டலையும் சிவகாமி, ஆகிய அத்தனை பேரையும் ஆசிரியர் அற்புத மாகப் படைத்துள்ளார். ஆனுல் ஜனநாதன் அவர்களை விழுங்கி ஏப்பமிட்டுத் தான் மட்டுமே தன்னிகரறற்றவனுகித் தனுக்கி நிற்கிறுன். 'வீரபாண்டியன் மனைவி'யைப் படிப்போரின் உள்ளம் சாணக்கியனையும் மிஞ்சும் ராஜ தந்திரியான ஜனநாதனை என்றும் மறக்காது.

'வீரபாண்டியன் மனைவி'யின் சிறப்பு ஜனநாதன் என்னும் பாத்திரப் படைப்பு மட்டுமன்று. ஆசிரியரின் தமிழ் நடை எவரையும் கவரவல்லது. சோர்ந்து தளரும் உள்ளத்தையும் இழுத்துப் பிடித்து நிமிர்ந்து நிற்கச் செய்யும் வேகமும் விறுவிறுப்பும் நிறைந்த நடை. ஆயிரத்து நானூற்றுக்கு மேற்பட்ட பக்கங்களை அலுக்காமல் படிக்கச் செய்வது இந்த நடைதான்.

ஆசிரியர் கம்பராமாயணத்தில் நல்ல தேர்ச்சி பெற்ற வர் என்பதை நாவலைச் சற்றே புரட்டிப் பார்ப்பவரும் அறியலாம். ராமாயணக் கதைக்கு ஒப்பிட்டு வீரபாண் டியன் மனைவி எழுதப்பட்டுள்ளது. கதையின் பாத்திரங்

களையும், நிகழ்ச்சிகளையும் அடிக்கடி கம்பராமாயணத்திற்கு ஒப்பிட்டுப் பேசுகிருன் ஜனநாதன். அதனுல் ஆசிரியர் ஒவ்வோர் அத்தியாயத்தின் துவக்கத்திலும் கம்பராமாயணத்தின் சில வரிகளைத் தருகிருர். அத்தியாயத்தின் கதைக்கு மிகப் பொருத்தமான பகுதியைத் தேர்ந்தெடுக்கும் ஆசிரியரின் புலமை வியக்கத்தக்கது. கம்ப ராமாயணத்துக்கும் வீரபாண்டியன் மனைவிக்கும் ஒரு வேறுபாடு உண்டு. கம்ப ராமாயணம் பாலகாண்டத்தில் ஆரம்பித்து யுத்த காண்டத்தில் முடிகிறது. வீரபாண்டியன் மனைவி யுத்த காண்டத்தில் துவங்கிப் பாலகாண்டத்தில் முடிகிறது. முதல் பாகத்திற்கு மகுட பங்கம் என்று முதலில் பெயரிட்டாலும் இறுதியில் அதை யுத்த காண்டம் என்றும் குறிப்பிடுகிருர் ஆசிரியர். இரண்டாம் பாகத்திற்கு 'அசோகவனம்' என்று பெயரிட்டாலும் அதைச் சுந்தரகாண்டம் என்று குறிப்பிடுகிருர். மூன்ரும் பாகத்தைப் பாலகாண்டம் என்று குறிப்பிடுகிருர். நாவலின் சில நிகழ்ச்சிகளுக்குக் கம்ப ராமாயணமே பிறப்பிடமாக இருப்பதையும் நம்மால் உணர முடிகிறது.

பல சரித்திர நாவல்கள் ஒரே பாணியில் எழுதப்பட்டிருப்பதை நாம் அறிவோம். இராமநாதன் தம் நாவலைப் புதிய பாதையில் செலுத்தியிருக்கிருர். வெற்றி பெற்ற வீர தீர மிக்க மன்னர்களைத் தம் கதைத் தலைவர்களாகத் தேர்ந்தெடுப்பது வழக்கமாகி விட்டது. ஆனுல் இராமநாதன் தேர்ந்தெடுத்த வீரபாண்டியன் கதை நடக்கும் காலத்துப் போர் யாவிலும் தோற்றுப் போகிருன். தோற்ற மன்னனைக் கதாநாயகனுகக் கொண்டு வெற்றி பெற்ற நாவல் இது.

ஆசிரியர் காட்டும் காதலும் புதுமையானது. வீரசேகரன் ஊர்மிளாவைக் காதலிக்கிருன். வீரசேகரன் ஏற்கனவே மணமானவன். அதுவும் அவனைக் காட்டிலும் அதிக வயதுடைய சிவகாமியை மணக்கிருன். இந்த மணமான

வாலிபனால் காதலிக்கப்படும் ஊர்மிளாவும் திருமணமான வள். வயதில் முதிர்ந்த காத்தவராயனின் மனைவி. இவள் வீரசேகரனைக் காதலிக்கிறாள். மணமானவன் காதலிப்பது புதியதன்று. ஆனால் மணமான ஒருத்தி இன்னொருவனைக் காதலிப்பது சரித்திர நாவல்களில் காணாத ஒன்று. இப்படிப் பட்ட காதலைக் காட்டிய ஆசிரியர், காதலரை வாழவிடாமல் இறக்கச் செய்துள்ளமையும் குறிக்கத் தக்கதாகும்.

சுவைமிக்க இந்த நாவலில் பல உவமைகளும் வருணனைச் சொற்றொடர்களும் திரும்பத் திரும்ப வருகின்றன. ஆயிரத்து நானூற்றுக்கு மேற்பட்ட பக்கங்களைக் கொண்ட நாவலில் இதைப் பெரிதுபடுத்திக் கூறமுடியாதுதான், ஆனால், ஜனநாதனின் லட்சியம் இருமுறை வருவது சற்று நம் பொறுமையைச் சோதிக்கிறது. சோழ சாம்ராஜ்யத்தை ஏன் அழிக்க அவன் விரும்புகிறான் என்பதை ஜனநாதன் முத லில் வீரசேகரனிடம் கூறுகிறான். குலோத்துங்கன் காலத்து அரசியல் நிலை, மொழியின் வளர்ச்சி, சமயத்தின் ஆதிக்கம். ஜாதி வேற்றுமையின் நுழைவு முதலிய பலவற்றை இப்பகுதி யில் ஆசிரியர் தெளிவாகவும் சுவையாகவும் கூறுகிறார். ஆனால், இதே பேருரையை ஜனநாதன் வீரபாண்டியனிட மும் நிகழ்த்துகிறான். கதையில் அதைக் கேட்போர் வேறு வேறு மனிதர்தாம். ஆனால், படிப்பவர் ஒருவர்தானே? எனவே இது இரண்டாம் முறை வரும்போது அலுப்புத் தட்டுகிறது. இரண்டும் ஒரே பாகத்தில் அதுவும், அதன் பிற்பகுதியிலேயே அமைந்திருப்பதையாவது தவிர்த்திருக் கலாம் என்று தோன்றுகிறது.

நாவல் சுவைமிக்கதாயினும், சுவை பாகத்துக்குப் பாகம் மாறுபடுகிறது. வீரபாண்டியன் மனைவி நாவலின் முதல் பாகம் முழுச்சுவை நிறைந்தது என்றால், இரண்டாம் பாகம் முக்கால் சுவையுடையது; மூன்றாம் பாகம் கால்சுவையுடை யது. சுருங்கக் கூறின் இந்த நாவல் சென்று தேய்ந்து இறு தல் என்னும் குறையுடையது. மூன்றாம் பாகத்தின் சுவை, அதன் முதல் பாகத்துடன் ஒப்பிடும்போதுதான் குறைந்து

நிற்கிறதே தவிர, பிற நாவல்களுடன் ஒப்பிடும்போது அதுவே நிறைந்து சிறக்கிறது.

வீரபாண்டியனின் தோல்வியுடன் கதை முடிகிறது. அங்கேயே ஜனநாதனின் வெற்றி ஆரம்பமாகிறது. ஜன நாதனின் பிற்கால வரலாறு, இன்றும் சுவை நிறைந்தது என்பதைச் சரித்திரம் கற்றோர் அறிவர். அவன் சோழனின் மகளை மணம் செய்து கொள்வதையும், பிறகு வரும் சோழ மன்னனை எதிர்த்து அவனைச் சிறை செய்வதையும் சரித்திரம் கூறுகிறது. அந்தப் பகுதியை ஆசிரியர், இந்நாவலின் தொடர்ச்சியாக எழுதினால் தமிழர் பயன் பெறுவர்.

இன்று ஏறத்தாழ எல்லா எழுத்தாளரும் சரித்திர நாவல்களை எழுதுகின்றனர், அல்லது எழுத விரும்புகின்றனர். ஏராளமான சரித்திர நாவல்கள் வெளிவந்துள்ளன. நின்று நிலைக்கும் வன்மை பெற்றவை ஒரு சிலவே. அத்தகைய சிறந்த சரித்திர நாவல்களுள், 'வீரபாண்டியன் மனைவி' யும் ஒன்று. இந்நாவல் மூலம் அரு. இராமநாதன் சிறந்த சரித் திர நாவலாசிரியர்களுள் ஒருவராகி விட்டார். இவர் நாவலைப் படித்துச் சுவைத்துப் பாராட்டும் ரசிகர்களுக்கு இவர் செய்யக்கூடிய கைமாறு ஒன்று உண்டு. அது, 'வீரபாண் டியன் மனைவி' யைப் போல இன்னும் சில அரிய, புதுமை மிக்க சரித்திர நாவல்களைப் படைத்தளிப்பதுதான்.

இரண்டாம் நாள்

# தலைமை உரை

மீ.ப. சோமசுந்தரம்

இன்று இந்தக் கருத்தரங்கில் ஐந்து நண்பர்கள் ஐந்து நவீனங்களை ஆராய்கிறார்கள். ஆறாவது ஆசாமியாக, நானும் இந்த ஐந்து நவீனங்களையும் பற்றி ஐந்து குட்டிச் சொற்பொழிவுகள் செய்வது அவசியம் இல்லை என்று கருது கிறேன்!

தமிழ் எழுத்தாளர் சங்கம் இதுபோன்ற கருத்தரங்கு களை அடிக்கடி ஏற்பாடு செய்யவேண்டும் என்பது என் விருப் பம். இந்த அரங்கிலே நடப்பதுபோல ஓர் அறிஞர் ஒரு நவீ னத்தை எடுத்து ஆராய்ந்து மதிப்புரை வழங்குவதுபோல, ஒரு சில அறிஞர்கள் ஒரே நூலைப் பல கோணங்களிலிருந்து ஆராயும் முறையிலும் ஏற்பாடு செய்யலாம். அதோடு, ஒரே ஆசிரியரின் பல நவீனங்களையும் பல அறிஞர்கள் ஆராய்ந்து கருத்துக்கள் வழங்கலாம். இப்படி யெல்லாம் இலக்கிய ஆராய்ச்சிகள் நடத்தினால், இலக்கியம் வளர்வதற் குரிய ஆரோக்கியமான சூழ்நிலை உருவாக இடமுண்டு.

பொதுவாக, நம் காலத்தில் வாழ்ந்து வருகிற, நம் மோடு பழகுகிற, ஓர் ஆசிரியரின் எழுத்தை ஆராய்வதில் பல சிக்கல்கள் உண்டு. ஆராய்கிற அறிஞருக்கும் சிக்கல்கள்;

ஆராய்ச்சிக்கு உள்ளாகிற ஆசிரியருக்கும் சிக்கல்கள்! ஆனால் இந்தச் சிக்கல்களைக் கண்டு நாம் மனம் கூசவேண்டிய தில்லை.

சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு இடம் கொடாமல் இலக்கியத்தை ஆராய்வது யாருக்குமே கடினந்தான். மறைந்த ஆசிரியரின் எழுத்தானாலும் சரி; உயிரோடு இருக்கிற ஆசிரியரின் எழுத்தானாலும் சரி; விமரிசகன் தனது கோணல்களையும், வெறித்தனங்களையும் தனிப்பட்ட நட்பு அல்லது பகைமை உணர்ச்சிகளையும் முற்றிலும் மறந்து, அல்லது துறந்து, ஒரு நூலை ஆராய்வது என்பது ஒருவகையான யோக சாதனை! அந்த யோக சாதனை கைவந்தவர்கள் எந்த நாட்டிலும் எந்த மொழியிலுமே அபூர்வம்! ஆகையால் எழுதுகிறவன் விமரிசகனை மறந்துவிட்டுத் தனது கடமையைச் செய்துகொண்டே போகவேண்டும்! எழுதுவது என்பது அவனுடைய கர்ம யோகம். அதுபோல மதிப்புரை செய்வது என்பது விமரிசகனுடைய கர்ம யோகம்! அவரவர் தம் தம் கடமையைச் செய்துகொண்டே போனால், 'காலம்' என்னும் மாபெரும் விமரிசகன் எல்லா எழுத்துக்களையும் சேர்த்து 'காய்தல் உவத்தல்' இல்லாமல் தானே மதிப்பிடுவான்! பேனாவில் மையை அடைக்கும்போதே விமரிசகனை முன்னே நிறுத்திக்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டால், ஆபத்துத்தான்! அதிலும் சில விமரிசகர்களை மனக்கண் முன்னால் நிறுத்திவிட்டால், எண்ணங்கள் அப்படியே அமுங்கிப் போய்விடும்! சில திருஷ்டி வேகங்கள் அப்படி!

தமிழ் எழுத்தாளர்கள் எல்லாரும் இதயம் கலந்த உறவோடு ஒருவர் எழுதியதை மற்றவர் படித்துப் பார்ப்பது என்னும் பழக்கத்தை வளர்த்துக் கொண்டால், விமரிசனக் கலை வளர்வதோடு இலக்கியமும் வளரும். இந்த இரண்டுக்கும் மேலாக எழுத்தாளர்களின் உறவும் வளரும். தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் இலட்சியங்களில் ஒன்று நல்ல முறையில் நிறைவேறியதாகும்!

நாம் அனைவரும் ஒரு சமூகம். எழுத்தாளர்கள் என்ற ஒரு கலையினத்தைச் சேர்ந்தவர்கள் நாம்! நமக்குள் ஐக்கியம் வளர்வதிலும், இலக்கிய உறவு நம்மிடையே நிலைபெறுவதிலும், நமக்குள் எத்தனை கருத்து வேறுபாடுகள் இருப்பினும் அவற்றின் நடுவிலும் நல்லெண்ணமும் மதிப்பும் ஏற்படுவதிலும், இத்தகைய கருத்தரங்குகள் பெரிதும் துணை செய்யும். அவ்வாறு துணை செய்வதற்கு இறைவன் துணை செய்யவேண்டும் என்று இறைஞ்சுகிறேன்!

## தேவனின்
# மிஸ்டர் வேதாந்தம்

---

**ராஜேஸ்வரி நடராஜன்**

தமிழ் நாட்டின் சிறந்த எழுத்தாளர்களுள் ஒருவராக விளங்கியவர் திரு. தேவன். அவருடைய அரிய படைப்புக் களிலே ஒன்றுதான் மிஸ்டர் வேதாந்தம். தேவனுடைய நாவல்களிலே சிறந்த இரண்டு நாவல்களைத் தேர்ந்தெடுக்கச் சொன்னல், முதலில் 'லட்சுமி கடாட்சத்தை'யும், அடுத்து 'மிஸ்டர் வேதாந்த'த்தையும்தான் தேர்ந்தெடுப்பேன் நான். நண்பர் ஒருவர் சொன்னர்: ''தேவனுடைய 'ஜஸ்டிஸ் ஜகந் நாதன்' பிரமாதமாயிருக்குமே'' என்பதாக. இருக்கலாம். ருசியில் வேறுபாடு இருப்பது இயற்கைதானே ?

'மிஸ்டர் வேதாந்தம்' ஏறத்தாழ பத்துப் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு முன்னர் ஆனந்த விகடனிலே வாராவாரம் தொடர்ந்து வெளியான நாவல் என்பது பலருக்கு நினை விருக்கலாம். அவ்வப்போது அவற்றைப் பிரித்தெடுத்து, தொகுத்துப் புத்தகமாக்கி வைத்திருந்தால்தான் உண்டு. இன்று புத்தகக் கடையிலே காசு கொடுத்து மிஸ்டர் வேதாந் தத்தை விலைக்கு வாங்கிவிட முடியாது! 'மிஸ்டர் வேதாந் தம்' என்ன, தேவனுடைய படைப்புக்களில் எதுவுமே நூல் வடிவில் இதுவரை வெளிவரவில்லை. 'அது பெரிய சோகக்

கதை'—என்று விஷயம் தெரிந்த வட்டாரத்தில் கூறலாம். எப்படியிருந்த போதிலும் அது பெரும் குறைதான். அந்தக் குறை நீங்கவேண்டும். தேவனுடைய நாவல்களிலே நாம் பெற்ற இன்பத்தை வழிவழியாக நமது குழந்தைகளும் பெற வேண்டும். அதற்கு எழுத்தாளர் சங்கம் முயற்சி செய்வது மிக மிக அவசியம்.

இனி விஷயத்துக்கு வரலாம்.

மிஸ்டர் வேதாந்தம் என்ற நாவல் ஒரு நல்ல தமிழ் நாட்டுக் கதை. தஞ்சை ஜில்லாவிலே, தூத்துக்குடி கிராமத்திலே பிறந்து வளர்ந்த வேதாந்தம் என்ற இளைஞன்தான் கதாநாயகன். அவன் அத்தை மகள் செல்லம்தான் கதாநாயகி. இவர்கள் இருவரையும் சுற்றியே கதை பின்னிப் படர்கிறது. கதை அம்சம் என்று எடுத்துக்கொண்டோமானல் அது மிஸ்டர் வேதாந்தத்திலே குறைவுதான். வேதாந்தம் ஓர் அப்பாவி இளைஞன். கஷ்டம் என்பதே இன்னதென்று தெரியாமல், செல்லப் பிள்ளையாய் வளர்ந்தவனை தந்தையின் ஊதாரித்தனமும், ஆடம்பரமும் கடனாளியாக்கி விடுகின்றன. தந்தையையும் இழந்து, உறவினரின் நயவஞ்சகத்தால் சொத்துக்களையும் இழந்து மனம் ஒடிந்து வேதாந்தம் தவிக்கும் நிலையில், அத்தையும் அத்தை பெண் செல்லமும்தான் ஆதரவாக இருக்கிறார்கள். எப்படியாவது சுயமாக உழைத்துப் பிழைத்து முன்னேறி, அதன்பின் செல்லத்தை மணப்பது என்ற திட சங்கற்பத்துடன் சென்னைக்கு ரயிலேறுகிறான், வேதாந்தம். சென்னையிலோ அந்த அப்பாவிக்கு மேலும் வேதனை தரும் பலதரப்பட்ட அனுபவங்கள் காத்திருக்கின்றன. எத்தனை எத்தனையோ இன்னல்களுக்கிடையிலும் எழுத்தாளனாக வேண்டும் என்ற ஆர்வமும் ஊக்கமும் குறையவே இல்லை. துன்பத்தால் அவன் தளர்கின்றபோதெல்லாம் ஸ்வாமி என்ற நண்பர் ஒருவர் வலிய வந்து அவ்வப்போது அவனைக் கவனித்துக் கொள்கிறார். அவருடைய உதவியால் வேதாந்தம் முடிவில்,

வெற்றி வீரஞக, பத்திரிகை ஆசிரியஞகப் பொறுப்பேற்று, செல்லத்தின் கரம் பற்றுகிருன்.

இதுதான் கதை.

எளிய கதைதான் என்ருலும், இனிமையும் உருக்கமும் நிறைந்து உள்ளத்தைத் தொடும் கதை. கதை என்று சொல்வதைக் காட்டிலும், வேதாந்தத்துக்கு ஏற்படும் அனுபவங்களின் கோர்வை என்ருலும் இன்னும் பொருத்த மாக இருக்கும். கிராமீயச் சூழ்நிலே, நாகரிகம் மிகுந்த சென்னையில் தகிடுதத்தங்கள், மனிதர்களின் விசித்திரமான மஞேபாவங்கள்—பற்றிச் சுவைபடக் கூறுகிருர் நாவலாசி ரியர். இந்த நாவலிலே வருகின்ற பத்திரிகை ஆசிரியர் ஒருவர் வேதாந்தத்துக்கு அறிவுரை கூறுகின்ருர், ''நீங்கள் எழுதுகின்ற கதை தமிழ் நாட்டுக் கதையாக இருக்க வேண்டும். கதைப் பாத்திரங்களைப் பார்க்கும்போது எங்கேயோ பார்த்திருக்கிருேமே என்று பிரமை தட்ட வேண்டும்''—என்று. மிஸ்டர் வேதாந்தம் நல்ல தமிழ் நாட்டுக் கதை மட்டுமல்ல, நமது தமிழ்ப் பண்பாட்டை அழகாக விளக்கும் கதையும்கூட. கதையில் நடமாடுகின்ற பாத்திரங்கள் ஒவ்வொன்றையும் பார்க்கின்றபோது எங்கேயோ பார்த்திருக்கிருேமே என்ற பிரமையும் அடிக்கடி ஏற்படுவதுண்டு!

கதையிலே எத்தனையோ பாத்திரங்கள். கதாநாயகஞக வரும் வேதாந்தம் ஆரம்பம் முதல் கடைசி வரை உலகத்தின் சூது வாது புரியாத அப்பாவிப் பையஞகவே சித்தரிக்கப் படுகிருன். புத்தகத்தைப் படித்து முடித்து கீழே வைத்த பின்னரும்கூட அந்த அப்பாவி, தன் கட்டுக் குடுமியுடன் நம் கண்முன் நின்றுகொண்டே இருக்கிருன். சந்தானம் ஐயங்கார் என்பவர் வீட்டுக் குழந்தைகளுக்கு 'ட்யூஷன் மாஸ்டராகப் போய், அவர்களிடமே இவன் பாடம் கற்றுக் கொள்ளும்படியாகி விடுகிறது! கல்கத்தா சர்மாதான் என்ன, இந்த அப்பாவி வேதாந்தத்தை என்ன ஆட்டம்

ஆட்டுவிக்கிறார். அங்கிருந்து தப்பித்தோம் பிழைத்தோம் என்று விடுபட்டு சென்னைக்கே வந்து விடுகிறான். சென்னையிலும் வெங்கட், ராம் என்ற பித்தலாட்டக்காரர்களின் கையிலே சிக்கி, அவர்கள் வாய்ச் சவுடாலிலே மயங்கி கையிலிருந்த பணத்தையும் அல்லவா கோட்டை விட்டுவிடுகிறான். இப்படி அடிமேல் அடியாக விழுந்து அவன் தவிக்கின்ற தவிப்பு! இவையெல்லாம் அந்தப் பாத்திரத்தின்பால் நமக்கு அன்பையும் அனுதாபத்தையும் ஏற்படுத்தி விடுகிறது. இந்த அம்மாஞ்சிக்கு வாய்த்த அத்தங்காள் செல்லம் இருக்கிறாளே, அழகிலே ரதிதான். ஆசிரியர் எடுத்த எடுப்பிலே வர்ணிக்கிறார் அவளை. 'கழுத்தில் ஒரே வடம் சங்கிலி. கையில் ஒரேயொரு ஜோடி வளை. காதில் சின்னஞ்சிறிய வெள்ளைத் தோடு. உடுத்தியிருந்தது சாதாரண சீட்டிச் சித்தாடை. என்றாலும் கொழு கொழு வென்று கரும் பட்டென வளர்ந்த நீண்ட கேசமும், தளதளவென்று உருட்சியுடன் விளங்கிய அங்கங்களும், அந்த ஸந்தான ரங்காச்சாரியாரின் குடும்பத்துக்கே உரித்தான எடுப்பான நாசியும், எல்லாவற்றிற்கும் மேலாக ஸ்திரீ ஜாதிக்கே இயற்கையாக வந்துவிடும் தளுக்கும் குலுக்கும் அவளை ஒரு ரதியாகத் தோன்றச் செய்ததென்பது சாதாரணமாக எதிர்பார்க்க வேண்டிய ஒரு முடிவுதான்—'. இந்த ரதியிடத்திலே அம்மாஞ்சி மயங்கியதிலே வியப்பென்ன இருக்கிறது? இந்தச் செல்லத்துக்கும்தான் அம்மாஞ்சியிடத்திலே எவ்வளவு அன்பு, நம்பிக்கை. அவள் வழிபடுகின்ற ஆஞ்சநேய மூர்த்தியிடத்திலேதான் எத்தனை ஆழமான பக்தி. அவளது அன்பும், பக்தியுமே வேதாந்தத்துக்கு பக்கபலமாக அமைகின்றனவே! அன்பும் அமைதியும் நிறைந்த அழகியாக நம் நினைவிலே நிலைக்கிறாள் செல்லம்.

கதா நாயகனுக்கும், கதாநாயகிக்கும் அடுத்தபடியாகக் கதையிலே நம் கவனத்தைக் கவருகிறவர் ஸ்வாமி என்ற பாத்திரம். லேசுப்பட்ட பாத்திரமா அது! கதாநாயகன், கதாநாயகி இருவர் மீதும் ஆதிக்கம் செலுத்தும் பாத்திர

மல்லவா? அவ்வப்போது வேதாந்தம் அவதிப்படும் போதெல்லாம் ஆபத்பாந்தவராகத் தோன்றி, அவனுக்குத் தேவையான உற்சாகத்தை வாரி வழங்குகிறுர். அளவுக்கு மீறிய சோதனைகள் அடுத்தடுத்து வந்து வேதாந்தத்தை அலேக்கழிக்கும்போது, நமக்கு 'ஐயோ, பாவம்!'—என்றிருக்கிறது. நாம் அப்படியே அனுதாபத்தில் மூழ்கி விடாதபடி ஸ்வாமி ஆஜராகி நகைச் சுவையாக எதையாவது சொல்லி, சூழ்நிலேயின் இறுக்கத்தைத் தளர்த்தி, கதையையும் சகஜ நிலேக்குக் கொண்டு வந்து விடுகிறுர். ஸ்வாமி வருகிற இடமெல்லாம் கதையிலே கலகலப்புத்தான். அவரது முரட்டுத் தனமான பேச்சும், அடாவடியும் கதை முடியும் வரை காதில் ஒலித்துக் கொண்டேதான் இருக்கும். அவருக்கும் அவரது மனேவி பூமாவுக்கும் இடையே ஒரு ரஸமான சம்வாதம். வஸந்தா என்ற பெண்ணேயும், அவள் தந்தையையும் பூமாவுக்கு அவ்வளவாகப் பிடிப்பதில்லே. அதைச் சுட்டிக் காட்டுகிறுர் ஸ்வாமி.

ஸ்வாமி:- உனக்கு அவர்களேக் கண்டாலே துவேஷம். அப்படித்தான் பேசுவாய்.

பூமா:- அப்படியானுல் உங்கள் மாதிரி நானும் நான்ஸென்ஸ் என்றுதான் பதில் சொல்லவேண்டும்.

ஸ்வாமி:- நான்ஸென்ஸ்.

பூமா:- செல்லம் இருக்கிறுளே, ரொம்பப் புத்திசாலி.

ஸ்வாமி:- நீ புத்திசாலி என்ருல், அதற்கு அர்த்தமே இல்லே, போ.

பூமா:- நான் உங்களேச் சிலாகித்துக் கொள்கிறபோதெல்லாம் சந்தோஷப்படுவீர்களே, அதற்கென்ன அர்த்தம்?

ஸ்வாமி:- 'கெட் அவுட்'

நான்ஸென்ஸூம், கெட் அவுட்டும் இந்த மனிதரிடத்திலே அகப்பட்டுக் கொண்டு படுகிறபாடு! கோபிக்கிருரா, இல்லே குணமாய்ப் பேசுகிருரா என்றே தெரியாமல்

போய்விடுவதுமுண்டு. இன்னொரு சந்தர்ப்பத்திலே பேசுகிருர், ''பேசாதே பூமா! இந்த வேதாந்தத்தை நான் மன்னிக்கவே மாட்டேன். நான் பாட்டுக்கு இந்த வஸந்தா கல்யாணத்தை நடத்தியிருந்தால், அத்தைக் கிழவி மண்ணே வாரி இறைப்பாள். இந்தப் பெண் செல்லம் குடம் குடமாகக் கண்ணீரைக் கொட்டும், என் கதி என்ன. ஒரே சேறும் சகதியுமாய்ப் போகுமே.''

பூமா சிரிக்கிருளோ, இல்லையோ, நாம் சிரித்தே விடுகிருேம். ஸ்வாமியின் இளகிய மனதையும், அதை ஒரு பொய்ப் போர்வையால் போர்த்தி உலகத்தை வேறு விதமாக எண்ணும்படிச் செய்யும் பண்பையும் அழகாகச் சித்தரித்து, ஸ்வாமி என்ற குண சித்திரத்தை வாசகர்கள் என்றென்றும் மறக்க முடியாதபடி செய்துவிடுகிருர் ஆசிரியர் தேவன். ஸ்வாமியின் பாத்திரம் அபூர்வமான பாத்திரம் மட்டுமல்ல, அற்புதமான பாத்திரமும்கூட. ஸவாமியைப் போலவே சிங்கம் என்று இன்னொரு பாத்திரம். ஸ்வாமிக்குத் தம்பிதான். ஸ்வாமி அளவு நமது கவனத்தைக் கவரா விட்டாலும், ஸ்வாமியின் அடாவடிக்குப்பதிலடி கொடுப்பதிலும் கதைக்குக் கலகலப் பூட்டுவதிலும் சோடை போகவில்லை என்றே சொல்லலாம். ஸ்வாமியையும் சிங்கத்தையும் போல் உதவக் கூடியவர்கள் இருந்து விட்டால், வேதாந்தம் மட்டுமென்ன, யார் வேண்டுமானுலும் முன்னேறி விடலாம்!

இதுவரை குறிப்பிட்ட முக்கிய பாத்திரங்களைத் தவிர கதையில் இன்னும் எத்தனை எத்தனையோ பாத்திரங்கள். ஒவ்வொன்றும் தனித் தன்மையோடு இயங்குவதையும் பார்க்கிருேம். வைரம் கோபாலஸ்வாமி, ரங்கநாதம்— இவர்கள் மிகைபடக்கூறப்பட்ட பாத்திரங்களாகத் தோன்றினுலும் நம்ப முடியாத பாத்திரங்களாகத் தோன்றவில்லை. கதையிலே ஒவ்வொரு பாத்திரமுமே அததற்குரிய பண்போடும் தனித் தன்மையோடும், வரம்போடும்—சிருஷ்டிக்கப்பட்டிருப்பதே நாவலின் வெற்றிக்கு பெருமளவில் உதவி செய்கிறது என்று கூடச் சொல்லலாம்.

கதை இளம் எழுத்தாளனைப் பற்றியதாகையால் ஆசிரியர் தேவன் அங்கங்கே பொருத்தமாக, தம்முடைய அனுபவத்திலிருந்து சில மணியான உரைகளைத் தரவும் மறக்கவில்லை—பத்திரிகைத் தொழிலைப் பற்றிப் பேசுகிறார். 'ரொம்பச் சிரமமான தொழில் இது. என்றைக்கும் தொந்தரை. நேற்றைக்கு நன்றாக எழுதியிருந்தேனே என்பதற்காக இன்றைக்கு உம்மை யாரும் விரும்பிப் படிக்க மாட்டார்கள். அன்றாடம் பேர் சொல்ல வேண்டும்......... எழுத்தாளன் எழுதிக் கொண்டே இருக்கவேண்டும். பேனாவைச் சற்று ஒதுப்புறமாக வைத்து ஓய்வு கொடுத்து விட்டால் அப்புறம் அதன் அருகில் கையைக் கொண்டு போவது சிரமம். பேனாவும் கனக்கும், அதைக் காகிதத்தில் ஓட்டுவது தேர் இழுக்கிற மாதிரி இருக்கும். படிக்கிற பேருக்கும் உலுக்கு மரம் போடுகிற மாதிரி தோன்றும். பேனா ஓடிக்கொண்டே இருக்கவேண்டும். அப்போதுதான் எழுத்தாளனுக்கும் எளிது. வாசகருக்கும் சுகம்.'

நாவல் முழுவதும் தேவனுடைய பேனா ஓடிக்கொண்டே யிருக்கிறது வெகு லாகவமாக. வாசகர்களும் சுகமாக அனுபவித்துக் கொண்டே இருக்கிறார்கள். புத்தகத்தைப் படித்து முடித்த பின்னரும் அலுப்பே தெரிவதில்லை. சிங்கம் வேதாந்தத்தின் கட்டுரை யொன்றைப் படித்து விட்டுச் சொல்கிறார், ''எத்தனை பக்கங்கள் படித்திருக்கிறேன்—ஆனால் அவ்வளவு படித்த மாதிரி ஒரு சோர்வு வரவில்லையே. ஜிலு ஜிலு வென்று இளநீர் ஐயா இளநீர். ஓட்டம் ஓட்ட மாகவல்லவா ஓடுகிறது!'' இந்த வார்த்தைகள் இந்த நாவலுக்கும் மிக அருமையாகப் பொருந்துகிறது.

தேவனுடைய பாத்திரங்களிடத்திலே நாம் சிறப்பாகக் காணக்கூடியது பக்தி அம்சம். தேவனே நல்ல முருக பக்தர். ஆகவே அவரது பாத்திரங்களையும் அந்தப் பக்தி உணர்வு உடையவர்களாகவே படைத்துவிடுகிறார். அந்த உணர்வு வாசகர்களை வசீகரித்து பரவசமூட்டத் தவறுவதுமில்லை. மிஸ்டர் வேதாந்தமும் அந்த விதிக்கு விலக்கல்ல—ஆஞ்சநேய

மூர்த்தியும், சிக்கல் சிங்காரவேலனும் அங்கங்கே நமக்குப் பரவச மூட்டவே செய்கிறார்கள். கதையின் மிகச் சிறப்பான அம்சம் இதுதான் என்று கூடச் சொல்லலாம். இப்படியெல்லாம் நினைத்த மாத்திரத்திலே எளிதாக எழுதிவிடவும் முடியாது. அதற்கும் உள்ளத்திலே ஒரு பக்குவம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

வேதாந்தத்தின் கட்டுரையைப் படித்து விட்டு, சிங்கம் பாராட்டுகிறார் ஓர் இடத்திலே. ''அவருக்குக் கிடைத்த அருமையான சந்தர்ப்பம் இது. அதை நன்றாய்ப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். சில இடங்களில் அற்புதமாக எழுதியிருக்கிறார். ஹிருதயத்தில் ஒரு ஒளி இல்லாவிட்டால் அப்படி எழுத்தில் யாருக்கும் வராது'' என்று. உண்மை, தேவன் உள்ளத்திலே ஒளி இருந்தது. வாக்கிலும் ஒளி பிறந்தது. நமக்கு நல்லதொரு நாவலும் கிடைத்தது.

## ஆர். சண்முகசுந்தரத்தின்

# நாகம்மாள்

**தி. க. சிவசங்கரன்**

ஆர். ஷண்முக சுந்தரத்தின் 'நாகம்மாள்' ''பிரபல மான'' சமூக நாவல் அல்ல! ஆனால், மிகுந்த இலக்கிய நய முள்ள நாவல்; சுமார் 25 ஆண்டுகளுக்கு முன்பு வெளிவந்த ஒரு 'மணிக் கொடி'' எழுத்தாளரின் படைப்பு.

27 அத்தியாயங்களும், 124 பக்கங்களுமுள்ள ''நாகம் மாள்'' ஒரு தத்ரூபமான கிராமிய இலக்கியம். அதனால் தான் தமிழ்ப் பெருமக்களின் இதயத்திலே இடம் பிடிக்க, அதற்கு இத்தனை காலம் போலும்!

1941-இல் வெளிவந்த இந்நாவலை, நான் ஒரு சிறிய இதிகாசமாகவே (Minor clasic) கருதுகிறேன். கடந்த கால் நூற்றாண்டுக் காலத்திய தமிழ் நாவல்களில், ஒரு தலைசிறந்த படைப்பாக மதிக்கிறேன்.

நான் இந்த முடிவுக்கு எப்படி வந்தேன் என்பதை விளக்க வேண்டுமல்லவா?

என் உரையை, கதை—கட்டுக்கோப்பு—நடை என்ற மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கொள்கிறேன்.

## கதை

சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்பு, மின்சார ஒளி பரவாத கோவை மாவட்டச் சிற்றூர் ஒன்றிலே, கதை நிகழ்கிறது.

கொங்குச் சீமையிலே சிவியார் பாளையம் என்ற சிற்றூர். அங்கு சின்னப்பன் குடும்பமும் மிகச் சிறியது தான்.

சின்னப்பன், அவன் மனைவி ராமாயி, அண்ணி நாகம்மாள், அவளது குழந்தை முத்தாயா ஆகிய நால்வரே அந்த விவசாயக் குடும்ப உறுப்பினர்கள்.

நாகம்மாளின் கணவன், சில ஆண்டுகளுக்கு முன்பு, உடம்பிலே வாணம்பட்டு இறந்து விடுகிறான். அன்று முதல், தானே குடும்பத் தலைவியாக இருந்து, எல்லாக் காரியங்களையும் கவனித்து வருகிறாள் நாகம்மாள்.

எனினும், கடந்த ஓராண்டாகவே அவள் நெஞ்சில் பிரிவினை எண்ணம் முளைவிடத் தொடங்கிவிட்டது. இதற்குக் காரணம், சின்னப்பனின் மாமியார் காளியம்மாளும், அவ்வூரிலுள்ள எதிர்க்கட்சியும்தான்.

அக்கிராமத்தில் இரு கட்சிகள். சின்னப்பனும் அவனது உறவுக்காரரும் ஒரு கட்சி; மணியக்கார ராமசாமிக் கவுண்டரும், அவரது மந்திரிப் பிரதானிகளும், அடியாட்களும் மற்றொரு கட்சி.

இந்தக் கட்சி விவகாரம், முந்திய தலைமுறையில் துவங்கியது. அன்று சின்னப்பனின் தந்தை ராமசாமி கவுண்டர்தான் ஊரிலே என்ன சச்சரவு நடந்தாலும் பஞ்சாயத்துச் செய்வார். இன்றைய மணியக்காரரின் தந்தையான அன்றைய மணியக்காரருக்கு அது பிடிக்கவில்லை. எனவே பொய்க் கேஸ்கள், அபராதங்கள், குட்டிக் கலவரங்கள் இப்படியாகப் பகை வளர்ந்தது.

நாளாவட்டத்தில் சின்னப்பனின் கை இளைக்க, மணியக் காரரின் கை வலுக்கிறது.

இந்நிலையைக் கண்டு அஞ்சி, தன் மகள் ராமாயியையும், மருமகன் சின்னப்பனையும் தன் வீட்டோடு குடியேற்ற விரும்புகிறாள், காளியம்மாள். அவள் மருமகனின் நிலத்தை விற்க முனைகிறாள்; ஆனால், குடும்பத் தலைவியான நாகம்மாளின் எதிர்காலத்தில் அக்கறை காட்டவில்லை.

ஒரு நாள் காளியம்மாள் தனது அந்தரங்கத்தைப் பொது மனிதன்போல் சின்னப்பன் வீட்டுக்கு வந்து கொண்டிருந்த கெட்டியப்பனிடம் கூறுகிறாள். அவன் அதை மணியக்காரரிடம் கூற, மணியக்காரரும், அவரது மந்திரி நாராயண முதலியும் கெட்டியப்பனைத் துருப்புச் சீட்டாகப் பயன் படுத்தி, சின்னப்பன் குடும்பத்தைச் சீரழிக்கத் திட்டமிடு கின்றனர்.

கெட்டியப்பன், அந்தக் கிராமத்துப் போக்கிரி. குடியிலும் தீனியிலும் சொத்து அனைத்தையும் தீர்த்துவிட்டு, மதயானைபோல் வாழ்பவன்.

இந்த முரடன்மீது இப்போது நாகம்மாளுக்கு ஒரு அலாதி அபிமானம். அவனது இருப்பிடம் சென்று, பண்டம் பலகாரங்களைக் கொடுத்து, குடும்பப் பிரச்னைகளை அலசு கிறாள்.

கெட்டியப்பன், பாகப்பிரிவினைக்காகச் சண்டை போடும்படி, நாகம்மாளிடம் உருவேற்றுகிறான். மணியக்காரரும், அவரது மந்திரியும் தமது 'மகத்தான' ஆதரவைத் தெரிவிக் கின்றனர்; நேரடி நடவடிக்கைக்குத் தூண்டுகின்றனர்.

அவர்களது திட்டம், மிகப் பயங்கரமானது. முதலில் சின்னப்பன் குடும்பத்தைப் பிளந்து, பரம்பரைப் பகையைத் தீர்த்துக் கொள்வது; பின்னர், நாகம்மாளின் நிலத்தை மெல்ல அபகரித்துக் கொள்வது. அதாவது, பறவையைக்

கூண்டிலிருந்து விடுவிக்கும் பாவனையில், அதன் இறக்கைகளை நறுக்கிக் கொல்வது!...

ஆணவம், ஆத்திரம், அவநம்பிக்கை, துர்ப்போதனை ஆகியவற்றுக்கு இரையான நாகம்மாள், ஒரு நாள் சின்னப் பனிடம் பங்கைக் கேட்கிறாள்.

''ஓஹோ, பங்கு வேணுமா? செரி. எந்தக் காமாட்டிப் பயெ கேக்கச் சொன்னானோ அவனெ வரச்சொல்'' என்று ஒரே போடாகப் போட்டு விடுகிறான், அவன்.

நாகம்மாள் 'கப்சிப்'பென அடங்கிவிட்டாள். ஆனால் சல்லியர்களும், சகுனிகளும் அவளை விடவில்லை. பிரிவினை வெறியை மூட்டிக்கொண்டே இருக்கின்றனர்.

ஒரு நாள் மைத்துனனின் மரணச் சேதி வருகிறது. சின்னபபன் தன் மனைவியுடன் மாமியார் வீடு செல்கிறான். இந்த நல்வாய்ப்பை ''மும்மூர்த்தி''களும் பயன்படுத்திக் கொண்டு, சின்னப்பன் வீட்டிலே விருந்துண்டு, நாகம்மா ளின் கலக்கத்தைத் தெளிவிக்கின்றனர். அவள் இதயத் திலே பிரிவினைப்பேய் ஓயாது கூத்தாடுகிறது!

சின்னப்பன் ஊர் திரும்பியதும். நாகம்மாள் ஓர் அதிர்ச்சி வைத்தியம் செய்கிறாள். அதாவது, அந்தக் குடும் பத்தையும் தனது குழந்தையையும் விட்டுப் பிரிந்து, மணியக் காரர் வீட்டில் குடியேறி விடுகிறாள்!

மணியக்காரர் அவளை வீடு திரும்பச் சொல்கிறார்.

''நா அந்தப் பக்கம் தலெ வெச்சுப் படுக்க மாட்டே; அவர்கள் கொளமரத்தைத் தெரிந்த பிற்பாடு, அங்கு இருக்க லாமா? உங்களெநா நம்பினே. நீங்க எப்பிடி உட்டாலும் சரி.'' என்று பிடிவாதமாகப் பேசுகிறாள், நாகம்மாள்.

மணியக்காரர் குழுவுக்குக் கொண்டாட்டமாகி விடு கிறது!

''நாளைக் காலையில் ஏற்றம் இறைக்கச் சின்னப்பன் வருவான். அப்போது நீ அவனைத் தடுத்து நிறுத்தவேண்டும். விவகாரம் வரும்போது, அக்கம்பக்கத்தாருடன் சென்று நாம் பஞ்சாயத்துச் செய்யவேண்டும்'' என்று மந்திரி முதலியார் யோசனை சொல்ல, அனைவருக்கும் திருப்தி ஏற்படுகிறது.

மறுநாள் காலையில், சின்னப்பன் தோட்டத்துக்கு ஏற்றம் இறைக்க வரும்போது, நாகம்மாள் அப்படியே செய்து விடுகிருள்!

''உங் கையெக் காலெ முறுச்சிருப்பே; எனக்கு வந்த கோவத்தை அடக்கீட்டே! ஓடிப் போ, என் முன்ஞலே நிக்காதே!'' என்று உறுமுகிருன் சின்னப்பன்.

''என்ன? நாஞ ஓடறது? என் தலை துண்டாத்தாம் போவட்டுமே!'' என்ருள் நாகமாம்ள்.

''அவ்வளவு தைர்யமா உனக்கு? அப்படீஞ இன்னக்கி அடிதடிக்கினே ஆளுகளயும் வரச் சொல்லி இருக்கிறயா? ஒரு கை பாத்துட்டுத்தாம் போக உத்தேசமா?'' என்று சீறுகிருன், சின்னப்பன்.

அச்சமயம் கெட்டியப்பனும், அவனது நண்பன் செங்காளியும் மூக்கு முட்டக் குடித்துவிட்டு, கையில் தடியுடன் நாகம்மாளின் துணைக்கு வருகின்றனர்.

சின்னப்பன் கடுங்கோபத்தோடு அவர்களை வைகிருன்.

ஆத்திரமுற்ற கெட்டியப்பன், கைத்தடியால் அவன் மண்டையில் ஓங்கி அறைந்து விடுகிருன்; கைத்தடி சின்ஞபின்னமாக முறிகிறது.

இரத்த வெள்ளத்தில் கிடக்கும் சின்னப்பனின் உயிர் பிரிகிறது. குழந்தை முத்தாயா 'கீச்'செனக் கத்தி, ராமாயியைத் தழுவுகிறது; அவள் 'ஹோ'வெனக் கதறிக் கொண்டு கணவன்மேல் விழுகிருள்...

இதுதான் கதை. காதல் நிகழ்ச்சிகளோ, கிளர்ச்சி யூட்டும் சம்பவங்களோ இல்லாத இந்தக் கதையை வைத்துக் கொண்டு, ஓர் அருமையான நாவலை எழுதியிருக்கிறார், ஆர். ஷண்முக சுந்தரம்.

ஆர்ப்பாட்டமில்லாத] கதைப் போக்கு; உயிர்த் துடிப் புள்ள பாத்திரப் படைப்பு; தெள்ளத் தெளிந்த சொல் லாட்சி—இவையே இந்நாவலின் சிறப்பியல்புகள்.

## பாத்திரப் படைப்பு

இந்நாவலின் பாத்திரப் படைப்பைச் சற்று நோக்கு வோம்.

நாகம்மாள், சின்னப்பன், ராமாயி, முத்தாயா, காளி யம்மாள், கெட்டியப்பன், மணியக்கார ராமசாமிக் கவுண்டர், மந்திரி நாராயண முதலி ஆகியோர் இந் நாவ லின் முக்கிய பாத்திரங்கள். இவர்களின் ஒரு சிலரை யேனும் நாம் தெரிந்து கொள்ளவேண்டும்.

நாகம்மாளை எடுத்துக் கொள்வோம். கதாநாயகி யான அவள், இந் நாவலில் 17 அத்தியாயங்களில் நடமாடு கிறாள்.

முதல் அத்தியாயத்திலேயே வெங்கமேட்டுச் சந்தை யிலிருந்து, மாலையில் வீடு திரும்பும் பெண்களுடன் நாம் அவளைச் சந்திக்கிறோம். அப்பொழுது ஆசிரியர் எழுது கிறார் :

''எறும்புச் சாரை போல் அவர்கள் போகும் தினுசு வெகு அழகாயிருந்தது. அப்போது மணியடித்தது போல, ஒரு குரல் எழுந்தது. முன்பின் போகிற பத்து முப்பது பேரும் 'கப்'பென்று பேச்சை விட்டனர்.

'''நா' எல்லா வாங்கியும் ஒண்ணெ மறந்திட்டேனே!'' என்று கணீரெனும் ஒரு குரல் எழுந்தது.

''யார் இந்த வெண்கலத் தொண்டையில் பேசியது? பெண்ணுக்கா பிரமன் இவ்விதமான குரல் மகிமையை அளித்தான்? இந்தப் பெண் நாகம்மாள், கணவன் இறப்பதற்குப் பத்து வருஷத்திற்கு முன்பிருந்தே ஒரு 'ராணி' போலவே நடந்து வந்திருக்கிருளென்றும், பிறருக்கு அடங்கி நடக்கும் பணிவும் பயமும் என்னவென்றே அவள் அறிய மாட்டாளென்றும் இப்போது குறிப்பிட்டாலே போதும்.'' என்று நாகம்மாளை நமக்கு அறிமுகம் செய்து வைக்கிருர் ஆசிரியர். (பக்கம் 7)

ராணியைப்போல் கர்வங்கொண்ட நாகம்மாள், சின்னப்பனின் மனைவி ராமாயியை அதட்டி அதிகாரம் செய்கிருள்; ஆனுல், மாரியம்மன் உற்சவத்தின்போது, ஏழை எளியவர்களைத் துன்புறுத்தும் கெட்டியப்பனின் அட்டகாசங்களை ரசித்து மகிழுகிருள்; அவனிடம் பேசிச் சிரிக்கிருள்; பூஜை முடிந்து எல்லோரும் வீடு திரும்பும் போது, கோவிலுக்குப் பின்புறத்தில் கெட்டியப்பனுக்கு மடியிலிருந்து என்னவோ எடுத்துக் கொடுக்கிருள்!

நாகம்மாள்—கெட்டியப்பன் நட்பு சின்னப்பனுக்கும் ராமாயிக்கும் பிடிக்கவில்லை. அவர்கள் மனத்துக்குள் குமுறுகிருர்கள். இக் குமுறல் நாகம்மாளுக்கும் தெரிந்து விடுகிறது. எனவே, வீட்டிலும் விவசாய வேலைகளிலும் அவளது சண்டித்தனம் அதிகரிக்கிறது.

ஒரு நாள் தோட்டத்தில் எள் விதைப்பு; சின்னப்பன் உழுது கொண்டிருக்கிருன்; சந்தேகமும் வெறுப்பும் குமிழியிட, நாகம்மாள் கூடையிலிருந்து எள்ளைக் குத்துத் குத்தாக வாரி இறைக்கிருள்!

நண்பகலில் வரப்போரத்தில் உட்கார்ந்து கசப்புடன் சிந்திக்கிருள்: ''இந்த மாதிரிக் கானலிலும் காற்றிலும் உழைத்து என்ன பயன்? ஏன் இப்படி இவர்களுடன் ஒட்டுக் குடியாக வாழ வேண்டும்? இந்தப் பரந்து கிடக்கும் காட்டிலும் தோட்டத்திலும் என் கணவனுக்குச் சேரவேண்டிய

பாகம் பாதி இல்லையா? நானும் என் குழந்தையும் ஏன் சுகமாகக் காலத்தைக் கழித்துக்கொண்டு போகக் கூடாது? என் குழந்தைக்கு அழகான சீலை, ஒரு நகை நட்டு பண்ணிப் போட்டுப் பார்த்தால் எப்படி இருக்கும்? மாதத்திற்கு நாலு பேருக்குக் குறையாமல் அவர்களுக்கு வேண்டியவர்கள் சொந்தம் பாராட்டிக் கொண்டு வந்து விடுகிருர்கள். இதெல்லாம் யார் சம்பாதித்தது?'' என்று பொருமுகிருள் நாகம்மாள்.

''நல்லதோ, கெட்டதோ எதுவும் இப்படித்தான். ஒரு சிறு வித்து எப்படிப் பிஞ்சும் பூவும் குலுங்கும் விருட்சமாகி அதன் நிழலிலேயே எத்தனையோ ஜீவராசிகளுக்குக் குளிர்ந்த நிழலைத் தருகிறதோ, அந்த மாதிரி இந்தச் சிறு கனல் பொறியும், மகாப் பெரிய அனல் மலையை வளர்க்கலாயிற்று'' (பக்கம் 32)

பாகப் பிரிவினை என்ற விஷவித்து, நாகம்மாளின் மதியைக் கெடுக்கிறது; மானத்தை அழிக்கிறது; இறுதியிலே சின்னப்பனின் உயிரையும் பறித்து, அந்தக் குடும்பத்தையே சிதைத்து விடுகிறது.

நாகம்மாளின் மனப் போராட்டங்களையும் அவளுள்ளே விசுவரூபமெடுக்கும் அசுரப் பண்புகளையும், எதிரிகளின் சதி வலையிலே அவள் சிக்குவதையும் தலையாய இலக்கியத் திறனுடன் சித்திரிக்கிருர் ஆர். ஷண்முக சுந்தரம்.

நாகம்மாளுக்கு அடுத்தபடியாக, நம்மை ஈர்ப்பவன் கெட்டியப்பன். இவன் 11 அத்தியாயங்களில் வருகிருன். மூன்ரும் அத்தியாயத்தில்—மாரியம்மன் உற்சவ காலத்தில் - அவனை இவ்வாறு அறிமுகப் படுத்துகிருர் ஆசிரியர் :

''ஜல்ஜல்'' என்று சதங்கைகள் ஒலிக்க, கம்பத்தைச் சுற்றிச் சிறியவர்களும் பெரியவர்களும் ஆடிக் கொண்டிருந்தார்கள். அந்த ஆட்டக்காரர்களிலே ஒருவன் அடிக்கடி பறையர்கள் அடிப்பதைக் குற்றம் குறை சொல்லி வந்தான்.

அதிகாரம் தொனிக்கும் குரல், உயரத்திற்கேற்ற பருமன்; உருட்டிக் கட்டின வேஷ்டி; சரியான தலைக்கட்டு. அவனைக் கண்டுகூட இருப்பவர்கள் சந்தோஷம் கொள்வதும், அவன் அதட்டும்போது கொல்லென்று சிரிப்பதுமாயிருந்தார்கள். அவன்தான் கெட்டியப்பன். அவனுக்குக் குடிப்பதற்குப் பணம் எப்படிக் கிடைக்கிறது? ஏதாவது மந்திரம் தந்திரம் கற்று வைத்திருக்கிருனு? அதெல்லாம் ஒன்றுமில்லை. தனக்கு இருந்த காடொன்றையும் தொலைத்து விட்டான். அவன் வேறு ஒன்றும் செய்யவில்லை; இட்லியும் கள்ளும் அந்தக் காட்டை விலைக்கு வாங்கிவிட்டது! இப்போது வெறும் ஆள். அந்த 'விடுகுளை' யாருக்கும் பயப்பட மாட்டான். ஊரில் எல்லோரும் அவனை ஒரு மாதிரியாகத்தான் நடத்துவார்கள். அவனிடம் பகைத்துக் கொண்டால் போச்சு; அன்றைக்கு விரோதித்துக் கொண்டவனுக்கு வாழைத் தோட்டமிருந்தால், பத்துப் பன்னிரண்டு தாராவது பிஞ்சோடும் பூவோடும் அறுபட்டுப் போய்விடும். அல்லது தென்னந் தோப்பு உள்ளவராயிருந்தால், இருபது முப்பது குலையாவது பாளைக் குருத்தோடு காணுமல் போயிருக்கும். அவனிடம் தன்னைப் போன்ற நாலைந்து ஆட்களும் உண்டு.''
(பக்கம் 15)

இப்படிப்பட்ட ''மனிதனிடம்''தான் நாகம்மாள் அன்பு செலுத்துகிருள்; அடிக்கடி ஆலோசனை கேட்கிருள்! இந்நிலையில் அவள் தலைமை தாங்கும் குடும்பத்தின் கதி என்னவாகும்? நீங்களே ஊகித்துக் கொள்ளளலாம்.

மணியக்கார ராமசாமிக் கவுண்டரையும், அவரது மந்திரி நாராயண முதலியையும் பார்ப்போம்:

''மணியக்கார ராமசாமிக் கவுண்டர் நல்ல பாரா சாரியான ஆள். கருவேலங்கட்டை மாதிரி அவரது காலும் கையும் உறுதியாயிருக்கும். அவரது நிறமும் கருஞ்சாந்து போலத்தான். கிருதா மீசைக்கும் அவரது மேனிக்கும் வித்தியாசமே தெரியாது. அவரது முறுக்கு மீசையில்

எலுமிச்சங் கனியை நிறுத்தலாம்! என்ன! நிறுத்தியே காண்பித்திருக்கிருர்!

''தன் தகப்பனுர் காலத்தில் தோல்வி மேல் தோல்வி யானுலும், தானுவது வெற்றி கண்டுவிட வேண்டும், சின்னப்பனையும் அவன் பங்காளிகளையும் பிரித்து மட்டம் தட்டவேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்தார், மணியக்காரர். இதில் அநேகமாக வெற்றியும் அடைந்து விட்டார். இப்போது சின்னப்பனை என்ன செய்தாலும் கேள்வியில்லை. அதற்குத் தகுந்தாற்போல் நாகம்மாள் சங்கதி வேறு கிடைத்திருக்கிறது.

''எப்போதும் மணியக்காரருக்கு யோசனை சொல்வ தற்கு அநேக மந்திரிகள் உண்டு, அவர்களில் முதன்மை யானவர் நாராயண முதலி. இவன் ஒரு புளுகுணி. குண்டுப் புரட்டன். எங்கு என்ன நடந்தாலும் துளி விடாது வந்து சொல்லி விடுவான். 'இதற்கு இப்படிச் செய்ய வேண்டும்; அவர்கள் சங்கதி அப்படி அது இது' என்றெல்லாம் யோசனை சொல்வான். மற்றவர் யோசனையாளுல் மணியக்காரர் நிராகரித்து விடுவார்; நாராயணசாமி முதலி விஷயம் அப்படியல்ல. எங்கே கல்லெறிஞ்சால் எப்படி விழும் என்று தெரிஞ்சவன். சாதாரணமாகப் கோர்ட்டு விஷயங்களில் அபாரத் திறமை. மற்றும் சாட்சிக்குச் செல்லும்போது, சாப்பிடுவதற்கு எந்த ஓட்டலுக்குப் போனுல் ரொம்ப திவ்ய மாயிருக்கும், குறிப்பிட்ட மனிதர்களை எங்கு அழைத்துச் செல்வது என்பதெல்லாம் மனப்பாடம்'' (பக்கம் 72) என்று மணியக்காரரையும், அவரது மந்திரியையும் நமக்கு அறி முகப் படுத்துகிருர், ஆசிரியர்.

ஏனைய பாத்திரங்களின் குணநலன்களை வாசகர்களே படித்து அநுபவிக்க வேண்டியதுதான்!

## நடை

ஆர். ஷண்முகசுந்தரத்தின் தமிழ் நடைக்குச் சில உதாரணங்கள் :

''அடை மழைக் காலம் வந்து சேர்ந்தது. புரட்டாசி கழிந்து ஐப்பசி ஆரம்பம். வான வீதியில் எந்நேரமும் சாயை படிந்து கருமுகில்கள் கவிழ்ந்த வண்ணம் இருந்தன. திடீரென்று மழை கொட்டும். அடுத்த கணமே கம்மென நின்றுவிடும். எதையோ நினைத்துக் கொண்டதைப்போல மறுபடியும் சோவெனத் துளிக்கும். இப்படிப் பெய்யும் மழையைப் பார்க்கும்போது யாரோ ஒரு தாய், தன் வாலிப மகனைப் பறி கொடுத்ததை எண்ணி ஏக்கத்தால், 'பலபல' வென்று நின்று நின்று கண்ணீர் விடுவதைப் போலிருந்தது.

''இங்ஙனம் அடை மழை சொல்லாமல் கொள்ளாமல் வந்தாலும் பட்டிதொட்டிக்குப் போகிறவர்கள் நிற்கவே யில்லை. ஓலைக் குடைகளையோ, பனந்தடுக்குகளையோ அல்லது கோணிப் பைகளையோ போட்டுக்கொண்டு தங்குதடை யின்றி அவரவர் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர். வயது வந்த கிராமச் சிறுமிகள் ஆடைகளைச் சரியாகக்கூட மார்பில் போடாமல் சில்லிட்ட சாரலில் இட்டேறித் தடத் தில் செல்லும் காட்சியே காட்சி! ஆட்டு மந்தைகளின் பின்னுலோ, வேலி யோரங்களிலோ, காட்டின் நடுவிலோ அவர்கள் செல்லுவதைப் பார்த்தால், எங்கோ மாய உலகத்திலிருந்து வந்த மதன மோகினிகள் திரிந்து கொண் டிருப்பதைப் போலிருக்கும்!'' (பக்கம் 65).

''முலாம் பூசிக்கொண்டிருந்த இயற்கை, தன் அழகுக் கதிர்களைக் கொஞ்சம் கொஞ்சமாக அடக்கிற்று. மரங்கள் உச்சியிலும், வீட்டுக் கூரையிலும் படிந்திருந்த தங்க நிறம், மெதுவாக மறைந்தது. இரவு தன் நீண்ட கரும்போர் வையை விரித்தது. இரவின் சாந்த மடியிலே பக்ஷி ஜாதி கள் தலை சாய்த்தன. அந்த அமைதியான வேளையில்

சித்திரப் பாவை போன்று நாகம்மாள் அமர்ந்திருந்தாள். ஒவ்வொரு சருகின் அசைப்புக்கும் சட்டெனத் திரும்புவாள். சிறு காற்றில் ஓலைகள் படபடக்கும்போது செருப்புச் சத்தம் என்று எண்ணி ஏமாறுவாள். அர்த்தமற்ற சத்தம் 'ஹோ' என எழும். திடுக்கிட்டுத் தலை நிமிர்வாள். 'கெட்டியப்பன் முன்னால் வந்திருக்கப்படாதா!' என்று சலித்துக் கொள்வாள்.'' (பக்கம் 106)

ஆர். ஷண்முகசுந்தரத்தின் தமிழ் நடையை எளிய, இனிய, உணர்ச்சிகரமான தமிழ்நடை என்று சொன்னால் போதாது; அழகிய அற்புதமான தமிழ் வசனம் என்றும் கூறவேண்டும். இத்தகைய தமிழ்நடை கைவரப்பெற்ற அவர் ஒரு பாக்கியசாலி என்று சொல்லலாம் அல்லவா?

மற்றொரு விஷயம்; முக்கியமான விஷயம்; இந்நாவலின் உரையாடல்கள் எல்லாம் கொங்கு மண்ணின் மணம் கமழும் பேச்சுத் தமிழில் அமைந்துள்ளன. அவற்றைப் புரிந்து கொள்வதில் சிரமமேயில்லை. நமக்கு அது ஓர் இன்ப அநுபவமாகவே இருக்கிறது.

இத்தகைய கொச்சைத் தமிழ் நடை இந் நாவலின் தனிச் சிறப்பு என்றே கூறவேண்டும்.

'இலக்கியத்தில் கொச்சை' என்ற பிரச்னைக்கு வெகு அழகாகத் தீர்வு கண்டிருக்கிறார், ஆர். ஷண்முக சுந்தரம்.

கடைசியாக இந்நாவல் எழுதப் பெற்ற காலத்தையும் சற்று எண்ணிப் பார்க்கவேண்டும்.

1941-ல், இரண்டாம் மகாயுத்த காலத்தில், இந் நாவல் வெளிவந்துள்ளது.

இது உலக அரங்கில் பாசிஸ எதிர்ப்புப் போர் நிகழ்ந்த காலம்; ''வெள்ளையனே வெளியேறு!'' என்று நமது தேச விடுதலை இயக்கம் பொங்கி எழுந்த காலம்.

இந்தக் கால கட்டத்தில் 'மணிக்கொடி' பரம்பரையைச் சேர்ந்த ஒருவரால் இந்நாவல் எழுதப்படுகிறது.

இந்நாவல் மனிதனின் எழுச்சியைப் பாடவில்லை; வீழ்ச்சியைப் பாடுகிறது.

நமது கிராம மக்களின் பலவீனங்களை மறைக்கவில்லை; யதார்த்த நிலையைக் கீறிப் பிளந்து காட்டுகிறது.

இந் நாவலில் நன்மை வெற்றி பெறவில்லை; தீமை முடி சூட்டிக் கொள்கிறது; சதியும், சூழ்ச்சியும். வன்முறைகளும் அரசோச்சுகின்றன. இது தேச பக்தியைத் தட்டி எழுப்பும் கதையல்ல; தேசத்தில் புரையோடிப்போன புண்ணை, ஜனசமூகத்துக்குக் காட்டும் ஜன்னல்!

இந் நாவல் வெளிவந்த சமயத்தில், 'மணிக்கொடி'க் காரர்களான புதுமைப்பித்தன், கு. ப. ராஜகோபாலன், பி. எஸ். ராமையா, சிட்டி, சிதம்பர சுப்ரமண்யம், சி. சு. செல்லப்பா, மௌனி, பிச்சமூர்த்தி, லா. ச. ராமாமிருதம், எம். வி. வெங்கட்ராம் ஆகியோர் நாவல்கள் எழுதியதாகத் தெரியவில்லை.

'கந்தர்வ வாழ்க்கை' என்ற பெயரில் ''ராஷ்டிரவாணி'' யில் கி. ரா. வின் நாவல் ஒன்று வந்ததாக நினைவு.

நாகம்மாளுக்கு முன்பாக ''பசி'' என்ற புதுமையான நாவலை, தனி மனிதனின் தத்துவக் கொந்தளிப்பைப் பிரதிபலிக்கும் நாவலை, சோதனை உணர்வுடன் க. நா. சுப்ரமண்யம் எழுதியிருந்தார். அதை அவரது பெரிய படைப்பின் ஒரு பகுதியென்றுதான் சொல்ல வேண்டும்.

''பசி'' ஒரு தனித்தன்மையான நாவல் என்ருல், அதையடுத்து வெளிவந்த நாகம்மாளும் மற்ெருரு புதுமையான தனித்தன்மையான, முழுமையான நாவல். காலஞ்சென்ற கு. ப. ராஜகோபாலனின் பாராட்டைபெற்ற நாவல். அவர் இந் நாவலுக்கு ஒரு அரிய முன்னுரை எழுதியிருந்தார்.

ஏனோ, அந்த முன்னுரை பிற்காலப் பதிப்புக்களில் நீக்கப் பட்டு விட்டது. இது மிக வருந்தத் தக்கதாகும்.

மொத்தத்தில், ஆர். ஷண்முகசுந்தரத்தின் 'நாகம் மாள்', 1940 முதல் 1950 வரையுள்ள காலகட்டத்தில் வெளிவந்த தலையான இலக்கியப் படைப்புக்களில் ஒன்று; இந்தக் கால் நூற்றுண்டுக் காலத்தில், தமிழ் நாவல் இலக்கி யத்தில், தனித்து நின்று ஒளி வீசும் நவரத்தினம்!

இந்த அற்புதத் தமிழ் நாவல் இந்திய மொழிகளிலும், உலக மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட வேண்டும். அதற்குத் தமிழ்ப் பெருமக்களும், பேரறிஞர்களும் ஆவன செய்ய வேண்டும்.

அகிலனின்

# பாவை விளக்கு

இரா. தண்டாயுதம்

"எழுதுகோல் தெய்வம்—இந்த
எழுத்தும் தெய்வம்"

என்ற பாரதியின் கவிதை வரிகளைப் போற்றும் அகிலன், "படிப்பவர்களுக்குப் பிடித்தமானதைஎழுதுவதுஎழுத்தல்ல; மக்களுக்குப் பிடிக்க வேண்டியதைஎழுதுவதுதான் எழுத்து" என்ற கொள்கையுடையவர். இவருடைய 'பாவை விளக்கு' தமிழ் மாலையில் தொடுக்கப்பெற்ற மற்றொரு மணம் மிக்க வண்ண மலர்; தமிழ் நாவல் வரலாற்றில் ஒரு குறிப்பிடத் தக்க திருப்பம்.

சாமர்செட் மாம் (W. Somerset Maugham) என்னும் ஆங்கில நாவலாசிரியர் தமக்குப் பிடித்த பத்து நாவல்களைத் திறனாயும்போது, நாவலாசிரியர்களின் வாழ்க்கையுடன் அவர்கள் எழுதிய எழுத்தையும் பிணைத்து, அந்த நாவல்கள் உருவாக அவர்கள் வாழ்க்கை எந்த அளவுக்குப் பயன்பட்டது என்று சுட்டிக் காட்டுகிறார். அந்த ஒப்பற்ற திறனாய்வு நூலைப் படித்த பின்னர்தான் தமக்கு இந்த நாவலை எழுதும் எண்ணமே வந்தது என்று இந்த நாவலாசிரியரே கூறிய

போது ஏதோ ஓர் உண்மையின் பொறி தட்டுப்பட்டாற் போலிருந்தது. தம்முடைய எழுத்தின் அனுபவத்தையே தணிகாசலத்தின் மூலம் உணர்த்துகிருரோ என்ற எண்ணம் கூடவந்தது. 'வாழ்க்கையின் அனுபவ வெளியீடுதானே இலக்கியம்?'

**இரண்டு தனித் தன்மைகள்:**

திரு. அகிலனின் இலக்கிய படைப்புக்களுக்கு இரண்டு தனித் தன்மைகள் உண்டு.

முதலாவது அன்பின் ஆட்சி. உலகத்தின் பிரச்னைகளுக் கெல்லாம் அன்பு ஒன்றையே அருமருந்தாகக் காண்பவர் திரு. அகிலன். 'அன்பின் வழியது உயிர்நிலை' என்ற வாக் கிலே அசைக்க முடியாத நம்பிக்கையுடையவர். சிறு கதை களாயினும் சரி, நாவல்களாயினும் சரி, அவருடைய அன்புப் பிரச்சாரத்தை நெடுகக் காணலாம். அன்பின் வலிமை, அன்பின் பெருமை, அன்பின் ஆழம் இவருடைய இலக்கியப் படைப்புக்களில்போல் வேறு எங்குமே அவ்வளவு வற்புறுத் தப்படவில்லை. தமிழ் நாவல்களிலேயே அன்புப் பிரச் சாரத்தை இந்த அளவு மேற்கொண்டவை திரு. அகிலனின் நாவல்கள்தாம் என்று துணிந்து கூறலாம். 'அன்பு செய்யக் கூட நாள்தோறும் கற்றுக்கொள்ள வேண்டும்' என்று 'வாழ்வில் இன்பம்' என்ற தம்முடைய நாடகத்தில் அறி வுரை கூறும் திரு. அகிலனின் இலக்கியப் படைப்புக்கள் அனைத்துமே அன்பு என்ற அடித்தளத்தின்மீது கட்டப்பட்ட பிரம்மாண்ட மாளிகைகளாகும். ஒருவர் மற்ருெருவர்மீது சொரியும் அன்பு மழையில் விளைந்த பூசல்களும் போராட் டங்களுமே அவர் படைத்த இலக்கியத்தின் கருப் பொருள்கள். மற்ற படைப்புக்களைக் காட்டிலும் 'பாவை விளக்'கில் பூசல்களின் பின்னணியில் எழும் மனப் போராட் டங்களை அழியா ஓவியங்களாகத் தீட்டி வெற்றி கண்டுள் ளார் திரு. அகிலன் என்று கூறலாம்.

அன்பு நூல் இழையோடுவதாலேயே அவருடைய இலக்கியப் படைப்புக்கள் அனைத்துமே ஒரே வகை என்று கூறிவிட முடியாது. மலர்கள் என்பதாலேயே முல்லையும் மல்லிகையும் ஒன்றாகிவிட முடியுமா? முல்லை, மல்லிகை, இருவாட்சி, தாமரை, தாழம்பூ, மனோரஞ்சிதம் முதலிய பல்வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கும் மலர்க்காடு திரு. அகிலனின் இலக்கியப் படைப்புக்கள்.

பாசம், பக்தி, அருள், காதல் முதலிய பல்வேறு அன்பின் வடிவங்களில் இந்த நாவலாசிரியர் சிறப்பாகக் கையாள்வது காதலைத்தான். அவருடைய சொற்களிலேயே கூறினால் ''காதல் இந்த நாட்டின் வேற்றுமைக்கு அருமருந்து; அன்புப் போர் புரிவதற்குக் கூர்மையான மலர்க்கணை அது.'' தம்முடைய காதல் கதைகள் எப்படிப்பட்டவை என்பதையும் தணிகாசலத்தின் மூலமாக வெளிப்படுத்துகிறார் ஆசிரியர்: ''நான் இரண்டு வகைக் காதல் கதை எழுதுகிறவன்; கல்யாணத்துக்கு முன்புள்ள காதலை எழுதி இந்த நாட்டில் உள்ள சாதி, சமயம், குலம், கோத்திரம், பணம்—இவற்றால் ஏற்படும் வேற்றுமைகளைக் குறைக்க விரும்புகிறேன். கல்யாணத்துக்குப் பின்பு உள்ள காதலை எழுதிக் குடும்பங்களின் கட்டுக்கோப்பை வளர்க்க விரும்புகிறேன்'' காதலைச் சிறப்பாகக் கையாண்டாலும் மனிதன்மீது, மனிதாபிமானத்தின் மீது, சமூகத்தின்மீது, உலகத்தின்மீது பொழிய வேண்டிய, அன்பையும் சமயம் வாய்க்கும்போது திரு. அகிலன் வற்புறுத்தத் தவறுவதில்லை.

இரண்டாவது, பெண்மை கலந்த அவருடைய எழுத்துக்கள். பெண்மை கலந்த ஆண்மைக்கு என்றுமே தனி மதிப்பும் மரியாதையும் உண்டு. பெண்மை கலந்த புத்தனின் அமைதித் தோற்றத்தை மறக்க முடியுமா? அவருடைய கொள்கைகள் மக்களிடம் பரவ அவருடைய தோற்றமும் ஒரு காரணம் என்பது வரலாறு காட்டும் உண்மை. நம்முடைய தமிழில் பெண்மை கலந்த ஆணித்தரமான எழுத்துக்களைக் கட்டுரை வடிவில் தந்து மக்கள் மனங்கவர்ந்தவர்

தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கள். அதே கலையைப் படைப்பு இலக்கியத்தில் கையாண்டு வெற்றி பெறுகிறார் திரு. அகிலன் என்று கூறலாம். பெண்மையின் மென்மையும், நளினமும், நெளிவும்; ஆண்மையும் திண்மையும், வன்மையும், தெளிவும் கலந்த எழுத்துக்கள் திரு. அகிலனின் எழுத்துக்கள்.

இந்த இரண்டு தனித் தன்மைகள் திரு. அகிலனின் இலக்கியப் படைப்புக்களுக்கே உரிய தனிச் சிறப்புக்களாகும்.

**பாவை விளக்கு:**

நாவல்களிலே இரண்டு வகை உண்டு. முதல் வகை நாவல்களிலே நிகழ்ச்சிகள் அடிப்படையாக இருக்கும். இரண்டாவது வகை நாவல்களிலே உணர்ச்சிப் போராட்டங்களுக்கே முதலிடம் இருக்கும். மனவியல் அடிப்படையில் எழுந்த உணர்ச்சிப் போராட்டங்கள் நிறைந்த நாவலே 'பாவை விளக்கு.' மனவியலை மையமாகக் கொண்டு தமிழில் மலர்ந்துள்ள நாவல்களில் 'பாவை விளக்'கிற்குத் தனி இடம் உண்டு.

**கருவும் உருவும்:**

''பாவை விளக்கு; எழுத்தாளன் ஒருவனின் வாழ்க்கையைக் கருவாகக் கொண்டு பின்னப்பட்ட நாவல். 'எழுத்துக் கலை எளிதல்ல; கடினமான ஒன்று. கல்லைச் செதுக்கிச் சிலை வடிப்பதைப் போல, வாழ்க்கையின் உண்மைகளைச் சொல்லால் செதுக்கிக் கற்பனையாக்க வேண்டிய' கலை. அதிலும் தமிழ் நாட்டு எழுத்தாளனுக்கு எத்தனையோ பிரச்னைகள். 'தமிழ் நாட்டில் துணி வெளுக்கக் கூலியுண்டு; மனம் வெளுக்கக் கூலியில்லை' ஏழைகளாக இருந்தால்தான் எழுத முடியும் என்ற எண்ணம் வேறு எப்படியோ பரவி விட்டது.

ஏமாற்றம், வறுமை, நம்பிக்கை வறட்சி, லட்சியச் சிதைவு, போலி வாழ்க்கை, பழம் பெருமை இவற்றுடன் இன்றைய தமிழ் எழுத்து போராடும் போராட்டமே 'பாவை விளக்கு.'

இந்தக் கரு உருவாக நான்கு பெண்கள் எழுத்தாளன் தணிகாசலத்தின் வாழ்வில் குறுக்கிடுகின்றனர். இவர்கள் ஐவரின் கூட்டிலே எழுந்த இன்பகீதம்தான் 'பாவை விளக்' காய்ச் சுடர் விடுகிறது. இதை நாவலாசிரியரே தம்முடைய முன்னுரையில் கூறியுள்ளார்: "எனக்கு எதிரே இருந்த தணிகாசலத்துக்குப் பதிலாக அந்த இடத்தில் குளுமையான ஒரு விளக்கொளி சுடர் விடுவதைக் கண்டேன். நான்கு பெண்கள் ஒன்று சேர்ந்து அகல் விளக்கொன்றைத் தங்கள் மென் கரங்களில் ஏந்தி நிற்பதுபோன்ற பிரமை. கண்களை நன்றாகக் கசக்கிவிட்டுக் கொண்டு கவனித்தேன். நான்கு பெண்களும் ஒருவரில் ஒருவர் மறைந்து இரண்டு பெண் களானார்கள். பிறகு அந்த இருவருமே ஒருவரில் ஒருவர் ஒன்றி ஒரே உருவாய்ச் சமைந்து பாவை விளக்கானார்கள்—" இதுதான் பாவை விளக்கின் உரு.

இந்த உரு தெளிவாகத் துலங்க வருமுன் உரைத்தல் முதலிய நாவல் உத்திகளும், நிகழ்ச்சிக் கோவையும், ஆவலைத் தூண்டும் வகையில் அமைந்த தணிகாசலம் கண்ட தாஜ்மகால் தோற்றமும், சுவைமிக்க உரையாடல்களும் உதவுகின்றன.

'கோயிலின் உட்பிரகார வாயில் முகப்பில், கரங்களில் வண்ணச் சுடரேந்தி, அன்பும், அருளும், பக்தியும் கனியும் கண்களோடு ஒளி பரப்பி நிற்கும் வண்ணச் சிலைப் பெண் ணழகை—ஐம்பொன் பாவை விளக்கை—பார்த்திருக்கிறீர் களா?' அந்தத் தோற்றமும், தோற்றத்தைக் கடந்த அமைதியும், அருளும் இந்தப் 'பாவை விளக்'கிலும் உண்டு.

## உருவகச் சிறப்பு (Symbolisom)

எந்த ஒரு நாவலுமே வாழ்க்கையையோ, அது எழுந்த காலத்தையோ புறக்கணித்துவிட்டு அரும்பிவிட முடியாது. வாழ்க்கைப் பிரச்னைகள் எப்படியாவது நாவலில் இடம் பெற்றுவிடும். அவ்வாறு நுழையும் சமுதாயப் பிரச்னைகள் இரண்டு வகையில் இடம் பெறும். முதல் வகையில் கதை மாந்தரின் உரையாடல்களிலோ அல்லது அவர்கள் பண்பு நலன்களிலோ அவை வெளிப்படும். இரண்டாம் வகை நாவல்களிலோ பிரச்னைகளே கதை மாந்தராக உரு வெடுத்து விடும். இந்த இரண்டாம் வகையைச் சேர்ந்தது 'பாவை விளக்கு.'

'பாவை விளக்'கிற்கு மதிப்புரை வழங்கிய திறனாய் வாளர் திரு. அ. ச. ஞானசம்பந்தம் அவர்கள், 'அறிவுக்கும் உணர்ச்சிக்கும் நடைபெறும் போராட்டமாக' இதை வருணித்துள்ளார். ஆழ்ந்து நோக்கினால் இதற்கும் அப் பாற்பட்ட ஓர் உருவகம் மனக்கண்ணில் தென்படும்.

தணிகாசலம் வெறும் எழுத்தாளன் மட்டும் அல்ல தமிழ் நாட்டுத் தற்கால எழுத்துக் கலையின் உருவகம் அவன் தாய்க்குலத்திற்கு இன்றுள்ள பிரச்னைகளே தேவகி, செங்க மலம், கௌரி, உமா உருவங்களில் உருவகப்படுத்தப்பட் டுள்ளன. தேவகி-வாழ்விழந்து தவிக்கும் விதவையர்கூட்டத் தையும், செங்கமலம்-அன்றிருந்த தேவதாசிகளையும், கௌரி —தமிழக இல்லத்தரசிகளையும். உமா-புதுமைப் பெண்ணை யும் உருவகப்படுத்தக் கருவிகளாய் வருகிறார்கள். தமிழ்நாட் டில் பெண்டிர்க்குள்ள நான்கு நிலைகளே நான்கு பாத்திரங் களாகப் படைக்கப்பட்டுள்ளன. தாய்க்குலத்தின் இந்த நிலைகள் தமது விடிவுக்குத் தமிழ் எழுத்துலகையே நம்பி யிருப்பதுபோல் இந்த உருவகம் அமைந்துள்ளது. இவை மட்டும் அல்லாமல் போலி எழுத்தாளர்களின் உருவகமாய் வரும் பசுபதியும், இன்றைய படத் தயாரிப்பாளரின் உருவக

மாய் வரும் குமாரசாமியும்கூடத் தமிழ் எழுத்தை எதிர் பார்க்கின்றனர்.

பேனு முனைக்கு இந்த வன்மை உண்டா என்று கேட் கலாம். அமெரிக்க நீக்ரோ மக்கள் வாழ்வில் ஒரு திருப் பத்தை உண்டாக்கியது ஒரு டாம் மாமாவின் குடில் (Uncle Tom's Cabin) தானே! பிரெஞ்சு மக்களிடையே விழிப்பேற் படுத்திய எமிலி ஜோலாவின் நாவல்களையும், ஆங்கில சமூக மறுமலர்ச்சிக்கு உதவிய டிக்கன்ஸ் நாவல்களையும் மறக்க முடியுமா?

வேறொரு வகையாகவும் 'பாவை விளக்'கை உருவகப் படுத்தலாம். தணிகாசலத்தைத் தமிழ் நாட்டு எழுத்தாக வும், தேவகியை அந்த எழுத்துக்கு வேண்டிய லட்சிய மாகவும், செங்கமலத்தை எழுத்துக்கு இன்றியமையாத கலைப் பண்பாகவும், கௌரியை எழுத்துடன் இயைந்து நிற்க வேண்டிய அறமாகவும், உமாவை உண்மையை உரைப் பதற்கு வேண்டிய அஞ்சாமையாகவும் கூட உருவகப்படுத் தலாம். இந்தப் பண்புகளால் எழுத்து—குறிப்பாகத் தமிழ் நாட்டு எழுத்து—வளம் பெறும் என்று எண்ணத் தக்க வகையில் இந்த உருவகம் விரிகிறது.

கதைக்கும், கதை மாந்தர்க்கும் அப்பாற்பட்டுத் தெரியும் இந்த உருவகங்கள் இதை ஒரு சிறந்த உருவக நாவ லாகப் பரிமளிக்கச் செய்கின்றன.

**கதை மாந்தர்:**

கதை மாந்தர் இன்றி நாவல் இல்லை. அந்தக் கதை மாந்தர் எந்த அளவில் வாழ்வின் உண்மையுடன் ஒன்றியுள்ள னர் என்பதிலேயே ஒரு நாவலின் வெற்றி அடங்கியுள்ளது.

'பாவை விளக்கின்' கதைத்தலைவன் ஓர் எழுத்தாளன். பெயர் தணிகாசலம். இவன் எல்லா மனிதர்களையும் போலவே பலமும், பலவீனமும், நிறையும், குறையும்,

உள்ளவன். இதை நன்கு ஆராயாமல் குறையையும் பலவீனத்தையும் மட்டுமே பார்த்துவிட்டு 'அவனை அரைகுறைப் படைப்பு' என்பதில் பொருள் இல்லை.

வாழ்வில் முற்றும் நல்லவன் என்றோ, முற்றும் தீயவன் என்றோ யாரும் இல்லை. ரிச்சர்டு கம்பர்லாண்ட் (Richard Cumberland) என்னும் ஆங்கில நாவலாசிரியர் இதைத் தெளிவாக விளக்குகிறார். "மனித இனத்துடன் ஓரளவு பழகிய பிறகு முழுதும் நல்லவனாக ஒரு கதாபாத்திரத்தைப் படைக்க நான் முயலவில்லை. ஏனெனில் அப்படி ஒருவரை நான் சந்திக்கவில்லை. நல்ல மனிதனிடமும் ஒரு களங்கம் உண்டு; தீயவனிடமும் ஒரு நன்மைப் பொறி உண்டு" (I do not aim to draw a perfect character, for after a pretty long acquaintance with mankind I have never met with any one example of that sort......The brightest side of human nature is not without a spot, the darkest side is not without a spark-Richard Cumburland) ஜியார்ஜ் சாண்ட் என்னும் நாவல் ஆசிரியரின் கருத்தும் இங்கு கருதத்தக்கது. "மனிதனை உள்ளவாறே படைக்கத்தான் நான் விரும்புகிறேன். மனிதன் நல்லவனும் அல்ல; கெட்டவனும் அல்ல. அவன் இவை இரண்டிற்கும் சிறிது அப்பாற்பட்டவன்......இரண்டும் கலந்தவனாக இருக்கும் அவன், உள் மனத்தின் சக்தியால் ஒரு சிறிது குறை கலந்த நல்லவனாகவோ, ஒரு சிறிது நிறை கலந்த கெட்டவனாகவோ காட்சியளிக்கிறான்." (I want to see man as he is. He is neither good nor bad. But he is something else besides........being good and bad, he possesses an inner force which drives him to be very bad and a bit good, or else very good, and a bit bad—George Sand).

தணிகாசலம் இயல்பாகவே வெட்கம் நிறைந்தவன். உணர்ச்சியும் அறிவும் கலந்தவன். விவேகானந்தரைப் போலவும், பாதிரிமார்களைப் போலவும் திருமணம் செய்து கொள்ளாமலே, 'அறிவுத் தவம்' செய்ய விழைகின்றான்.

'நாற்றம் பிடித்த குட்டைக்குப் பக்கத்தில் ஒரு தாழம்பூ மலர முடியுமானால் நமக்குள்ளே ஏன் ஓர் நல்ல சக்தி மலரக் கூடாது?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்கிறான். ஏழையாக இருப்பதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை; ஆனால் ஏழ்மையால் வரும் அவமானத்தைத் தாங்க மட்டும் அவனுக்குப் பொறுமையில்லை. அதற்காகத் தன்மீது பிறர் இரக்கப்படுவதையும் அவன் விரும்பவில்லை.

'வேண்டாம் வேண்டாம்' என்று ஒதுக்கித் தள்ளும் பொருள்கள் விடாமல் காலைப்பற்றிக் கொள்வதுதானே உலக இயற்கை! 'அறிவுத் தவம்' செய்ய எண்ணியவனின் வாழ்வில் நான்கு பெண்கள் குறுக்கிடுகின்றனர். 'தணிகா சலத்தின் உள்ளொளியைச் சுட்டிக்காட்டிய தேவகி, அதைத் தூண்டிவிட்ட செங்கமலம், அதற்கு அகலாக அமைந்த கௌரி, அகலையும் சுடரையும் சேர்த்துத் தாங்கி நின்ற உமா'—இவர்களே அந்த நால்வர்.

அவன் வாழ்வில் முதலில் குறுக்கிடும் பெண் தேவகி. அவளுடைய புருவமத்தியும், நெற்றியும், நேர்வகிடும் அவனுக்குக் காதல் உணர்ச்சிக்குப் பதிலாக லட்சிய உணர்வையே தூண்டி விடுகின்றன. தணிகாசலத்தின் உள்ளே மறைந்திருந்த மற்றொரு மனிதனை முதலில் கண்ட வளே அவள்தான். 'அறியாப் பிள்ளை என்ற ஒருவனும் அறிந்த மனிதன் என்ற மற்றொருவனும் ஆக இரண்டு பேர் சேர்ந்தவன் தணிகாசலம்' என்று உணர்த்துபவளே அவள் தான்.

இரண்டாவதாகக் குறுக்கிடும் பெண் நாட்டியக் கலையில் சிறந்த செங்கமலம். தேவகியின் அழகு, பரபரப்பைத் தணிக்கும் அழகு என்றால், இவள் அழகு பரபரப்பைத் தூண்டும் அழகு. 'சமூகம் என்ற அணில் கடித்த பரம்பரை யிலிருந்து தப்பி வந்து அவன் மடியில் விழும்' அவளை, தேவகியை வெறுத்த அதே தணிகாசலம் காதலிக்கிறான். எழுத்து கலையைக் காதலிப்பதில் வியப்பொன்றுமில்லையே!

'அறிவுத் தவம்' கலைகிறது. ஆனால் விதி பிரிக்கிறது. பிரித்தாலும் அவனுள் ஒடுங்கிக் கிடக்கும் எழுத்துத் திறமையைத் தூண்டி விட்டுப் போகிறது. செங்கமலத்தை வைது எழுதிய எழுத்துக்கள் அவன் முதல் கதையாகி வாசகர்களைத் தேடித் தருகின்றது.

மூன்றாவதாகக் குறுக்கிடும் பெண் கௌரி, தணிகாசலத்தின் மனைவியாகிறாள். துணிவைக் காட்டவேண்டிய இடத்தில் துணிவைக் காட்டி, சீற வேண்டிய இடத்தில் சீறிப் பாய்ந்து, குழந்தை மனைவியாயிருந்தவள் பரமசிவத்திற்கும் கல்யாணிக்கும் தாயாகி, இறுதியில் உமாவிற்குத் தன் வாழ்வில் சரிபங்கும் தருகிறாள்.

இறுதியாகக் குறுக்கிடுபவள் உமா. இவள் உலக இலக்கிய மேதை டால்ஸ்டாய் எழுதிய 'போரும் அமைதியும்' என்ற நாவலில் வரும் நாதஷா (Natasha)விற்கு நிகரானவள். அழகும், அறிவும், உணர்ச்சியும் நிறைந்த இவள் 'சிடுசிடுப்பும் குதூகலமும் மாறி மாறித் தோன்றக் கூடிய ஒரு கதா பாத்திரம்.' ரசிக மணியையே கேள்விக் கேட்டுத் திணற வைக்கத் துணிவு கொண்டவள். இவள் 'புரிந்து கொள்ள முடியாத புதிர். விளங்கிக்கொள்ள முடியாத விந்தைப் பெண். விலகிக் கொள்ளவும் விலக்கி விடவும் முடியாத அன்புத்தளை. நம்பிக்கையின் திரு உருவம். ஆண்டாளின் அடிவாரிசு. வானமெல்லாம் சுற்றிப் பறந்து உலகத்தின் அழகையெல்லாம் அள்ளிப் பருகத் தனக்கு இறகுகள் இல்லையே, என்று இவள் ஏங்குகிறாள். ஏக்கம் கவிதையாகிறது. கவிதையில் 'தாஜ்மகால்' பிறக்கிறது.

உமா தணிகாசலத்தின் வாழ்வில் குறுக்கிடுவதற்கு முன்னரே, தேவகியையும் கௌரியையும் நினைத்த தணிகாசலம் அடிக்கடி அவர்கள் இருவருமல்லாத ஒரு கற்பனைப் பெண்ணையும் நினைத்தான். அந்தக் கற்பனை பெண்தான் உமாவாக வந்து தணிகாசலத்தை ஆட்டிப்படைப்பதுடன் தன்னையும் ஆட்டிப் படைத்துக் கொள்கிறாள். அவன்

சொல்லுவதை எழுதும் வெறும் கருவி மட்டும் அல்ல அவள்; அவன் எழுத்துள்ளேயே கலந்து அந்த எழுத்தை வளர்க்கின்றாள். உணர்ச்சி மாற்றங்களை மறைக்க முடியாமல் வெளியிடும் உமாவின் குழந்தைக் கண்கள் தணிகாசலத்தின் எழுத்துக் கற்பனைக்கு உணவாகின்றன. இறுதியில் தன்னுடைய அன்பையெல்லாம் பொழிந்த குழந்தை கல்யாணி இறந்த இடத்திலேயே மடிந்தும் போகிறாள். அவள் விரும்பிய வண்ணமே அவளுடைய உயிர்க் காற்று வெறுங் காற்றுடன் கலக்காமல் தணிகாசலத்தின் மூச்சுக் காற்றோடு கலக்கிறது. சுருக்கமாகச் சொல்லப் போனால் இதுதான் அவள் வாழ்வு! 'குழந்தைத்தனமாக இருந்த' பெண் பெண்ணானாள்; சந்தேகப்பட்டாள்; பொறாமைகொண்டாள்; மறைந்தாள்.

தணிகாசலத்தின் வாழ்வில் குறுக்கிட்ட நால்வரில் மறைந்தவள் இவள் ஒருத்திதான். ஆனால் இலக்கியத்தில் இறவா வரம் பெற்றவளும் இவள் ஒருத்திதான். அகல் விளக்கை ஏந்தி நின்றிருந்த நான்கு பெண்கள் இருவராகி, இருவரும் ஒருவராகி ஓர் உருவாய்ச் சமைந்து போனார்களல்லவா? அந்த ஓர் உருதான் உமா.

தணிகாசலத்தின் வாழ்க்கை இவர்களுடன் மட்டும் நின்றுவிடவில்லை. பூப்போன்ற இதயம் படைத்த இவன் பெர்னார்டுஷாவைப் போல் பூக்களைப் பறிப்பதைக்கூட விரும்பாதவன். உலகத்துத் துன்பங்களெல்லாம் இவனுக்குத் தன் துன்பங்கள். உண்மை எழுத்தும் இப்படித்தானே! சூழ்நிலையில் தன்னை மறக்கும் இவன் தீமையைக் கண்டு ஒரு போதும் பொறுத்ததில்லை. இலக்கியத் திருட்டுக்களையும் தமிழ் நாட்டு எழுத்தையும், புதுமை இலக்கியத்தின் சிறப்பையும் உணராத மக்களையும் எண்ணி எண்ணிக் குமைகிறான். எழுத்தின் உண்மையை உணர்ந்து மதிக்கத் தெரிந்த ஓர் எழுத்தாளன் இன்றையத் தமிழ் நாட்டில் இருந்தால் எப்படியிருப்பான்? உறுதியாகக் கூறலாம்.

தணிகாசலத்தைப் போலத்தான் இருப்பான், இருக்க முடியும்.

கதைத்துணைமாந்தரும்(Minor Characters) வாழ்க்கைக்கு இயைந்தவராய் உள்ளனர். குழந்தைக்குக் குழந்தையாய், மேதாவிக்கு மேதாவியாய்த் தோன்றும் பேராசிரியர் சந்திர சேகரன்; 'உயிர் வளர்ச்சிக்கு இந்த நாட்டின் பழைய பண்பும், உடல் வளர்ச்சிக்கு மேலை நாடுகளின் பொருளறிவும் வேண்டும்' என்ற கொள்கையுடன் அன்பை வளர்க்கக் குற்றாலத்தில் ஒரு பள்ளி நடத்தி வரும் மாணிக்க வாசகம்; வாழ்க்கைக்கும் மனச்சாட்சிக்கும் இடையில் அகப்பட்டுத் தவிக்கும் ரங்கராஜன்; அதிகாரவெறியில்அலையும் நாகசாமி; பெரிய பதவியிலிருந்தும் பண்பில் வழுவாத மகாலிங்கம்: எழுத்தாளன் என்ற போர்வையில் எழுத்துக் களவு செய்யும் பசுபதி; எடுப்பார் கைப்பிள்ளையாக வரும் குமாரசாமி; சிறுவன் பரமசிவம்; மழலை மிழற்றித் தன் உடலால் தாமரை மணம் பரப்பும் குழந்தை கல்யாணி—இவர்கள் அனைவருமே உயிருள்ள பாத்திரங்கள். சுடரேந்திய நாச்சியாருக்கு உயிரும் ஒளியும் அருள்வதில் இவர்களுக்கும் பெரும் பங்குண்டு.

இவ்வளவு கதை மாந்தர் வந்தும், குறிப்பிடும் அளவிற்குத் தீயவன் (Villain) ஒருவன் இதில் இல்லை. இது இந்த நாவலின் மற்றொரு சிறப்பு.

**நடை:**

திரு. அகிலனுடைய நடை சமூகக் கொடுமைகள் எனும் பள்ளங்கள் வந்தபோது சீறி, எழுத்துத் திருட்டு முதலிய மரங்களைச் சாய்த்து, இயற்கையை வருணிக்கும் சமவெளிகளிலே அமைதியாகப் பாய்கிறது. குற்றால அருவியைப் பற்றி வருணிக்கும்போது அருவியில் மூழ்கித் திளைத்த உணர்வு ஏற்படுகிறது. ஆழமான, அழுத்தமான தெளிவான சொற்களுடன் கற்பனையும் கலக்கும்போது 'சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்ததுபோல் இனிக்கின்றது' தமிழ் நாட்டு எழுத்தின் நிலையைப் பற்றி எழுதும் இடத்தில்

அவர் மனம் எப்படிக் குமுறுகிறது என்பதை அவர் எழுத்துக்களே படம் பிடித்துக் காட்டுகின்றன. ''பெர்னட்ஷா தமிழ் நாட்டில் பிறந்திருந்தால் ஒன்று பட்டினியால் செத்திருப்பார்; அல்லது குமாஸ்தாவாக மாறிப் பழைய 'பைல்'களுக்குத் தமது மூளையைக் குத்தகைக்கு விட்டிருப்பார். அரசியலுக்கும் இலக்கியத் துக்கும் வேற்றுமை தெரியாத இளைஞர்களையும் பழைய தமிழுக்குப் பின் தமிழ் செத்துவிட்டதென்று பெரு மூச்சு விடும் முதியவர்களையும் கொண்ட நாடு இது. இலக்கியத் தைப் படிக்கும் முறை எது? படித்துப் பயனடைவது எப்படி? என்று ஒரு தமிழ் நூலைக்கூடக் கல்லூரியில் பாடமாக வைக்காதவர்கள் தமிழ் வளர்க்கிறார்களாம், தமிழ்!''

இந்த நாவலுக்குள்ள மற்றொரு சிறப்பு; இது தொடர் கதையாக வந்ததுதான். நாவலை மதிப்பவர்களும் தொடர் கதை இலக்கியத்தை மாற்றாந்தாய் குழந்தையாகக் கருதும் நாடு இது. டால்ஸ்டாயின் 'அன்னாகரீனாவையும், டிக்கன்ஸ் நாவல்களையும்' இவர்கள் ஏனோ மறந்துவிடுகிறார்கள். 'காலம் தந்த இலக்கிய வடிவை ஏற்பதுதான் சிறப்பு' என்கிறார் அறிஞர் டி. எஸ். எலியட். காலம் தந்த மிகச் சிறந்த பரிசான பத்திரிகைகளையும், அவற்றில் வரும் தொடர் கதை களையும் மட்டும் புறக்கணிப்பது முறையாகுமா?

இறுதியாக ஒன்று. ஆக்ராவில் தாஜ்மகாலுக்கு அருகில் பேராசிரியர் சந்திரசேகரன், காதலுக்காக எழுப்பப்பட்ட தாஜ்மகால் என்ற கல்லோவியத்தையும், பாரதியும் பாரதி தாசனும் காதலுக்காகப் பாடிய கவிதை ஓவியத்தையும் சுட்டிக்காட்டிய போது உமா தணிகாசலத்திடம் ஓர் அன்பு வேண்டுகோள் விடுக்கிறாள். 'நீங்கள் கட்டாயம் இதைபோல் ஒரு உரை நடை மாளிகை எழுப்பவேண்டும்' என்று. உமாவின் ஆசை, தணிகாசலத்தைப்படைத்த திரு. அகிலன் மூலம் நிறைவேறுகிறது. ஆம்; காதலுக்குத் திரு. அகிலன் கட்டிய உரை நடை மாளிகைதான் 'பாவை விளக்கு.'

## ராஜம் கிருஷ்ணனின்

# குறிஞ்சித் தேன்

---

'மகரம்'

திருமதி ராஜம் கிருஷ்ணன் அவர்கள் எழுதிக் கலைமகள் காரியாலயம் வெளியிட்ட 'குறிஞ்சித் தேன்' என்ற நாவலைப் பற்றிய என்னுடைய சில கருத்துக்களை உங்கள்முன் எடுத்து வைக்க முன்வந்துள்ளேன்.

எந்த இலக்கியப் படைப்புக்கும் ஒரு தூண்டுதல் அவசிய மாகிறது. இந்தத் தூண்டுதலில் சூடு ஆறுவதற்குமுன் சுவையான இலக்கியம் சமைக்கும் ஆற்றல் எல்லோருக்குமே இருப்பதில்லை. இந்த நாவலின் ஆசிரியர் பெண்மணி யல்லவா? "கிடைத்த வாய்ப்பை நன்றாகவே பயன்படுத்திக் கொண்டுள்ளார்" என்று இந்தப் படைப்பை ருசித்தனுப வித்தவர்கள் நிச்சயமாகச் சொல்லுவார்கள்.

நீலகிரியில் பெரும்பான்மையாக வாழும் படக மக்களில், முதிய தலைமுறையினரின் மனப் போராட்டங்களை யும், சங்கடங்களையும், அவர்களுக்கும் பழமையின் சுவடே தெரியாமல் முன்னேறும் புதிய தலைமுறைக்கும் இடையே உள்ள ஏற்றத்தாழ்வுகள் பற்றியும் தாம் சித்திரிக்க எண்ணி யதன் விளைவே இந்த நாவல் என்கிறார், நீலகிரிப் பகுதியில்

பல வருஷங்கள் வாழும் வாய்ப்புப் பெற்ற ராஜம் கிருஷ்ணன் அவர்கள்.

சிறுகதை என்ற பெயரில், பல சம்பவங்களின் கோவையான ஒரு நாவல் சுருக்கத்தைக் கொடுத்தாலும் சப்புக் கொட்டும் வாசகர்கள், 'இதோ ஒரு நாவல்' என்று சொன்னவுடன் எவ்வளவோ விஷயங்களை எதிர்பார்க்கிறார்கள் என்று தெரிகிறது! இரண்டு மூன்று தலைமுறைகளின் சரித்திரங்களை ஆர அமரச் சொன்னால்தான் இன்றைய பத்திரிகை படிக்கும் வாசகர்களுக்கு ஒரு மனநிறைவு ஏற்படுகிறது போலும்! 'ரகு வம்சம்' எழுதிய காளிதாசனை இவர்கள் லட்சிய எழுத்தாளனாகக் கொண்டிருந்தால் அதில் வியப்பென்ன இருக்கப் போகிறது? ராஜாம்பாள், பத்மாவதி, பிரதாப முதலியார் சரித்திரங்கள் அளந்துகாட்டிய கால ஓட்டத்தைவிட நீளமான ஒரு காலகதியில், அந்தச் சரித்திர ஆசிரியர்களை முன்னோடியாகக் கொண்ட இன்றைய நாவலாசிரியர்கள், தங்கள் நாவலைச் செவ்வையாகச் செலுத்தப் பழகிக் கொண்டுள்ளார்கள்.

பன்னிரண்டாண்டுகளுக்கு ஒரு முறை நீலக்குறிஞ்சி மலர் பூக்கும் அந்த நாட்டில் அந்த மகாமக காலத்தைக் குறிஞ்சி என்றே குறிப்பிடுகிறார்கள். அந்த அளவின்படி இந்த நாவலில் நான்கைந்து குறிஞ்சிகளின் காலம் குறிக்கிடுகிறது. முதல் அத்தியாயத்தில் ஒன்பது வயதுப் பையனாக இருந்த ஜோகி, நாவலின் கடைசி அத்தியாயத்தில் ''ஐந்து குறிஞ்சிகளைக் கண்ட ஜோகிக் கிழவரா''கக் காட்சியளிக்கிறார். ஜோகியினுடைய தோழனை கிருஷ்ணனுடைய பேத்திக்கும் அவனுடைய பிள்ளைக்கும் திருமணம் நடப்பதுடன்தான் கதை முடிகிறது.

இரண்டு தனித் தெய்வங்களுக்கிடையே எழும் பூசல்கள், இரண்டு அரக்கர்கள் அல்லது இரண்டு மாமன்னர்களுக்கிடையே தோன்றும் மனக் கசப்புகள் புராணக் கதைகளுக்கோ, இதிகாசங்களுக்கோ வித்திட்டால், இன்று, இரண்டு அரசியல் கட்சிகளுக்குள் அல்லது இரண்டு குடும்பங்

களுக்குள் ஏற்படும் மன விகாரங்கள் சுவாரஸ்யமான சம்ப வங்களைக் கொண்ட நாவல்களுக்கு அஸ்திவாரமாகின்றன. ஷேக்ஸ்பியரின் 'ரோமியோ ஜூலியட்', பெர்ல்பர்க்கின் 'குட்எர்த்', க. நா. சுப்பிரமணியத்தின் 'பொய்த் தேவு' இம் மூன்று படைப்புகளுக்கும் ஜீவாதாரமான உயிர்த் தத்துவம் இந்தக் 'குறிஞ்சித் தேன்' நாவலில் துடிப்போடு இயங்குவதைக் காணலாம்.

கதைச் சுருக்கத்தைச் சற்று விரிவாகவே பார்க்கலாம். உதகை நகருக்கு அருகில், தேவர்பெட்டா மலைச் சிகரத்தின் பார்வையில் உள்ளது 'மரகதமலை ஹட்டி' எனும் கிராமம். இதில் லிங்கையன் எனும் தெய்வ பக்தியும், தயையும் நிறைந்த பெருமகனுக்கும், அவன் மனைவி மாதிக்கும் பிறந்த ஜோகியும், லிங்கையனுடைய அண்ணன் மாதனுடைய பிள்ளை ரங்கனும், ஹட்டியின் மணியக்காரர் கரியமல்லரின் பெண் வயிற்றுப் பேரனை கிருஷ்ணனும் கிட்டத்தட்ட ஒரே வயதுடைய தோழர்கள். இம்மூவர் வாழ்க்கையின் மேடு பள்ளங்களையும், ஆசாபாசங்களையும் விவரிப்பதே இந்த நாவலின் நோக்கம்.

ஜோகியின் மாமன் மகள்தான் பாரு. ஐந்து வயதுச் சிறுமியாகச் 'சிவந்த குண்டு முகம், கருவண்டு விழிகள், சுருட்டையான தலைமுடி' என்று அறிமுகம் செய்து வைக்கப் படும் பாருவின் முறைப் பையன்களான ஜோகியும், ரங்க னும் அவள்மீது காதல் கொண்டிருந்தாலும் பாருவின் மனம் கிருஷ்ணனையே நாடுகிறது. பாரு யாரை மணம் புரிவது என்ற சிக்கல் ஏற்படும்போது ஊர்ப் பெரிய மனி தர்கள் வைக்கும் ஒரு பலப் பரீட்சையில் ரங்கன் வெற்றி யடைந்து பாருவின் கணவனாகிறான்.

ஜோகி தந்தையின் அடிச்சுவட்டில் வாழும் கர்மவீரன். ரங்கனோ அவனுடைய தந்தை மாதனைப்போலக் குடிகார னாக இருந்ததுடன் எந்தத் தீய செயல்களுக்கும் அஞ்சாத ஒரு மனப்பக்குவத்தை உதகையில் அரசு செலுத்திய வெள்ளைக்காரச் சீமான்களின் அடிவருடிப் பிழைப்பை

நடத்தத் தொடங்கியதுமே பெற்று விட்டான். கிருஷ்ணன் வசதி நிறைந்த குடும்பத்துப் பையனானதால் வக்கீலுக்குப் படித்துப் பொதுவாழ்வில் நுழைந்து பங்களாக்களும், வாகனங்களுமாக ஓங்கி வளர்ந்து விட்டான்.

பாருவின் வாழ்வு பாழானாலும் அவள் தன் கணவனுக்கும் கிருஷ்ணனுக்கும் மோதல் நிகழாமல் பாடுபடுகிறாள். இதன் நடுவில் ஜோகி கிரிஜையை மணக்க அவள் நஞ்சன் எனும் குழந்தையை ஈன்று புறந்தந்துவிட்டு இறந்து விடுகிறாள். கிருஷ்ணன் ருக்மிணி சமேதனாக, நடத்திய வாழ்வில் நிறைவு கண்டாலும், பாருவைச் சந்திக்கும்போதெல்லாம் பிள்ளைப் பிராயத்து நிகழ்ச்சிகள் நெஞ்சைப் பேதுறச் செய்யாமலில்லை. லிங்கையனும் ஜோகியும் பழமையின் பிரதிநிதிகள் என்றால், மாதனும், ரங்கனும் புது நாகரீகத்தின் புரையோடிய பகுதிகளுக்குப் பிரதிநிதிகள். கிருஷ்ணனோ நாகரிகத்தின் சகல நன்மைகளுக்காகவும் வக்காலத்து வாங்கியவன். இந்த மும்முனைப் போராட்டத்தின் நடுவில் பாரு சிக்கிச் சுழல்கிறாள்.

உணவுப் பண்டங்களான சாமையும், கிழங்கும் பயிரான பூமியில் தேயிலை பயிரிடும் மோகம் அந்தப் பிராந்திய மக்களைப் பிடித்துக் கொள்கிறது. இத்துடன் அமையாமல் வளம் கொழிக்கும் வயல்களில், பள்ளிக்கூடங்களும் தேயிலைப் பாக்டரிகளும் கட்டப்பட்டு உணவு உற்பத்தி குறைகிறது. மின் விசைக்கான நீர் தேக்கப்படும்போது பல வயல்கள் மூழ்கடிக்கப்படும் நிலைமையும் உண்டாகிறது. இந்தப் பொருளாதாரப் பிரச்னையுடன் நாட்டின் விடுதலை சம்பந்தப்பட்ட அரசியல் பிரச்னையும் நாவலுக்குச் சுவையுடன் சூடும் சேர்க்கின்றன.

லிங்கையன் அமைதியான தியாக மரணம் எய்துகிறான். கிருஷ்ணனின் பேத்தி விஜயாவும் ஜோகியின் மகனும், பாருவின் வளர்ப்பு மகனுமான நஞ்சனும் மணம் புரிகிறார்கள். பாரு, தியாகத்தின் திருவுருவம், வறுமையில் வாடிய மலர்க்

கொடி. அமைதியாக நிலமகளின் மடியில் உயிர் நீக்கிறுள். இதற்குமுன், இந்த நாவலுக்கு ஒரு வில்லன் போலவே வாழ்ந்த ரங்கன் எல்லா வில்லன்களைப் போலவே பயங்கர மான முடிவை எய்துகிருன். நஞ்சன்-விஜயா ஜோடி இணைந்து இன்பமாக வாழ்வதைக் கண்டு ஜோகி ஆனந்தக் கண்ணீர் பெருக்குகிருன்.

'மண்ணிலும், மந்தையிலும் உயிரை வைத்த' லிங்கை யனுடைய பாத்திரம் இந்த நாவலுக்கு அச்சாணி, ஆணி வேர் போன்றது. எதிர்ப் படைப்பு என்று ஒன்றில்லாவிட் டாலும் கூட சோபிக்கும் தெம்பு கொண்ட லிங்கையன் குணச்சித்திரத்தைக் குன்றின் மேலிட்ட விளக்காகக் காட்டு வதற்காகவே போல் ஆசிரியர் அவருடைய சகோதரன் மாதனையும் படைத்துள்ளார். பாருவின் வெள்ளிக் காப்பை எடுத்துக் கொண்டு சிறு பருவத்திலே உதகைக்கு ஓடிப் போன ரங்கன் வாலிப் பருவ வயதில், நாலு காசு சேர்த்த மிதப்பில் ஊருக்குத் திரும்புகிருன், ''அணைக்க வேண்டிய சிற்றப்பனின் கைகள் அவன் கன்னங்களில் பாய்ந்து அறைந் தன. பழங்கள் எனச் சிவந்த கண்களுடன் வெறிக் குரலில் லிங்கையா கத்திஞர். 'எங்கேடா வந்தாய்? திருட்டுப் பயலே! போடா, போய்விடு, என் கண் முன் நிற்காதே. நீ இந்த வீட்டுப் பையன் அல்ல! போ, போய்விடு-' சிறு மையைக் கண்ட விடத்துச் சீறி எழும் அந்த நல்ல ஆத்மா படும் வேதனையை இந்த இடத்தைப் படிக்கும் ஒவ்வொரு வாசகனும் உணரும் வகையில் ஆசிரியர் எழுதி இருக்கிருர்.

சற்று வேடிக்கையாகக் கூட இருக்கலாம், இந்த நாவலின் முக்கிய புருஷன் யார் என்ருல் வில்லனுக வரும் ரங்கனைத்தான் குறிப்பிட்டுக் காட்ட வேண்டி யிருக்கும். கதாநாயக பாத்திரம் இரண்டு பட்டதால்—ஜோகியும், கிருஷ்ணனும் கதாநாயகியான பாருவைக் காதலித்த ஒரே காரணத்தால்—கூத்தாடி வில்லனுன ரங்கன்பாடு கொண் டாட்டமாகி விட்டது. எண்ணத்தாலும் செய்கையாலும் கதா போக்கிரியான அவனுக்குக் கதாநாயகியான பாருவை

மணக்கும் பாக்கியம் கிட்டியதும் அவன் அந்தஸ்து உயர்ந்து விட்டதும், ஜோகியும், கிருஷ்ணனும் வாசகர்கள் மனத்தை ஆக்கிரமிக்காத அளவுக்கு ரங்கன் நாவல் முழுவதும் நடமாடி, வாசகர்களை நயத்தாலும், பயத்தாலும் அடிமைப் படுத்தி விடுகிறான்! லிங்கையனிடம் பண உதவி பெற்றுக் கொண்டு சில கடன்களைத் தீர்க்க உதகைக்கு ஓடிச்சென்ற ரங்கனைத் துரத்திச் செல்கிறது சிற்றப்பா லிங்கையனின் மரணச் செய்தி. நாம் நினைக்கிறோம் ரங்கன் எங்கே வரப் போகிறான் இறுதி மரியாதைக்கு என்று. ஆனால் நம்மை ஏமாற்றிவிட்டு ரங்கன் ஹட்டிக்கு வரவே செய்கிறான்!

பாருவின் பாத்திரம் வாசகர்கள் அனுதாபத்தைப் பெருமளவுக்குப் பெற்றதைப் போல வேறு இலக்கியக் கதா நாயகி பெற்றிருப்பாளா என்பது சந்தேகமே. 'மூன்று குளம் வெட்டினேன் இரண்டு பாழ் ஒன்றில் தண்ணீரே இல்லை' என்று வேடிக்கையாக ஒரு வசனம் வழங்குகிற தல்லவா? இந்த வசனத்துக்கு எடுத்துக் காட்டே போல் பிறந்து வளர்ந்த பாருவின் வாழ்வில் பெரும்பாலும் விசனமே மேலாடி நின்றிருக்கிறது. பாருவை அவளுடைய இரண்டு முறைப் பையன்களான ஜோகியும், ரங்கனும் காதலிக்க, அவளோ கரிய மல்லரின் பேரனும் சுனையில் விழுந்த தன்னைத் தூக்கிக் கரை சேர்த்த நாகரிக வாலிபனு மான கிருஷ்ணனிடம் மனதைப் பறி கொடுத்துவிடுகிறாள். ஆனால் வாழ்க்கையில்விட இத்தகைய நாவல்களில் அதிக மாக விளையாடும் விதி வேண்டுமென்றே சதி செய்துவிடு கிறது! முறைப் பையன் ஒருவனைத்தான் பாரு மணம் செய்து கொள்ள வேண்டுமென்றால் அவளுடைய அழகுக்கும் குணத்துக்கும் ஜோகிதான் சமானமானவன். அவனைவிட்டு வேறு ஒருவனைத்தான் மணம் புரிய வேண்டுமென்றால் கண்ணுக்கு இனிய காதலன் கிருஷ்ணனை அவள் கைப்பிடித் திருக்க வேண்டும். இந்த இருவருக்கும் கிடைக்காத அதி ருஷ்டம் ரங்கனுக்குக் கிடைத்தது. இந்த மூவரில், தகுதியே இல்லாதவனுக்குப் பாருவின் கணவன் எனும் பதவி

கிடைத்தது. பணம் பண்ணுவதற்கான மார்க்கங்கள் பற்றியே கனவு கண்டு, அதற்காக எத்தகைய இழி செயலையும் செய்யக் கூசாத ரங்கனுடைய இதயத்தில் பாருவுக்கு உரிய இடம் எங்கே இருக்கப் போகிறது. பாரு வைத் தவிர வேறு எந்தப் பெண் பிள்ளையாக இருந்தாலும் ரங்கனுடன் பத்து நாட்கள் குடித்தனம் செய்திருக்க மாட்டாள். ரங்கனுக்காகத் தன் பழைய காதலன் கிருஷ்ணனை அடியோடு மறந்திருக்க மாட்டாள். பாருவின் குரலை இதோ கேளுங்கள். ''உங்களைக் கெஞ்சிக் கேட் கிறேன். ஒரு காலத்தில், மண்ணோடு மண்ணாகிவிட்ட காலத்திலே, அவனை நான் மணக்க நினைத்தது உண்மை தான். ஆனால் இப்போது அது எரிந்து சாம்பலாகிவிட்ட நினைவு. அந்தச் சாம்பல் கூடக் கண்ணில் பெருகி வரும் நீரில் கரைந்து விட்டது. என்னை விட்டு விடுங்கள். அவ னுக்கும் எனக்கும் ஒரு தொடர்பும் இல்லை...'' ரங்கனிடம் பாரு இப்படி அலற வேண்டி இருக்கிறது. எப்போது? 'தலை நரைத்துச் சுருக்கம் விழுந்து கிழடான ஒரு ஹட்டிப் பெண்ணாக மாறிய பிறகும்!'

ஜோகியின் மகன் நஞ்சனை வளர்ப்புப் பிள்ளையாக ஏற்றுக் கொண்ட பாருவின் தாயுள்ளம் அந்தக் குழந்தை கைநழுவி எதிரியான கிருஷ்ணனுடைய குடும்பத்தோடு ஐக்கியமாகி விடக்கூடாதே என்று பாடுபடும்போது நாம் உண்மையில் அவளுக்காக அனுதாபப்பட வேண்டியிருக் கிறது. லிங்கையன், ஜோகி போன்ற பழமையில் ஊறிய உள்ளத்தினளான பாருவுக்கு உதக மண்டலத்தைச் சுற்றி ஏற்பட்டு வந்த நாகரிகத்தின் மாறுதல்கள் அவ்வளவாக உகப்பில்லைதான். ஆனால் அவளுடைய நஞ்சன் இஞ்சினீய ராகப் போகிறான். மரகதமலை ஹட்டியிலும் மூக்குமலை ஹட்டியிலும் மின்விளக்குகள் எரியும், சினிமாக்கள் ஓடும் என்ற நினைவில் அவளுள்ளே மகிழ்ச்சிபொங்குகிறது. ''அந்த மலையில் வந்துள்ள மாபெரும் புரட்சியில் அவளுக்கு மட் டற்ற மகிழ்ச்சி இருந்ததா? அதைத் தனித்துக் கூற

முடியாது. அவளுடைய உலகின் ஆனந்தப் புரட்சி நஞ்சன். நாளை அந்த மலையிலே, அவன் கூறிய செல்வங்களெல்லாம் பெருகினால், அவளைப் பொறுத்த மட்டில் அவற்றுக் கெல்லாம் காரண கர்த்தா, அவளுடைய மகன். அவனுடைய குரலின் ஆனந்த ஒளியில் அவள் இருதயம் நிறைந்து குளிர்ந்து விட்டது. அவன் எது பேசினாலும் அவளுக்கு உகந்ததே.''

ஜோகியின் மன நிலை வேறு. பழமையைப் போற்றுவதில் அவன் பிடிவாதக்காரன். ''வெளியுலகச் சந்தடிகளும், வண்ண வாசனைகளும், போலி மினுக்கல்களும் மரகதக் குன்றுகளின் காவலை மீறி உள்ளே புகுந்து விட்டன. அந்த மலைவாழ்நரின் அமைதியையும், நிறைவையும் குலைத்து விட்டன'' என்பது அவன் தீர்மானம். ஆகையால் அவன் கேட்கிறான். ''நிறைய நிறையப் பேருக்குச் சாப்பாடும் துணியும் கிடைக்குமா? இருக்கிறவர்கள் சாப்பாட்டில் மண்ணைப் போடுவது உங்கள் படிப்பு. உங்களைப் போல் படித்தவர்களுக்கு வேலை கொடுக்க, இம்மாதிரி கல்லையும் மண்ணையும் துளைத்து, பூமித்தாயை மானபங்கம் செய்கிறார்கள். பணம் பணம் என்று மக்கள் பேயாய் அலைகிறார்கள். பணமும் மண்ணும் ஒன்றாகுமா?'' ''முன்னேற்றம் வந்திராத நிலையிலே அவர்கள் ஹட்டியிலே என்ன மேன்மை குறைந்திருந்தது? உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வித்தியாசம் இருந்ததா? உன் நிலம் என் நிலம் என்று காய்ந்தார்களா? ஒருவர் பட்டினி கிடக்க ஒருவர் கொழித்ததுண்டா? ஒரு வீட்டில் வாழ்வோ தாழ்வோ வந்தால் ஒதுங்கி நின்று வேடிக்கை பார்த்ததுண்டா? அத்தனை மேன்மைகளையும் அழித்தது எது? சாமையும், திணையும், பாலும் போதா என்ற காலம் வந்தல்லவோ எல்லாவற்றையும் அழித்தது? கிழங்கும், தேயிலையும் கொண்டு வந்த பணமல்லவோ அழித்தது? சட்டையும், சராயும் புகுந்த நாகரிகம் அல்லவோ அழித்தது? பொன்னும் பட்டும்

புகுத்திய மோகமல்லவோ அழித்தது?'' ஜோகியின் கேள்வி களுக்கு யாரால் பதில் கூற முடியும்? கான்யூட் அரசனைப் போல, நாகரிகத்தின் மோதும் அலைகளைப் பார்த்து 'என்னைத் தீண்டாதே!' என்று சொல்லும் அப்பாவிதான் ஜோகி.

கிருஷ்ணன் அன்று பாருவை மட்டும் கரை சேர்க்க வில்லை. அநாகரிகச் சேற்றில் அழுந்திப் பழமைக் குட் டையில் ஊறிய மட்டைகளாக இருப்பதே மகா ஆனந்தம், சாயுஜ்யம் என்றிருந்த மக்களுக்குக் கல்வியறிவு அளித்து அவர்களைப் புற உலகுக்கு அழைத்துச் சென்றவர்களின் முன்னோடி அவன். பாருவுக்குக் கூடத் தெரியாமல், நஞ்ச னுடைய படிப்புக்கு ராமன் மூலம் உதவியது அவனுடைய பெருந்தன்மைக்கு ஓர் எடுத்துக் காட்டு. சகல விதங் களிலும் பாருவை அடைந்து அனுபவிக்கும் யோக்கியதை அவனுக்கிருந்தும் நல்லூழ் துணை செய்யாத காரணத்தால் அந்த இன்பம் அவனுக்குக் கானல் நீராகி விடுகிறது. கதா சிரியர், கிருஷ்ணன் பாருவை கூடாக் காதலைப்பற்றிக் குறிப்பிட வாய்ப்பு கிடைக்கிறது. ''எத்தனையோ ஆண்டு களுக்கு முன்பு அவர் (கிருஷ்ணன்) உள்ளத்தில் ஒருத்தி (பாரு) புகுந்து கொண்டு நினைவைச் சிலிர்க்கச் செய்தாள்; கனவுகளில் எல்லாம் நிறைந்து நின்றாள். அவள் இருந்த இடம், அவர் உள்ளத்தில் தழும்பாக மேடிட்டுக் காய்ந்து விட்டது. ஆனால் இந்த நினைவு மாறாத வடுவாயிற்றே!''

திருமதி ராஜம் கிருஷ்ணன், இந்த நாவலில், நீல கிரியின் பழங்குடி மக்களான படகர்களின் வாழ்க்கை முறை களையும், அவர்களின் லட்சியம், கோட்பாடுகளையும் நமக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறார். பழமைக்கும், புதுக் கருத்துகளுக்கும் இடையே ஏற்படும் தத்துவப் போராட் டத்தையும், அந்தப் போராட்டத்தில் பலியாகும் பாத்திரங் களையும் உயிருள்ளனவாகப் படைத்துத் தந்திருப்பதைப் பார்த்தோம். சுற்றுச் சூழ்நிலைகளை இயற்கையாக அவர் வர்ணிக்கும் பாணி சிறப்புடையதாகவே இருக்கிறது.

நீலகிரி மண்ணின் வாசனையுடன், நீலகிரி காற்றில் கலந்து வரும் யூகலிப்டஸின் நெடியுடன், தேயிலையின் மனோகரமான மணத்தையும் நம் நாசிகள் நுகர்ந்து இன்பமடைகின்றன. ''காய்ச்சலில் கிடந்து புது இரத்தம் ஊறும் உடல் போல, வறண்ட மரங்களிலெல்லாம் புதுத் தளிர்கள் தோன்றின. காய்ந்து கிடந்த புல் தரை எல்லாம் திரை கடலோடித் திரும்பும் தந்தையை வரவேற்கத் துள்ளி வரும் இளம் குழந்தைபோல் தளிர்த்துச் சிரித்தது. சின்னஞ்சிறு வண்ண மலர்கள், புல்லிடுக்குகளில் எட்டிப் பார்த்து அடக்கமான பெண் குழந்தைகளைப் போல், இளம் வெயிலில் கள்ளமிலா நகை புரிந்தன,'' ''சுருட்டுப் புகை வெளியே அலையும் கரு மேகம் உள் வந்து விட்டதோ என்று ஐயுறும்படி சூழ்ந்திருந்தது,'' ''வானம் நிர்மலமாக, ஆயிரமாயிரம் தாரகைக் குழந்தைகள் விளையாட்டுத் தடாகமாக விளங்கியது'' என்பனபோன்ற வர்ணனைகள் நாவலின் அழகுக்கு அழகு சேர்க்கின்றன.

பத்திரிகை ஒன்றில் தொடர் கதையாக வெளி வந்ததாலேயே இதன் இலக்கியத் தரத்தை யாரும் குறைத்து மதிப்பிட முடியாது. விச்சிராந்தியாகப் படித்து, ரசித்து வாசகன் பெருமைப்பட வேண்டிய நாவல் குறிஞ்சித்தேன். இந்த நாவலின் மூலம் நீலகிரியும் உதகை நகரும், படக மக்கள் சமூகமும் மேலும் உயர்ந்து தோன்றுகின்றன என்றே எனக்குத் தோன்றுகிறது.

மூன்றும் நாள்

# தலைமை உரை

---

கு. அழகிரிசாமி

தமிழ் எழுத்தாளர்கள் எழுதிய நாவல்களைத் தமிழ் எழுத்தாளர்களைக் கொண்டே விமர்சிக்கச் செய்யும் இந்த நாவல் விழாவைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஏற்பாடு செய்திருப்பது மிகமிகப் பாராட்ட வேண்டிய ஒரு காரிய மாகும். இது எழுத்தாளர்களுக்கும், வாசகர்களுக்கும், நாவல் படைப்புக்கும் பெரிதும் உதவியாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன், மொழிபெயர்க்கப்பட்ட வங்காளி நாவல்களும், மராத்தி நாவல்களுமே, தமிழ் நாட்டில் அதிகமாக விற்பனை யாகிக் கொண்டிருந்தன. அப்போது இங்கே இரண்டொரு எழுத்தாளர்களைத் தவிர வேறு யாரும் நாவல் எழுதவில்லை. சிறு கதைகளையே மிகுதியாக எழுதி வந்தார்கள். அதன் பிறகு நிலைமை மாறியது. நாவல்கள் எழுதுவதில் தமிழ் எழுத்தாளர்கள் இப்போது தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார் கள். பிரபலமான பத்திரிகைகளில் ஒரே சமயத்தில் மூன்று தமிழ் நாவல்கள்கூடத் தொடர் கதைகளாக வெளிவரு கின்றன. புத்தக மார்க்கெட்டிலும் தமிழ் நாவல்களே அதிகம் விற்பனையாகின்றன. இன்று எழுத்தாளர்கள் மேலும் மேலும் நாவல்கள் எழுதுவதைப் பத்திரிகைக்காரர்

களும் புத்தக வெளியீட்டாளர்களும் வாசகர்களும் விரும்பு கிருர்கள். நாவல் எழுதுகிறவர்களுக்கு இன்று நல்ல வரவேற்பும், சாதகமான சூழ்நிலேயும் இருக்கின்றன. இந்தச் சூழ்நிலேயில் தமிழ் நாவல்கள் ஏராளமாக வெளி வந்து கொண்டிருப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லே.

பெரும்பாலான தமிழ் நாவல்கள் பத்திரிகைகளில் தொடர் கதைகளாக வெளிவந்தவையே ஆகும். தொடர் கதைகளுக்கு ஏற்பட்ட அபரிமிதமான தேவையினுல்தான் நாவல்கள் பெருகி யிருக்கின்றன என்றும், பெருகி வரு கின்றன என்றும் சொல்லலாம். தொடர் கதைகளாக வெளிவந்தவை என்ற ஒரே காரணத்திற்காக அவை அனேத்துமே அசல் நாவல்களல்ல, இலக்கியத்தரம் உடை யவையல்ல என்று ஒதுக்கிவிட முடியாது. அதே சமயத்தில், தொடர் கதைகளாக வெளிவராமல் புத்தகமாகவே வெளி வந்துள்ள எல்லா நாவல்களேயுமே இலக்கியப் படைப்புக்கள் என்று சொல்லிவிடவும் முடியாது. இரண்டிலும் இலக்கியத் தரம் உடையவையும் உண்டு; இல்லாதவையும் உண்டு.

ஒவ்வொரு தமிழ் நாவலின் தராதரங்களேயும் விமர் சனம் செய்வது இன்றைய நிலேயில் ஓர் அவசியமான காரிய மாகிவிட்டது. ஏனென்ருல் அதிகமாக விற்பனேயாகும் பத்திரிகைகளில் வெளிவந்து, அதிகமான வாசகர்களால் படிக்கப்படும் நாவல்களே சிறந்தவை என்ற ஒரு மனப் பான்மையும், அப்படியில்லாமல் புத்தகங்களாக வெளி வந்தவையே சிறந்த நாவல்கள் என்ற ஒரு எண்ணமும் இன்று இருந்து வருகின்றன. ஒரு நாவலின் சிறப்பை இம்மாதிரி அளவு கோல்களால் கண்டறிய முற்படுவது இலக்கியத் துறைக்கே ஆகாத ஒரு காரியமாகும். இது போன்ற தவருன மனப்பான்மைகளே நாவலாசிரியர்களிட மிருந்தும், வாசகர்களிடமிருந்தும் போக்குவதற்கு இப்படிப் பட்ட விமர்சனக் கூட்டங்கள் பெரிதும் துணே புரியும். இங்கு விமர்சகர்களால் வெளியிடப்படும் கருத்துக்கள் குறித்து அபிப்பிராய பேதங்கள் இருக்கலாம்; இருக்கவும் வேண்டும்.

ஆனாலும் நாட்டில் இப்படிப்பட்ட கருத்துக்களை உடையவர்களும் இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்கு இந்தக் கூட்டம் வாய்ப்பளிக்கிறது. அந்த அளவில் பயனும் தருகிறது என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தானே வேண்டும் ?

**ஒளிவு மறைவு கூடாது :**

தமிழ் நாட்டில் விமர்சகர்கள் தங்கள் கருத்துக்களைத் தக்க காரணங்கள் காட்டி ஆணித்தரமாகவும், ஒளிவு மறைவின்றியும் எடுத்துரைக்க வேண்டும். இப்பொழுது தங்களுக்கு வேண்டிய நாவலாசிரியர்களை விண்ணுக்கு உயர்த்தி, தமிழில் உள்ள அத்தனை புகழுரைகளையும் அடுக்கிப் பாராட்டும் வழக்கமும், மற்றவர்களின் நூல்களைத் திரும்பிப் பார்க்கவும் மறுக்கும் வழக்கமும் இருந்து வருகின்றன என்பதை நாம் அறிவோம். அதுமட்டுமல்ல சில நடுவு நிலைமையான விமர்சகர்களும்கூடப் பாராட்ட நினைப்பதைப் பாராட்டிவிட்டு, மற்ற நாவல்களைப்பற்றி எதுவும் கூறாமல் 'நமக்கு ஏன் இந்த வம்பு?' என்று மௌனம் சாதித்து விடுகிறார்கள் என்பதும் நாம் அறிந்த விஷயமே. தங்களுக்குத் தோன்றிய கருத்துக்களை மனப்பூர்வமாக ஒளிவு மறைவின்றி யாரும் எடுத்துச் சொன்னால் அவற்றை வரவேற்பவர்களும் இல்லை. சாதகமான கருத்துக்களை மட்டும் வரவேற்கிறார்கள்; மாறுபட்ட கருத்துக்களை ஏற்றுக்கொள்ள மறுக்கிறார்கள். குற்றங்குறைகளை எடுத்துச் சொல்கிறவர்களை விரோதிகளாகப் பாவித்து அவர்களைச் சமயம் வாய்க்கும்போது பழிவாங்கவும் விரும்புகிறார்கள். இந்த நிலை இலக்கிய வளர்ச்சிக்குப் பெருங்கேடு விளைவிக்கக் கூடியது என்பதை வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். இந்த நிலை நாட்டைவிட்டு ஒழிந்தாக வேண்டும். அதேபோல் கோஷ்டிகளாகக் கூடிக் கொண்டு கண்ணை மூடிக்கொண்டு தங்களுக்கு வேண்டியவர்களைப் புகழ்ந்து பிரசாரம் செய்யும் வழக்கமும் ஒழிய வேண்டும். உண்மையான விமர்சனங்களால்தான் இலக்

கியம் வளர முடியும். கண்மூடித்தனமான பாராட்டுரைகளும், திரும்பிப் பாராத அலட்சிய மனப்பான்மையும் இலக்கிய வளர்ச்சியைக் கெடுக்கவே செய்யும். உண்மையிலேயே தமிழ் நாவல்கள் முன்னேற வேண்டும்; நாவலாசிரியர்களின் திறமை வளர வேண்டும். வாசகர்களின் ரஸிகத் தன்மை அபிவிருத்தியடைய வேண்டும் என்றெல்லாம் ஆசைப்படுகிறவர்கள் நேர்மையான விமர்சனங்களையே வரவேற்பார்கள்.

இங்கே ஒரு விஷயத்தைக் கூற விரும்புகிறேன். கடந்த இரண்டு நாட்களும் நடைபெற்ற கூட்டத்தில் வாதப் பிரதிவாதங்களோ தகராறோ இல்லாமல் போனதால், 'சுவாரஸ்யமில்லாமல் போய்விட்டது' என்று சிலர் சொன்னார்கள். இன்று நான் வாதப் பிரதிவாதங்களையும் சர்ச்சைகளையும் பெரிதும் வரவேற்கிறேன். அன்பர்கள் சற்றும் தயங்காமல் தங்கள் கருத்துக்களை வெளியிட முன் வரவேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன். ஆணித்தரமான பேச்சுக்களையும், கருத்துக்களையும், கருத்து வேற்றுமைகளையும் இங்கே நான் பெரிதும் வரவேற்கிறேன்.

**க. நா. சு. விமர்சனங்கள்**

கடந்த இரண்டு தினங்களிலும் நாவல்களை விமர்சனம் செய்த அன்பர்களில் சிலர் திரு. க. நா. சுப்ரமணியம் அவர்களுடைய பெயரைக் குறிப்பிட்டு, அவருடைய விமர்சனங்களைப் பற்றிப் பிரஸ்தாபித்தார்கள். இதைப் பார்த்த ஒரு எழுத்தாள நண்பர், ''இது என்ன இது? சாதகமாகவோ பாதகமாகவோ ஒவ்வொருவரும் க. நா. சு.வின் விமர்சனங்களை ஏன் இப்படிப் பிரஸ்தாபிக்க வேண்டும்? அவருக்கு என்ன அவ்வளவு முக்கியத்துவம்? அவர் கருத்துக்கள்தான் அளவுகோல்களா?'' என்று என்னிடம் கேட்டார். அந்த அன்பருடைய கேள்விகளுக்கு இப்போது பதில் சொல்கிறேன் :

''சமீபத்தில் வெளியூரிலிருந்து ஒரு முக்கியமான எழுத்தாளர் சென்னைக்கு வந்திருந்தார். அவர் என் நண்பருங்கூட. அவர் என்னோடு பேசிக் கொண்டிருக்கும்போது ஒரு விஷயத்தைக் கூறினார்: 'புத்தகங்களையும் பத்திரிகைகளையும் பொழுது போக்குக்காக வாசிக்காமல், இலக்கிய நோக்குடன் சிரத்தையோடு படிக்கக் கூடியவர்களிடையே—ஊருக்கு ஒரு சிலராக இருக்கும்—அப்படிப்பட்ட வாசகர்களிடையே—இன்று க. நா. சு.வின் அபிப்பிராயங்களே பரவியிருக்கின்றன. அதற்குக் காரணம், கடந்த பத்துப் பதினைந்து வருஷங்களாக க. நா. சு. திரும்பத் திரும்பத் தம்முடைய கருத்துக்களை வலியுறுத்தி எழுதி வந்திருப்பது தான். இப்படி முழு மூச்சாக வேறு யாரும் விமர்சனம் செய்யவில்லை. மற்றவர்களும் முன்வந்து இலக்கிய விமர்சனம் செய்வதில் சிரத்தை காட்டினாலொழிய க. நா. சு. வின் கருத்துக்களே ஆதார சூத்திரங்கள் மாதிரி இருந்து வரும். இதை நாம் விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி.' இவ்வாறு என் நண்பர் கூறினார். இந்த நிலையில் க. நா. சு.வின் பெயர் அடிக்கடி பிரஸ்தாபிக்கப்படுவது இயல்புதானே? ஒருதலைப்பட்சமான கருத்துக்கள் நாட்டில் பரவக் கூடாது, க. நா. சு. பாராட்டாத எழுத்தாளர்களிலும் சிலர் சிறந்த இலக்கிய கர்த்தாக்களாக இருக்கிறார்கள். அவர் பாராட்டியுள்ளவர்களில் மட்டரகங்களும் உண்டு என்று நினைப்பவர்கள் இன்று செய்ய வேண்டிய காரியம் தங்கள் கருத்துக்களை தெள்ளத் தெளிவாக, விளக்கமாக, ஒளிவு மறைவின்றி எழுதுவதுதான்; ஒளிவு மறைவின்றி மேடைகளில் சொல்வதுதான். அதைச் செய்யாத வரையில், இலக்கியப் பிரியர்களிடையே ஒரு தனி மனிதரின் ஆதிக்கமே நிலவும்; பொது மக்களிடையே, அதிகமாக விற்பனையாகும் பத்திரிகைகளில் தொடர் நாவல்கள் எழுதுகிறவர்களே சிறந்த எழுத்தாளர்கள் என்ற அபிப்பிராயமும் நிலவும். விமர்சனத்துறை விரிவடைந்தாலொழிய இந்த இரண்டு நிலைகளையும் தவிர்க்க முடியாது.

### குழந்தைப் பருவம்

தமிழில் இப்போதுதான் நாவல்கள் தோன்ற ஆரம்பித்திருக்கின்றன, இந்தத் துறையில் நாம் குழந்தைப் பருவத்தில் இருக்கிறோம். வளரும் குழந்தைக்கு ஊக்கமும் உற்சாகமும் கொடுக்க வேண்டுமே ஒழிய, கடுமையான கண்டனங்களால் அதன் வளர்ச்சியைத் தடுத்துவிடக் கூடாது என்று சிலர் கூறுகிறார்கள். இந்தக் கருத்தை நான் ஒப்புக்கொள்ளவில்லை. அப்படிக் கண்டனங்களைக் கண்டு அஞ்சிச் செத்துவிடக் கூடிய எழுத்தாளர்களால் இலக்கியம் படைக்கவே முடியாது. எழுத்தாளனிடம் உண்மையும், உறுதியும், இலட்சியமும் இருக்குமானால் அவன் கண்டனங்களுக்கு அஞ்ச வேண்டியதில்லை. ''கண்டனங்களால்தான் நான் வளர்ந்தேன்'' என்று புதுமைப் பித்தன் கூறினார். எதிர் நீச்சல் போட்டு, தாமாகக் கண்டனங்கள் தகர்ந்து தவிடு பொடியாகும் வண்ணம் உன்னதமான, சாகாவரம் பெற்ற இலக்கியங்களைச் சிருஷ்டித்தவர்கள் உலகில் எத்தனையோ பேர் இருந்திருக்கிறார்கள். அவர்களைத்தான் இயல்பிலேயே, உண்மையிலேயே இலக்கிய கர்த்தாக்களாக இருப்பவர்கள் என்று சொல்ல வேண்டும்.

### பெர்னார்ட்ஷா கூறியது

பெர்னார்ட்ஷா ஒரு முறை சொன்னார்: ''உன் மகனோ மகளோ இலக்கிய கர்த்தா ஆக வேண்டுமென்று ஆசைப் பட்டால் ஊக்கமூட்டாதே, தடுத்துவிடு'' என்று. ''கலைகளில் அபார ஈடுபாடு கொண்டவளாக உன் மகள் இருந்தால், அவளைக் கலைவாசனை கொஞ்சமும் இல்லாத ஒரு வியாபாரிக்குக் கல்யாணம் பண்ணிக் கொடு'' என்றும் அவர் சொன்னார். எதற்காக இப்படிச் சொன்னார்? எதிர்ப்பையும் மீறி இலக்கியங்களையோ, வேறு கலைப்படைப்புக்களையோ செய்யக் கூடியவர்கள்தான் உண்மையான கலைஞர்கள், அவர்களால்தான் உருப்படியாக எதையும்

படைக்க முடியும், உலகத்துக்கு அளிக்க அவர்களிடம் ஏதோ இருக்கிறது என்பதும் உறுதியாகும் என்பதற்காகவே ஷா இப்படிச் சொன்னர். எனவே நாம் கண்டனங்களையோ, மாறுபட்ட கருத்துக்களையோ எதிர்த்து நிற்கும் ஆற்றல் படைத்தவர்களாக இருக்க வேண்டுமே ஒழிய அவற்றைக் கண்டு அஞ்சிப் பின் வாங்குகிறவர்களாக இருக்கக் கூடாது.

**நூறு வருஷச் சாதனை**

''நாம் குழந்தைப் பருவத்தில் இருக்கிறோம், அதனால் குறை கூறாமல் பாராட்டை மட்டுமே வழங்க வேண்டும்'' என்ற கருத்தை நான் ஒப்புக் கொள்ளாததற்கு இன்னொரு காரணமும் உண்டு. நாவல்கள் எழுதுவதில் நாம் குழந்தைப் பருவத்தில் ஆரம்ப நிலையில் இருக்கிறோம் என்பது உண்மைதான் என்றாலும், நம் கண்முன் நூறு வருஷச் சாதனை இருக்கிறது. உலகத்திலேயே நிகரற்றது என்று ஏகமனதாகப் பாராட்டப்படும் ''போரும் சமாதானமும்'' என்ற டால்ஸ்டாயின் நாவல் வெளி வந்து நூறு வருஷங்கள் ஆகிவிட்டன. அதற்கு முன்னும் பல நல்ல நாவல்கள் வெளி வந்திருக்கின்றன. பின்னும்—இன்று வரையிலும்—எத்தனையோ நல்ல நாவல்கள் வெளி வந்து விட்டன. இத்தனை நாவல்களும் ஆங்கிலத்தில் கிடைக்கின்றன. நம் ஊர்க் கடைகளிலேயே விற்பனையாகின்றன. நாமும் வாங்கிப் படிக்கிறோம். இந்த நூறு வருஷச் சாதனையைப் பார்த்த பிறகும், உலகத்தில் முதல் முதலாக நாவல் தோன்றிய காலத்தில் எப்படி எழுதப்பட்டதோ, அப்படித் தான் இப்போது தமிழ் நாட்டில் எழுதப்படும் என்று சொல்வது கேலிக் கூத்தாகும். உலகின் நூறு வருஷச் சாதனையை நம்முடையதாக்கிக் கொண்டு, அந்தச் சாதனையை ஆரம்ப கட்டமாக வைத்துக் கொண்டு மேலே செல்லத்தான் நாம் முயல வேண்டும். உலக வளர்ச்சியோடு நம் வளர்ச்சி சம நிலையில் ஒத்திருக்கும்படியாகவும், முடிந்தால் உலக வளர்ச்சியின் அளவைத் தாண்டி மேலே செல்

லும்படியாகவும்தான் நாம் எழுத பிரயத்தனம் செய்ய வேண்டும். இதை விட்டு, ''நாம் குழந்தைப் பிராயம். அதனால் அதற்குத் தக்கபடிதான் நம்முடைய எழுத்தும் இருக்கும்'' என்று சொல்லிக் கொண்டிருந்தால், நாம் நிரந்தரமாக உலக வளர்ச்சிக்கு நூறு வருஷங்கள் பின் தங்கியே இருக்க வேண்டி வரும் என்பதை மறந்துவிடக் கூடாது.

இப்படிப்பட்ட நிரந்தரமான பின் தங்கிய நிலையை யாருமே விரும்ப மாட்டார்கள். எனவே நாவலாசிரியர் களும் சரி, வாசகர்களும் சரி, உலக சாதனையைத் தங்கள் பிதுரார்ஜிதமாக வைத்துக் கொண்டு முன்னேக்கிச் செல்ல வேண்டியது அவசியம்.

**பின்பற்றுதல்**

அடுத்தபடி, ''பின்பற்று பின்பற்று'' என்று பலரும் அடிக்கடி கூறிக் கொண்டு வருவது பற்றிச் சில வார்த் தைகள் சொல்ல விரும்புகிறேன். யாராவது ஒரு எழுத் தாளரைப் பாராட்டிப் பேசும்போதோ, எழுதும்போதோ 'அவரை எல்லோரும் பின்பற்ற வேண்டும்' என்று சொல்லி முடிப்பது வழக்கமாக இருந்து வருகிறது. இந்தப் ''பின் பற்றுதல்'' என்பது, இலக்கியத் துறையில் பேசத் தகாத ஒரு பேச்சாகும். இது அரசியல் துறையில் பேச வேண்டிய பேச்சு. அதை இலக்கியத் துறையில் வந்து சொல்லிக் கொண்டிருப்பது தவறு. இது வரையிலும் நூற்றுக் கணக் கானவர்களின் பெயர்களைச் சொல்லி அவர்களைப் பின் பற்ற வேண்டும் என்றும் சொல்லி விட்டார்கள். அத்தனை பேரையும் ஒரு எழுத்தாளன் பின் பற்றுவதுதான் எப்படி? ஒருவரைப் பின் பற்றுவதே கஷ்டம், நூற்றுக் கணக்கான வர்களைப் பின் பற்றுவது எப்படி? அப்படிப் பின் பற்றினால் அவன் கதி என்ன ஆவது? எந்த எழுத்தாளரைப் பின் பற்ற வேண்டும் என்று சொல்கிறார்களோ, அந்த எழுத்தாளர் ராரைப் பின் பற்றி அந்த ஸ்தானத்தை அடைந்தார்

என்பதை யாரும் சொல்வதில்லை. அவர்களுடைய உதாரண புருஷர் யாரையும் பின்பற்றுததால்தான் இன்று இந்தத் தனிப் பெரும் ஸ்தானத்தை அடைந்திருக்கிறார் என்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள். எப்பொழுதுமே, பின் பற்றுகிறவன் என்பவன் உயர்ந்த எழுத்தாளனாகத் தலை யெடுக்கவே முடியாது. ஏனென்றால் பொருள் புதிது, சுவை புதிது, நடை புதிது என்றெல்லாம் பாராட்டக் கூடிய பற் பல புதுமைகளை இந்தப் பின் பற்றுகிறவனால் சாதிக்க முடியாது. நாவலாசிரியர்கள் தங்களுக்கு முன் வெளி வந் துள்ள நாவல்களைப் படித்துவிட்டு, அவற்றைத் தாண்டி மேலே போக, "முன் பற்ற" முயல வேண்டுமே ஒழிய, பின் பற்றுவதை நினைத்துக்கூடப் பார்க்கக் கூடாது. உல கத்தில் இது வரையிலும் இப்படி "முன் பற்றியவர்கள் தான்" அதாவது முன்னேறிச் சென்றவர்கள்தான் உயர்ந்த இலக்கியக் கர்த்தாக்களாக விளங்கியிருக்கிறார்கள். யாரை யுமே பின் பற்றாமல் புதிதாகச் சொல்வதற்கு ஏதேனும் இருந்தால் எழுத வேண்டும். அப்படி இல்லையென்றால் எழு தாமல் சும்மா இருக்க வேண்டும். நோபல் பரிசு பெற்ற ஈ. எம். பார்ஸ்டர் என்ற ஆங்கில எழுத்தாளர் பல வரு ஷங்களாக எதுவுமே எழுதவில்லை. அவரைப் பிரசுரகர்த் தர்களும் மற்றவர்களும் அணுகி, "நீங்கள் ஏன் இப்போது எதுவும் எழுதுவதில்லை?" என்று கேட்டதற்கு, "எழுது வதற்கு இப்போது என்னிடம் எதுவும் இல்லை. இருந்த போது எழுதினேன். இல்லாதபோது சும்மா இருக்கிறேன்" என்று விடையளித்தாராம் பார்ஸ்டர். அதுபோல் யாரும் சொல்லாத, கையாளாத விஷயங்களும், உத்திகளும், புதுமைகளும், இன்னும் இவை போன்ற அம்சங்களும் ஒரு வனிடம் இல்லை என்றால், அவன் எழுதாமல் இருந்து விடுவதுதான் உத்தமம்.

### எதார்த்த நிலை

நாவல்களை எழுதும்போது எப்படி எழுதினால் சுவாரஸ்ய மாக இருக்கும் என்றுமட்டும் நினைத்துக்கொண்டு எழுதினால்

எதார்த்தமாக இருக்கும் என்றநோக்குடன் எழுதவேண்டும். அது இலக்கியம் ஆக முடியாது. எப்படி எழுதினுல் நம்ப முடியாத, செயற்கைத் தன்மை கொண்ட பாத்திரங் களேயும், சம்பவங்களேயும், திருப்பங்களேயும், உரையாடல் களேயும், பாத்திரப் பெயர்களேயும் கொண்ட எந்த நாவலுமே இலக்கியத் தரமுடைய நாவல் அல்ல. ஈஸாப் கதைகள் மாதிரியோ, புராணங்களேப் போலவோ முழுக்க முழுக்கக் கற்பனேத் தன்மையோடு, ஒரு நீதியையோ ஒரு உண்மையையோ விளக்குவதற்கு ஒரு உருவகக் கதை புனேய லாம்; ஒரு நாவலே எழுதலாம். அதில் தவறு ஒன்றுமில்லே. ஆனுல் 1966-ல் சென்னேயில் நடப்பது போன்று எழுதும் ஒரு நாவலில் அந்த மாதிரியான கற்பனேத் தன்மைக்கும் செயற்கைக்கும் இடமே இல்லே. வாசகர்களுக்கு, ''இப்படி நடப்பது சாத்தியம்; இப்படிப்பட்டவர்கள் இருப்பதும் சாத்தியம்'' என்று தோன்றும்படி எதார்த்த பூர்வமான முறையில் எழுதினுல்தான் அது இலக்கியமாக முடியும். இப்பொழுது உள்ள சில நாவல்களின் கதா பாத்திரங்களின் பெயர்களே மாற்றினுல் சரித்திர நாவல் சமூக நாவலாகி விடும்; சமூக நாவல் சரித்திர நாவலாகி விடும். சென்னேயில் நடப்பது போன்று எழுதப்பட்ட நாவலில், சென்னே என்பதை அடித்து விட்டு மதுரை என்ருே, பாரிஸ் என்ருே, லண்டன் என்ருே போட்டாலும் நாவல் பாதிக்கப்படாது! இப்படி எந்தக் காலத்துக்கும் எந்த ஊருக்கும் பொருந்தும்படியாக ஒரு நாவல் எழுதப்பட்டி ருந்தால், அது இலக்கியமல்ல என்றும், உண்மையில் அது எந்தக் காலத்துக்கும் எந்த ஊருக்கும் பொருந்தக் கூடிய தல்ல என்றும் அறிய வேண்டும். ஒரு நாவல் 1966-ல் சென்னேயில் நடப்பதாக எழுதப்பட்டால், அது இந்தக் கால கட்டத்தில் சென்னேயில்தான் நடக்க முடியும் என்று சொல்லத் தக்கவாறு இருக்க வேண்டும். அப்படி காலத்தின் தனித் தன்மைகளேயும், களத்தின் தனித் தன்மைகளேயும், அந்தக் காலத்தில் அந்தக் களத்தில் நடமாடும் பாத்திரங் களின் தனித் தன்மைகளேயும் படம் பிடித்துக் காட்டுவது

தான் இலக்கியத் தரம் உடைய அசல் நாவலாக இருக்க முடியும்.

### புரியாத வழக்குகள்

நாவலில் கையாளும் பாஷை பற்றிச் சிலர் விசித்திர மான ஒரு கருத்தைச் சொல்லி வருகிறார்கள். தமிழ் நாட்டின் எல்லா ஜில்லாக்களிலும் உள்ளவர்களும், எல்லாப் பிரிவினரும் புரிந்து கொள்ளக்கூடிய சொற்களையும் சொல் வழக்குகளையுமே நாவலில் உபயோகிக்க வேண்டும் என்றும், மற்றப் பிரதேச வாசிகளுக்குப் புரியாத ஒரு குறிப்பிட்ட வழக்குகளைக் கையாளவே கூடாது என்றும் அவர்கள் சொல் கிறார்கள். நாவல் இலக்கியத்தின் அரிச்சுவடிகூடத் தெரியாத வர்களின் கூற்று என்றே இதைச் சொல்லவேண்டும். குறிப்பிட்ட பிரதேசத்தில் கதை நடப்பதாக எழுதும் போது அந்தப் பிரதேச வழக்குகளைத்தான் கையாள வேண்டும். மற்றப் பகுதிகளில் உள்ளவர்களுக்குப் புரியாது என்றால், அவற்றிற்கு அனுபந்தத்திலோ வேறு தக்க இடங் களிலோ விளக்கம் கொடுக்கலாம். அதை விட்டு விட்டு, எல்லோருக்கும் புரியவேண்டும் என்பதற்காகப் பிரதேச வழக்குகளை மாற்றி வேறு வார்த்தைகளைப் போட்டால், நாவலின் இலக்கியத் தன்மை செத்துவிடும் என்பதில் சந்தேக மில்லை. பார்க்கப் போனால் சில பொது வழக்குகளுமே பலருக்குப் புரிவதில்லை. சில ஜாதி வழக்குகளுமே அதே மாதிரித்தான். ஆனால் அவை தங்களுக்குப் புரிவதால் மற்றவர்களுக்கும் புரியத்தான் வேண்டும் என்று நினைத்துக் கொண்டு விடுகிறார்கள். அதனால் பொது வழக்குகளையே பயன்படுத்த வேண்டும், பிரதேச வழக்குகள் கூடாது என்று சொல்வதில் அர்த்தமே இல்லை.

### நாவலின் எதிர்காலம்

இனி நாவலின் எதிர்காலம் பற்றிப் பார்ப்போம். மேலை நாட்டு அறிஞர்கள் சிலர் இதைப் பற்றிக் கூறியுள்ள

சில கருத்துக்கள் இப்பொழுது நம்முடைய கவனத்திற்கு உரியவையாக இருக்கின்றன. கடந்த சுமார் ஒரு நூற்றாண்டு காலத்தில் உலகில் எத்தனையோ விதமான நாவல்கள் தோன்றிவிட்டன; எத்தனையோ விதமாகக் கதைகளைப் பின்னிப் பார்த்துவிட்டார்கள். இனி வேறு விதமான ஒரு கட்டுக் கோப்பில், வேறு விதமாகக் கதை பின்னுவதற்கு இடமே இல்லை. அதனால் நாவலாசிரியர்கள் புதிய கட்டுக் கோப்புக்களை உருவாக்கவோ புதிய முறையில் கதை பின்னவோ முயன்று மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டாம். அது நடவாத காரியம். இப்போது அவர்கள் கவனம் வேறொரு விஷயத்தின் மீது திரும்ப வேண்டும் என்று அந்த அறிஞர்கள் கூறுகிறார்கள். வேறொரு விஷயம் என்று அவர்கள் குறிப்பிடுவது பாத்திரப் படைப்பைத் தான். சமூகத்தில் பல்லாயிரக்கணக்கான பாத்திரங்கள் நடமாடுகின்றன. ஒவ்வொரு பாத்திரத்தையும் ஆராய வேண்டும். அந்தப் பாத்திரத்தின் தனித் தன்மையிலிருந்து நாவல் உருவாக வேண்டும் என்று அவர்கள் சொல்கிறார்கள். அவர்கள் குறிப்பிட்டுள்ள ''பாத்திரம்'' என்ற இந்த அம்சம் ஒரு வற்றாச் சுரங்கம் என்பதில் சந்தேகமில்லை. உலகத்தில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையுமே ஒரு பாத்திரமாகப் பிறக்கிறது. எனவே இந்தச் சுரங்கத்தைப் பயன்படுத்தத் தெரிந்தால், உலக அரங்கில் இடம் பெறக்கூடிய உயர்ந்த நாவல்களைத் தமிழ் எழுத்தாளர்கள் நிச்சயம் எழுத முடியும்.

**வேறொரு சுரங்கம்**

பாத்திரங்களுக்கு அடுத்தபடியாகத் தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் வேறொரு சுரங்கமும் இருக்கிறது. நாவல் படைப்புத் துறையின் ஆரம்பக் கட்டத்தில் நாம் இருப்பதால் இந்தச் சுரங்கம் இன்னும் அள்ளாமல் குறையாமல் இருக்கிறது. அதுதான் ''பிரதேச வாழ்க்கை'' என்ற சுரங்கம். மேல் நாட்டு எழுத்தாளர்கள் எல்லாப்

பிரதேசங்களிலும் நடப்பதுபோல் எண்ணிறந்த நாவல்கள் எழுதி இந்தச் சுரங்கத்தை அடியோடு சுரண்டி எடுத்து விட்டார்கள். வட துருவத்தில் வாழும் எஸ்கிமோக்களின் வாழ்க்கையைக்கூட அவர்கள் விட்டு வைக்கவில்லை. அவர் களுக்கு இல்லாத ஒரு வசதி, ஒரு செல்வம் இப்போது நமக்கு இருக்கிறது. தமிழ் நாட்டில் எத்தனையோ வகையான பிரதேசங்களும், பிரதேச வாழ்க்கைகளும் இருக்கின்றன. ஒவ்வொரு பிரதேசத்தின் சூழ் நிலைகள், சீதோஷ்ண ஸ்திதி கள், விளை பொருள்கள், தொழில்கள், உணவுகள், பழக்க வழக்கங்கள், ஆசார அனுஷ்டானங்கள், பேச்சு வழக்குகள் முதலிய பல விஷயங்களும் தனித் தன்மையோடு இருந்து வருகின்றன. எனவே ''பிரதேச வாழ்க்கை'' என்ற இந்தப் புதிய சுரங்கத்தைத் தோண்டினால், அங்கே அகப்படும் பொருள்களைக் கொண்டு, எத்தனையோ அரிய இலக்கியக் கோபுரங்கள் கட்டலாம்; அதாவது அரிய நாவல்களைப் படைக்கலாம். இது தமிழ் நாவலாசிரியர்கள் கவனிக்க வேண்டிய ஒரு முக்கியமான விஷயம் என்று இப்போது தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

சங்கரராமின்

# மண்ணாசை

---

கா. ஸ்ரீ. ஸ்ரீ.

'காவேரியின் குழந்தைகள்' (Children of the Cauvery) என்ற ஆங்கிலச் சிறுகதைத் தொகுதியை, ஆயிரமாயிரம் இளைஞர்கள் ஆவலுடன் படித்த காலம் ஒன்று உண்டு. ஆங்கில எழுத்தாளர்களும் திறனாய்வாளர்களும் வியந்து போற்றிய உயர்ந்த சிறுகதைகளையும் நாவல்களையும் ஆங்கிலத்தில் எழுதியவர் சங்ரராம். பிரபல எழுத்தாள ரான எஸ். வி. வி.யைப் போலவே, இவரும் ஆங்கிலத்திலி ருந்து தமிழுலகுக்கு வந்து, தமிழில் எழுதத் தொடங்கினார். இவர் நூற்றுக்கணக்கான சிறுகதைகளையும் பல நாவல் களையும் தமிழுக்குத் தந்திருக்கிறார். இவருடைய நாவல் களுள், மிகவும் சிறந்து நிற்கிறது 'மண்ணாசை'.

சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு, தமிழ்நாட்டுக் கிராமம் ஒன்றில் வாழ்ந்த குடியானவனுடைய வாழ்க்கை ஓவியம்—'மண்ணாசை'. பாரத நாட்டில் காந்தீய இயக்கம் தொடங்காத காலம் அது. எருதுகள் பூட்டிய கட்டை வண்டியையும் கூண்டு வண்டியையும் தவிர கிராமத்திலே போக்கு வரவு வசதி வேறு ஏதும் இல்லை. கிராம மக்கள்

பஸ்ஸைப் பார்த்ததில்லை. நிலமே அந்த மக்களின் தாய். அந்தத் தாய்க்குப் பணிபுரிவதே அவர்களின் வாழ்க்கை நோக்கம். அந்தப் பணியில் ஈடுபட விரும்பாதவர்கள் சிலர், சிங்கப்பூருக்கும் பினங்குக்கும் போய்க் கூலி வேலை செய்து பிழைத்துப் பிறகு கண்காணிகளாகப் பணம் திரட்டிக் கொண்டு ஊருக்குத் திரும்பியதும் உண்டு. நிலத்தைப் பண் படுத்திப் பயிரிட்டவர்களுக்கு மண்ணாசை இருந்தது; வெளி நாடு சென்று, பிறருக்கு உழைத்தவர்களுக்குப் பொன்னாசை இருந்தது; இளைஞர்களுக்கு இயல்பான பெண்ணாசை இருந்தது; அதில் போட்டியும் இருந்தது. மண்ணாசையை மகத்தான ஜீவநதியாகவும், பொன்னாசையையும் பெண்ணா சையையும் அதனில் வந்து கலக்கும் கிளையாறுகளாகவும் கொண்டு இயங்குகிறது இந்த நாவல்.

சமூகம் விரும்புவதைக் கொடுப்பதற்காக எழுதுகிறவன் எழுத்தாளனல்ல; சமூகதிலுள்ள வேதனை, இன்பம், துயரம், எழுச்சி, வீழ்ச்சி, ஆசாபாசங்கள் முதலிய உணர்வுகளுக் கெல்லாம், என்றுமழியாத இலக்கிய வடிவம் கொடுப்ப வனே உண்மையான எழுத்தாளன். சங்கரராம் உண்மை யான எழுத்தாளர்; எனெனில், ஐம்பது ஆண்டுகளுக்கு முந்திய தமிழ் நாட்டுக் கிராம மக்களின் வாழ்வில் இருந்த போராட்டம், அவா, பொறுமை, காதல், பழி தீர்க்கும் ஆவேசம், ஊர் வம்பளப்பில் ஆர்வம், பணப்பெருமையால் வரும் ஜம்பம், கொடுமையும் நெடுமையுமான பேச்சு, போலீசைக் கண்டு அஞ்சி நடுங்கும் சுபாவம், ஒருவருக்கு ஒருவர் உதவிய போதிலும் உள்ளூறப் படர்ந்த பகை— இத்தனைக்கும் உருவம் கொடுத்து, 'மண்ணாசை'யை ஓர் அமர காவியமாகப் படைத்திருக்கிறார் சங்கரராம்.

இந்த நாவலைப் பற்றிக் கால் நூற்றாண்டுக்கு முன்பு, பெ. நா. அப்புஸ்வாமி அவர்கள், 'கலைமகளி'ல் வெளியிட்ட கருத்து, என்றும் பொருத்தமாக அமைந்திருக்கிறது. அவர் கூறுகிறார்: ''காவிரி ஆற்றங்கறை மாமரத்தின் மணம் வீசுகிறது. காற்றில் தொப்புத் தொப்பென்று விழும்

தேங்காயின் ஒலி கேட்கிறது. அருவிகளின் இன்னிசை காதில் விழுகிறது. வடிகால் கரைமேல் கிடக்கிற ஈரக்களி, பிசுக்குப் பிசுக்கென ஒட்டிக்கொள்கிறது. கிராமவாசிகளின் பேச்சுக்கள் உள்ளபடி நம் செவிகளில் விழுகின்றன. வாழ்வுச் சித்திரங்கள் உண்மையாய் அமைந்து கிடக்கின்றன. இத்தகைய நாவல், சங்கரராம் எழுதிய மண்ணாசை. இது நம் நாட்டு இலக்கியம்.''

பெ. ந. அப்புஸ்வாமி அவர்கள் விஞ்ஞானியாதலால் 'இது நம் நாட்டு இலக்கியம்' என்ற 'பார்முலா'வில்—சூத்திரத்தில்—தம் கருத்து அனைத்தையும் வெளியிட்டிருக்கிறார். எனவே, இந்த நாவலில் பிறநாட்டு வாழ்வின் வாடை இல்லை என்பது தெளிவு. கிராமத்திலுள்ள பல வகை மாந்தரையும் பல வகைப் பேச்சுக்களையும் இந்த நாவல் ஊடும் பாவுமாகக் கொண்டிருந்தாலும், இங்கே நமக்குத் தெரியாதவர் இல்லை; நமக்கு விளங்காத வட்டார வழக்குகளும் இல்லை.

'மண்ணாசை' என்பது நாவல்; தொடர் கதை அல்ல. இரண்டுக்கும் வேற்றுமை உண்டு. நாவல் என்பது, ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியிலுள்ள வாழ்வின் முழு விளக்கம். தொடர் கதை என்பது, வாசகர்களை அந்தரத்தில் வைப்பதற்காக—அடுத்து என்ன வருமோ என்று அவர்களின் ஆவலைத் தூண்டுவதற்காக — 'ஸஸ்பென்ஸ்' என்ற ஒவ்வொரு நூலை அங்கங்கே தொங்க விட்டுக்கொண்டே சென்று, அந்த நூல்களை வெவ்வேறு இடங்களில் இணைத்துப் பின்னிக்கொண்டே போவது. எனவே, தொடர் கதையைப் படிப்பவர்கள் அங்கங்கே சிறிது நேரம் தொங்க வேண்டிய தேவை ஏற்படுகிறது. அதனால் தொடர் கதையில் புதிய புதிய உத்திகளுக்கு (டெக்னிக்குகளுக்கு) இடமில்லாமற் போகிறது; ஆனால் நாவலிலோ, வகை வகையான, புதுமை புதுமையான இலக்கிய வடிவங்கள் உருப்பெற வேண்டும்; இதனால்தான் அதை 'நவீனம், புதினம்' என்கிறோம். ,நாவெல்டி' (புதுமை) இல்லையென்றால் நாவல் இல்லை.

தொடர் கதைக்கு உயிர், 'ஸஸ்பென்ஸ்'; நாவலுக்கு உயிர், வாழ்வில் நிலைத்திருக்கும் தத்துவம். அதனால்தான் தொடர் கதையை நாவலாக்கும்போது, வாசகர்களுக்கு ஆவலைத் தூண்டிய அநாவசியமான பகுதிகளை நீக்கி, அதற்கு முழு இலக்கிய வடிவம் கொடுக்கப் பல ரசாயன மாறுதல்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. நிற்க,

சங்கரராமின் இந்த நாவலில், இக்கால மரபுப்படி, புதிய உத்தி (டெக்னிக்) என்று சொல்லும்படியாக ஏதும் இல்லை. கதை சொல்லும் பழைமையான வழி இது. காவிரி வெள்ளத்தைப் போலவே கதை துள்ளிக்கொண்டு வேகமாக, எங்கும் தங்கு தடையில்லாமல், செல்லுகிறது; கொலையும் கோர்ட்டு வழக்குக் காட்சிகளும் சுழல்களாக வரும் இடமும் உண்டு; ஆயினும், 'ஆலங்கட்டி மழை'யில் ஆரம்பித்தால், 'வாழ்க்கையின் விசித்திர'த்தில் சென்றுதான் நிற்கிறோம்.

கதை நிகழும் இடம், வீரமங்கலம் என்ற கிராமம். இதற்கும் ரெயிலடிக்கும் பத்து மைல் தூரம். இந்தப் பத்து மைலில் காவேரியே ஒரு மைல் தூரம். ஐந்து மைல் காட்டுப் பாதை, மீதி நாலு மைல் வண்டிகள் போக்கு வரவுக்கு வசதியுள்ள ரஸ்தா.

இந்த ஊரிலே, முன்னோர் வழியாக வந்த நிலத்துக்கு உரிய குடியானவன் வேங்கடாசலம். புது விஷயங்களைக் கிரகிப்பதில் அவன் சாமர்த்தியமுள்ளவன்; ஆனால் எதையும் நீடித்துச் செய்யமாட்டான். விவசாயத்தில் புதிய புதிய தானிய வகைகளை விளைவிக்க முயலுவான். விரைவில் பயன் பெறாவிட்டால், அந்த முயற்சியை அத்துடன் விட்டுவிடுவான். இதனால் அவனுக்குக் கஷ்டமும் நஷ்டமும் மிஞ்சும். ஆனால் அவனுடைய முயற்சியிலிருந்து பிறர் லாப முறைகளைக் கற்றுக் கொண்டார்கள்.

ஆசிரியர் ஒரு பொன் மொழியில், வேங்கடாசலத்தின் வாழ்வை நமக்குத் தெரிவிக்கிறார்—''சிலர் எந்தக் காரியத்தைச் செய்தாலும் அது அவர்களுக்குக் கைகூடி வருகிறது.

மற்றும் சிலர், எதைத் தொட்டாலும் அது நாசமாகிவிடு கிறது. முன் வகுப்பினருக்கு அநுகூலமாகச் சந்தர்ப்பங்களும் உதவி செய்கின்றன. பின் வகுப்பினர்க்குப் பிரதிகூலமாக அசந்தர்ப்பங்களும் பாழடிக்கின்றன. வேங்கடாசலத்தின் கை கொள்ளிக்கை.'' இந்தக் கொள்ளிக்கைக்காரனுக்கு ஊரில் கடன் ஏறுவதில் என்ன வியப்பு இருக்கிறது?

கணவனை இழந்து ஏராளமான செல்வத்துடன் அந்த ஊருக்கு வந்த மீனாட்சி, தன் தம்பி மாயாண்டியின் குடும்பத்தையும் ஊரையுமே ஆட்டிவைக்கிறாள். அவள் கம்மிய தொண்டையில் ரகசியமாக, ''மூணு வருசத்துக்குள்ளே வேங்கடாசலம் வட்டி கடனைத் தீர்க்காட்டி, அந்த ரெட்டி அவன் சொத்தையெல்லாம் ஏலத்துக்குக் கொண்டு வந்திடுவானும். அந்த ரெட்டி ரொம்பப் பொல்லாதவனும்'' என்று வம்பளக்கும் நிலையிலே வேங்கடாசலம் இருக்கிறான். ஆயினும், அந்தச் 'சீட்டு கிழிச்சான் கடலை'யைத் தன் புன்செய் நாற்பது ஏக்கர்களிலும் விளைவிக்க வேண்டும் என்று அவனுக்கு ஆசை. அவன் தன் நண்பன் மதுரை சொன்னபடி மீனாட்சியைக் கடனுக்கு அண்டுகிறான்.

மீனாட்சியிடம் அவன் கடன் வாங்கியதை அறிந்த ரெட்டியார், ''ஒரு மாதத்துக்குள் முதலும் வட்டியுமாகத் திருப்பிக் கொடுக்க வேண்டும்; இல்லாவிட்டால் பிராது செய்வேன்'' என்று பயமுறுத்துகிறார். ஊரிலேயே உயர்தரமான நிலம் வேங்கடாசலத்தின் 'நத்தைத் தோட்டம்'. அதன்மேல் ரெட்டியாருக்குக் கண். இதை நினைக்கும் போதே அவன் நெஞ்சம் பதறியது. அவன் வேர்த்து விறுவிறுத்துப் போய்விட்டான். 'ஓ நத்தைத் தோட்டமே, நத்தைத் தோட்டமே!' என்று கலங்கினான். தலைமுறைக் கணக்காக அவன் குடும்பத்தார் பெருமையுடன் ஆண்டு வந்த அந்தத் தங்கமான நிலத்தை அவன் காலத்திலா இழப்பது? ஒரு காலும் முடியாது!

மீனாட்சி, வேங்கடாசலத்தின் கடன்களைத் தீர்த்து விட்டாள்; ஆனால் அதற்குப் பதிலாக, அவனுடைய நன்

செய் நிலங்களைச்சுவாதீன அடைமானத்தில் கைப்பற்றினாள். நிலங்களின் மாசூலை அவள் அநுபவிப்பாள்; அதனால் அவள் கொடுத்த கடனுக்கு வட்டி கிடையாது. ஆனால் வேங்கடாசலமோ அவன் வாரிசுதார்களோ அறுபது வருஷத்துக்குள் கடனைத் திருப்பிக் கொடாவிட்டால், நிலங்கள், மீனாட்சிக்கோ அவளுடைய வாரிசுதாரர்களுக்கோ சொந்தமாகிவிடும். இவ்வளவு தாராள மனத்துடன் அவள் பேருதவி செய்தாள்! இப்படி வேங்கடாசலம் மீனாட்சியிடமும் அவளுடைய தம்பி மாயாண்டியிடமும் வகையாகச் சிக்கிக் கொண்டான். ஊரிலுள்ள மற்றவர்கள் ஏழைகள்; அவர்கள் அவனுடைய தாழ்ந்த நிலையைக் கண்டு பரிதாபப்படுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்?

வேங்கடாசலத்தின் சொத்துக்கள் ஒவ்வொன்றாக அவனை விட்டு நீங்கின. வருஷக்கணக்காக அவனிடம் வேலை செய்த பண்ணையாட்கள் வேறிடம் பிழைப்புத் தேடிக் கொள்ளக் கண்ணும் கண்ணீருமாக விடைபெற்றுக் கொண்டார்கள். ஒரு கறவைப் பசுவும், ஒரு ஜதை எருதும் போக, மற்ற எல்லா மாடுகளையும் விற்க வேண்டி வந்தது. அவற்றுடன், பெரிய வைக்கோற்போரும் போயிற்று. குன்று போல் குவித்திருந்த எருக் குவியல்!—எல்லாம் போனபின்பு இது எதற்கு? இனி எந்த நன்செய்க்கு எருப்போட வேண்டும்?

வேங்கடாசலத்துக்கு ஏற்கனவே இருந்த கீல்வாதம் பாரிசவாயுவாக முற்றியது; ஆறு மாதம் படுத்த படுக்கையாய்க் கிடந்து ஒருவாறு தேறியும், அவனுக்கு இடுப்புச் சுவாதீனமற்றே போய்விட்டது. எவ்வகையிலும் அவனுக்கு நற்கதி ஏற்படவில்லை. ஐந்நூறு ரூபாய்க் கடன்தான் ஏறியது; ஏனெனில், ஒரு வருஷம் புன்செய் சாவியாயிற்று; மற்றொரு வருஷம் தானியத்தின் விலை மிகவும் குறைந்தது.

கஷ்டப்படாமல் வாழ்வதற்குக் கொஞ்சம் நன்செய் நிலத்தை வைத்துக்கொண்டு, மீதியை விற்றுக் கடனை

அடைத்துவிட, வேங்கடாசலத்தின் நண்பர்கள் மதுரையும் வீரப்பனும் எவ்வளவோ புத்திமதிகள் கூறினர்கள். அவர்கள் தன் எதிரிகள் என்றே வேங்கடாசலம் கருதினன். தன் முன்னேர் ஆண்ட நிலங்கள் தன் குடும்பத்தைவிட்டு விலகவில்லை என்ற எண்ணத்துடன் செத்தாலும் சாவானே தவிர, அவன் அவற்றை ஒரு நாளும் விற்கமாட்டான். வேங்கடாசலம் என்ருல் அதுதான்! ''பொணம் தின்னிப் பயக! எல்லாரும் நம்ப சொத்தைக் கட்டிக்கப் பாக்கருங்களே ஒளிய, நம்பளுக்கு ஒதவி செய்யறவன் எவனும் தெம்படமாட்டான்'' என்று அவன் சொல்லுகிருன்.

வேங்கடாசலத்தின் மனைவி அலமேலுவின் வாழ்க்கையோ, வீட்டு வேலையிலும் 'சாமி கும்பிடுவதி'லும் அடங்கியிருந்தது. வீட்டின் நிலை அவளுக்குத் தெரியாமல் இல்லை. ஆனல் தன் கணவன் செல்வாக்கில் ஆசையுள்ளவளுகையால், அவன் வாழ்வுக்குக் குறைவு வராமல் இருக்க வேண்டுமென்று அவள் எப்பொழுதும் கடவுளை வேண்டிக் கொள்வாள்.

வேங்கடாசலத்துக்குச் சொந்தக் குழந்தை இல்லை; பினுங்குக்கு ஓடிப்போன நண்பன் அப்பாவுவின் ஐந்து நாள் குழந்தை வேலுவை அவன் வளர்த்து வந்தான். வேலுவுக்கு அவனே அப்பா.

வேங்கடாசலத்தின் நண்பன் வீரப்பனுடைய மகள் வள்ளியும் வேலுவும் சிறு வயது முதல் அன்பு கொண்டவர்கள். இந்த அன்பு, காதலாக மாறுகிறது. ஆனல் வீரப்பன் இப்போது தன் மகளை வேலுவுக்குக் கொடுப்பானு? அவன் மனைவி லட்சுமிதான் அதற்கு ஒப்புக்கொள்வாளா? மாயாண்டியின் இளைய மகன் மல்லனுக்கு வள்ளியை மணம் செய்விக்க அவர்கள் முடிவு செய்து, திருமண நாளும் குறித்தாயிற்று.

ஆனல், வள்ளி இதற்கு இசையவில்லை. திருமணத்தன்று காலையில் அவள் பைத்தியம் பிடித்தவள் போல நடிக்கத் தீர்மானிக்கிருள். வள்ளியும் வேலுவும் சந்தித்துப்

பேசும் காட்சிகள் நம் மனத்தை உருக்குகின்றன. இயல்பான காதற் காட்சிகள் இவை; பெண்மையின் பெருமிதத்தையும் ஆண்மையின் ஆற்றலையும் இங்கே காண்கிறோம்.

பொழுது விடிந்தால் கல்யாணம். மாயாண்டி பாதி இரவுக்கு மேல் புழைக்கடைப் பக்கம் சென்றான். எவனோ அவனைக் கொன்றுவிட்டான். ஊர் முழுவதும் அமர்க்களப் படுகிறது. வேலுவின்மேல் பழி சுமந்தது. ஜில்லா கோர்ட்டில் வழக்கு நடக்கிறது.

நிலத்தை விற்க மறுத்த அதே வேங்கடாசலம் இப்பொழுது, "வீரப்பா, வேலுவை எப்படிநாச்சும் காப்பாத்த வேணும். நான் என் நெலன், புலன், ஊடு, வாசல் எல்லாத்தையும் குடுத்திடறேன்" என்று கதறுகிறான். அவனுக்கு இப்போதெல்லாம் அடிக்கடி கடுமையான வலிப்பு வருகிறது.

வேலுவைத் தவிர வேறு யாரையும் மணம் புரிய வள்ளிக்கு விருப்பமில்லை என்பது, வீரப்பனுக்கு நன்றாகத் தெரிகிறது. அவன் மனம் மாறுகிறது; 'என் அருமை மகளின் சுகத்தை நான் பாழாக்குவதா? என் மனைவி நினைத்தாற் போல், காசு பணம் அவ்வளவு நிரந்தரமானதா? வேங்கடாசலம் இந்தக் கதிக்கு வருவானென்று யாராவது நினைத்தார்களா?' என்று தனக்குள் பேசிக்கொள்கிறான். அவனும் மதுரையும் வேலுவை விடுவிக்க வக்கீல் வைத்துப் பெருமுயற்சி செய்கிறார்கள்.

தீர்ப்பு அளிக்க வேண்டிய நாள். கோர்ட்டுக்குள் சேவகனை மீறிக்கொண்டு, ஓர் இளைஞன் ஓடி வருகிறான். "எங்கப்பனைக் கொன்னது நான்தான்!" என்று கூறி, தகப்பன்மேல் தனக்கு உண்டான வெறுப்புக்குக் காரணங்களை விரிவாகச் சொல்லுகிறான். இவன் மாயாண்டியின் மூத்த மகன் சோளன்; அத்தை மீனாட்சியின் தொந்தரவுகள் தாங்காமல் வீட்டிலிருந்து ஓடிப் போய்த் தீய வழிகளில் இறங்கியவன்.

வேலு விடுதலை பெற்று வருகிறான்; ஆனால் வேங்கடாசலத்தின் மகிழ்ச்சி நிலைத்திருக்கவில்லை. ஊருக்குள்ளே ஒரு

போலீஸ் இன்ஸ்பெக்டரும் இரண்டு சேவகர்களும் வருவதைக் கண்ட பிச்சை, ''வேலு, எங்கேநாச்சும் ஓடி ஒளிஞ்சுக்கோ! அந்தப் போலீசுக்காரப் பயக மறுபடியும் உன்னைத் தேடிக்கிட்டு வரானுக! ஓடு!'' என்கிறான்.

''மறுபடியுமா போலீசுக்காரங்க வந்துட்டாங்க! மறுபடியுமா! மறுபடியுமா! மறுபடிஈஈஈஈ—'' என்று கூக்குரலிடும் போதே, வேங்கடாசலத்துக்கு வலிப்பு வந்துவிட்டது. கால்களும் கைகளும் 'விலுக்கு விலுக்கு' என்று விரைவாக உதைத்துக் கொண்டன. கண்விழிகள் மேல்இமைக்குள் இழுபட்டு அநேகமாய் மறைந்து போயின. மோவாய்க் கட்டை கோரமாக ஒருபுறம் ஒதுங்கியது. திடீரென்று அவன் உடம்பு ஒரு துள்ளுத் துள்ளியது; மறு கணத்திலே அவன் வலிப்பு நின்று விட்டது. தொண்டையில் சில விநாடிகளுக்குக் 'களகள'வென்ற சத்தம் கேட்டது. பிறகு அவன் அசைவற்று விழுந்து விட்டான்.

பினங்குக்குச் சென்று காலமான அப்பாவு—வேலுவின் தந்தை—சாகும்போது உயில் எழுதி, வேங்கடாசலத்துக்கும் தன் மகனுக்கும் ஆறு லட்சம் ரூபாய் வைத்த செய்தியைத் தெரிவிக்கவும், வெளி நாட்டுச் சர்க்காருக்கு இவர்கள் உண்மையான வாரிசுகள் என்பதை ருஜுப்படுத்தவுமே அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்திருந்தார். ஆனால் இதைத் தெரிந்து கொள்ளும் பொறுமை, கிராமத்தார்களிடம் இல்லையே !

மதுரை இதை வேலுவுக்கு அறிவித்ததும், அவன் குமுறுகிறான்; ''எத்தினி பேருக்கு ஒவகாரம் பண்ணிச்சு! எத்தினி பேருக்குத் தலை கொடுத்தது! அதுக்கு இந்தக் க—கதியா! அது செத்தப்பறம் பணம் யாருக்குத் தேவை? எனக்குக் கால் துட்டு வாணும். நான் எங்கேநாச்சும் ஓடிப் போறேன்'' என்கிறான். மதுரை அவனைத் தேற்றி ஆறுதல் சொல்லுகிறான்.

வேலு தன் அம்மாவை உற்றுப் பார்க்கிறான். அவள் இதயம் உடைந்து விடுவதுபோல் விம்மி விம்மி அழுது

கொண்டிருக்கிறுள். வள்ளி அவனேயே பார்த்த வண்ணம் நிற்கிறுள். அவனுடைய விழியைச் சந்தித்ததுமே அவள் பெருமூச்சுவிட்டு மூர்ச்சையாகிக் கீழே விழுகிறுள்.

வேலு ஓடி அவளே வாரி எடுத்து, ''வள்ளி! வள்ளி!'' என்று அன்பு ததும்ப அழைக்கிறுன். மயக்கம் தெளிந்ததும் அவள் தேம்பியவாறே, ''என்னே உட்டுட்டுப் போவாதே!— உட்டுட்டுப் போவாதே! நீ போறப்போ என்னேயும் அளச்சுக்கிட்டு போ!'' என்று கெஞ்சுகிறுள்.

ஒரு முறை அந்தத் தீனமான பார்வை, அவன் மனத்தை உருக்கியது; மற்ருெரு முறை, அதன் அளவற்ற சக்தி அவனே அடக்குவது போல இருந்தது. அன்பும் தியாகமும் பொங்கி யோடும் அந்தப் பார்வையில் அவன் இரண்டொரு நிமிஷம் ஈடுபட்டு மதிமயங்கி நின்ருன். அப்பொழுது அது, இந்த வாழ்க்கையின் கருத்தை ஒருவாறு விளக்குவதுபோல அவனுக்குப் புலப்பட்டது. பிறகு தாழ்ந்த இனிமையான குரலில், ''உன்னே விட்டு, ஒரு நாளும் பிரியமாட்டேன்'' என்று அவன் அவளுக்கு வாக்குறுதி கொடுத்தான்.

**வே**ங்கடாசலம் என்ற குடியானவன் சுகப்படுவதற்குப் பிறக்கவில்லே. ஆறு லட்சம் வந்தபோது, அதைக் காதால் கேட்கக்கூட அவன் உயிருடன் இருக்கவில்லே. தான் பிறந்த வீரமங்கலத்தில் சமூகத்துடனும், பணமும் வசதியும் உள்ள வர்களுடனும், மனேவியுடனும் மகனுடனும், நண்பர்களுட னும், தான் கொண்ட மண்ணுசையுடனும், தானே தன்னுட னும் போராடிப் போராடி வீரமரணம் எய்திய பெருவீரன் அவன். வாழ்விலுள்ள சோகம் அனேத்தையும் அவனுடைய சரிதத்தில் பிழிந்து கொடுத்து விட்டார் ஆசிரியர்.

'மண்ணுசை', தமிழ்நாட்டுக் கிராம வாழ்வின் வர லாறு; தன் கொள்கைக்காக இறுதியளவும் போராடிய பழமையான குடியானவனின் வீரத்தை வர்ணிக்கும் காவியம்; ஆற்றலும் ஆழமும், தெளிவும் ஓட்டமும், எழிலும் இனிமையுமாகிய இலக்கியப் பண்புகள் வாய்ந்த உன்னதமான சமூக நாவல்.

தி. ஜானகிராமனின்

# மோக முள்

டி. எஸ். கோதண்டராமன்

பாபு, கும்பகோணம் கல்லூரியில் பீ. ஏ. வகுப்பில் படிக்கும் மாணவன். அவனுடைய, வயதான பெற்ருேர் கள்—வைத்தியும் அவர் மனைவியும்—பாபநாசத்தில் இருக் கிருர்கள். கும்பகோணத்தில் ஓர் அறையில் பாபுவின் வாசம். உடன் படிக்கும் நண்பன் ராஜம், இவனுடைய ஆருயிர்த் தோழன்.

சுப்ரமணிய அய்யர் என்ற பெருந்தனக்காரர் தஞ்சா வூரில் இருந்தார். சொந்த ஜாதியில் ஒரு மனைவி இருக்கும் போதே, மராத்திய வகுப்பைச் சேர்ந்த பார்வதிபாய் என்ற பெண்ணின் எழிலில் மயக்குண்டு, அவளையும் மணந்து கொள்கிருர் அவள் வழியே தோன்றியவள், யமுனு· யமுனு, நல்ல அழகி; அறிவாளியும்கூட. ஜாதி, அவள் திருமணத்துக்குப் பெருந்தடையாக இருந்ததால், பார்வதி பாயும் யமுனுவும் கும்பகோணத்துக்குக் குடி பெயர் கிருர்கள்.

யமுனுவைப் பெண் பார்க்க வரும் கோயம்பத்தூர்க் காரரை வரவேற்கும் பொறுப்பு, பாபுவின் தலையில் விழு கிறது. பல ஆண்டுகளுக்குப் பின்னர் யமுனுவைப் பார்த்த

பாபுவின் வாலிப உள்ளத்தில் ஒரு சலனம் ஏற்படுகிறது. ''என்ன! இந்தத் தெய்விகம் நிறைந்த பெண்ணை, வேறு யாரோ ஒரு சாதாரண மனிதன் அடைந்து வாழ்வதா?'' என்ற கிளர்ச்சி. யமுனா, பாபுவைக் காட்டிலும் பத்தாண்டு மூத்தவள்.

பாபு தன் மனதுக்குள் வேண்டிக் கொண்டபடியே யமுனாவின் கல்யாணம் தடைபட்டுக் கொண்டே வருகிறது. பாபுவும் கல்யாணத்துக்கு உடன்படவில்லை.

ரங்கண்ணா என்ற சங்கீதக் களஞ்சியத்திடம் பாபு இசைப் பயிற்சி பெறுகிறான். இசை ஞானமும் இசையைப் பற்றிய ஞானமும் விரிவடைகின்றன. அற்புதமான குரல் உடைய பாபுவுக்கு, இசையின்பால் பெருங் காதலே தோன்றி விடுகிறது.

ராஜம் படித்துப் பட்டம் பெற்று, திருமணம் செய்து கொண்டு வடக்கே போய்விடுகிறான். போவதற்குள், யமுனாவைப் பற்றிய பாபுவின் தீவிரமான எண்ணங்களைப் பார்வதிபாயிடம் சொல்லத் தவறவில்லை.

சுப்ரமணிய அய்யர் கிராமத்தில் மரிக்கவே, பார்வதி பாய் நிர்க்கதியாய் விடுகிறாள். யாரோ ஒரு வயோதிகருக்கு வாழ்க்கைப்பட மறுத்ததன் காரணமாக யமுனாவுக்கும் பார்வதிபாய்க்குமிடையே பிளவு வலுப்பட்டுக் கொண்டே வருகிறது.

பாபு, பட்டணத்தில் ஓர் இன்ஷ்யூரன்ஸ் காரியாலயத்தில் வேலை ஏற்கிறான். சங்கீத சிட்சை வேறு.

ஒரு நாள், அவன் சற்றும் எதிர்பாராத விதமாய், ஜமுனா அவன் காரியாலயத்துக்கே வந்துவிடுகிறாள், பட்டினியும் வறுமையும் உருவெடுத்தாற் போல. அவளை ஓர் அனாதை ஆசிரமத்தில் சேர்க்கிறான், பாபு.

ரங்கண்ணாவின் சீடரும், பிரபல பாடகருமான பாலூர் ராமுவின் நட்பு பாபுவுக்குக் கிட்டுகிறது. பாலூர் ராமு

வுக்கு வளமான இசை ஞானம் மட்டுமே உண்டு; குரல், பிரமாதமாக ஒத்துழைக்காது. கும்பகோணத்தில் இருக்கும்போது, விசுவம்பர் காணே என்ற மராத்தியப் பாடகரின் குரல் வளத்தை அனுபவித்த பாபுவுக்கு, இப்போது நெஞ்சு தவிக்கிறது; ''நாமும் அவரைப் போல் குரலைப் பண்படுத்தினுல் என்ன?''

இதற்கிடையில், பாபுவுக்கு ஜுரம் வந்து விடுகிறது. ஞாயிற்றுக்கிழமையன்று அவனைக் காண வந்த யமுனு, அவனுக்குப் பணிவிடை புரிவதற்காக, அன்றிரவு அவன் அறையிலேயே தங்குகிருள். அவளைக் கண்டதுமே பாபுவின் உடல் நோய் மறைந்து விடுகிறது. ஆம், நீண்ட நெடு நாளாய் இருந்த உள்ளத்து நோயும் தீர்கிறது. அவனுடைய நெஞ்சக் கனலுக்கு குளிர்புனல் அமுதமாய் அமைகிருள், அவள்.

பின்னர், பாபுவின் குரலினிமையை அறிந்த யமுனு, 'விசுவம்பர் காணேயிடம் சென்று பயிற்சி பெறவேண்டும்' என்ற அவனுடைய யோசனைக்குப் பேராதரவு அளித்து, அவனை மிகவும் உற்சாகப் படுத்துகிருள்.

வேலையை ராஜினுமா செய்துவிட்டு பாபு மங்கள் வாடிக்குப் புறப்படுகிருன். யமுனு, ஸெண்ட்ரலில் விடை கொடுக்கிருள். பழைய காலத்து மனிதரான வைத்தி, யமுனுவை தன் குடும்பத்தவளாக அங்கீகரிக்கும் கடிதத்தை வண்டி புறப்படும்போது பாபுவிடம் கொடுக்கிருள். பாபு படித்துவிட்டு, 'அப்பா எவ்வளவு பெரியவர்!' என்று வியப்பும் திகைப்பும் அடைகிருன்.

'உணர்ச்சியால் உந்தப்பட்டுத் தன்வசமிழந்தோரின் தவிப்பைத் தெள்ளத் தெளியத் துலக்கிக் காட்டும் மனே தத்துவ சித்திரம்' என்று சுதேசமித்திரனில் விளம்பரப் படுத்தப்பட்ட இந்தப் புதினத்தின் நாயகன், பாபு; நாயகி, யமுனு.

தி. ஜானகிராமனின் இந்த நாவலை, மற்ற நாவல்களோடு—தமிழ், ஆங்கிலம் எதுவாயினும் சரி ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது. சாதாரணமாய் ஒப்புக்கொள்ளப்பட்ட இலக்கிய வரம்புகளைக் கடந்து, புதிய எல்லைகளைச் சமைக்கும் ஆற்றல் ஆசிரியருக்குக் கைவரப் பெற்ற சிறப்பு. மேலும், இது அசல் தமிழ்ப் புதினம். தமிழ் நாட்டின் தனித்தன்மை விளங்குகிற நாலைந்து நாவல்களுக்குள், 'மோக முள்'ளுக்குச் சிறப்பான ஓர் இடம் கட்டாயம் உண்டு.

வாரப் பத்திரிகை ஒன்றில் வெளியிடப்பட்டிருந்தும் கூட, ஒவ்வோர் அத்தியாயத்தின் இறுதியிலும் வியப்போ விறுவோ தோன்றவேண்டும் என்ற கட்டுப்பாடில்லாமல் ஒரு வித சுதந்திரத்துடன் எழுதியிருக்கிறார், ஆசிரியர். உண்மையில் இந்த நாவல் அத்தியாயங்களாக பகுக்கப்படவேயில்லை. உயிருள்ள கதாபாத்திரங்களை உலவவிட்டிருக்கும் ஆசிரியர், பாத்திரங்களின் இயல்புகளையும், இயல்புகளை விளக்கும் நிகழ்ச்சிகளையும் ஆற்றொழுக்குப் போல் இடையீடின்றி நிகழ்த்தியிருக்கிறார். வாசகனைப் பிரமிக்க வைக்கவேண்டுமென்றோ, தன் எழுத்து வன்மையால் அவனைத் திணறடிக்க வேண்டுமென்றோ ஜானகிராமன் முயலவே இல்லை. காலத்தாலும் இடங்களாலும் பாத்திரங்களாலும் மிகப் பரந்து விரிந்திருக்கும் இந்த நாவலில், எதிர்பாராத திருப்பங்கள் பல ஏற்படவே செய்கின்றன. ஆனால், ஓர் இடத்திலாவது, 'ஏ, வாசகனே! கவனி. இப்போது உன்னை ஓர் ஆச்சரியத்தில் மூழ்கடிக்கப் போகிறேன்!' என்று கையை உயர்த்திச் சொல்லவேயில்லை. ஓர் உதாரணம்: பாபு அலுவலகத்தில் இருக்கும்போது, வேலைக்காரன் வந்து, நடுத்தர வயதைக் கடந்த மாது ஒருத்தி, அவனைத் தேடி வந்திருப்பதாகத் தெரிவிக்கிறான். பாபு வெளியே வந்து பார்க்கிறான். 'யமுனா நின்று கொண்டிருந்தாள்.' என்ற குண்டைப் போட்டுவிட்டுத் 'தொடரும்' என்று ஆசிரியர் எழுதியிருக்கலாம். ஜானகிராமன் அப்படிச் செய்பவர் அல்லர். பிராசீனமான இந்த முறையில் எழுதி வாசக

னுடைய அபிமானத்தைப் பெற விழைபவர் அல்லர். 'யமுனு ஏன், எப்படி அங்கே வந்தாள்?' என்ற நம் திகைப்புக்கு விடை கூறுமாப்போலே, பத்து நிமிஷம் நின்று பேசி விட்டே போகிருள். அப்படிப் பேசியதால் பாபுவும் நாமும் சமாதானம் அடையவே செய்கிரேம்.

ஆசிரியர், சம்பாஷணை ரூபமாகவே கதையின் பெரும் பகுதியை எழுதியிருக்கிருர். அலை அலையாகச் சம்பாஷணைகள் வரும்போது, 'வெறும் சம்பாஷணையைத் தவிர, இந்தக் கதா பாத்திரங்களுக்கு, வேறு தொழிலே இல்லையோ?' என்று தோன்றுகிறது. ஜானகிராமனின் குறையும் நிறையும் இந்த உரையாடல்கள்தான். உரையாடல்கள் மூலமே, பாத்திரங்களின் இயல்பையும் ஈடுபாட்டையும், தவிப்பையும் விழிப்பையும் சுட்டிக் காட்டுகிருர், ஆசிரியர்.

நாவலின் கருப்பொருள் அசாதாரணமான தொன்று. பாத்திரங்களையும் அசாதாரணமான வெற்றியுடனே படைத்திருக்கிருர், நாவலாசிரியர். உணர்ச்சிக் கனலாய் விளங்கும் பாபு, தியாகச் சுடராய் நிற்கும் யமுனு ஆகிய முக்கியபாத்திரங்களைப்போலவே நாதோபாசகர் ரங்கண்ணு, நண்பன் ராஜம் பக்கத்து வீட்டுக் கிழத்தின் இளம் மனைவி, பாலூர் ராமு, பார்வதிபாய், அண்ணன் சங்கு, கோயம்புத்தூர் போஸ்ட்மாஸ்டர், பட்டணத்து வீட்டுக்காரர், பத்மாசனி அம்மாள் ஆகிய பின்னணிப் பாத்திரங்களும் முழுமையாகவே காட்சி தருகிருர்கள்.

ஆசிரியருக்குச் சங்கீதத்தில் உள்ள ஈடுபாட்டை வெறும் உரைநடையால் சொல்லிக்காட்ட முடியாது. நல்ல கவிதையால், ஒருக்கால், சொல்லிக் காட்ட முடியலாம். சங்கீதத்தைப் பற்றி எழுதும்போதே ஆசிரியருக்கு 'ஆனந்த பைரவி' யின் தரிசனம் கிடைத்து விடுகிறது. எழுதுகோலில் ஸ்வர ப்ரஸ்தாரங்கள் புகுந்து கொள்கின்றன. நடையில் ஓர் ஆலாபனை இயற்கையாய் சஞ்சரிக்கிறது. படிக்கும்போது நம்முடைய சரீரத்தின் ஒவ்வோர் அங்கத்திலும் நாத

அலைகள் புகுந்து, நாதப் பிரும்மத்தில் லயிக்கச் செய்கின்றன. தம்புராவின் நாத வர்ணனையைப் பாருங்கள். 'அதன் தூய நாதம், குறையின்றி சுருதி சேர்ந்த நாதம், காந்தாரக் கார்வையுடன் அலை அலையாக ஒன்றன்பின் ஒன்ருக எழுந்து பரவிக்கொண்டே யிருந்தது.'

'ஸகா...ங், ஸகா...ங்...என்று தம்புராவின் ஓசை கேட்கிறது.'

அரஸிகனுக்கு வெறும் இரைச்சலாகப் படும் வெறும் ஓசைகள்கூட, ஆசிரியருக்கு நயமான இசையாகக் கேட்கிறது.

'வெளியே ஓயாத கார் ஹார்ன்களின் சப்தம். தா...தா, என்று சதுச்ருதி தைவதத்தில் பாடி வழி செய்து கொள்கிறது, கார். இன்னும் ஒரு கார்...பழைய காலத்து ரப்பர் ஹார்ன். பஞ்சமத்தில் கத்தி விரட்டுகிறது. பஞ்சமம் மட்டும் இல்லை. இரண்டு மூன்று ஸ்வரம் கேட்கிறது. தபநீ, தபநீ, தபநீ...பா...பா...பா...

கோதண்டபாணி மணியைத் தட்டுகிருர். ஸா ஸா என்று மேல் ஷட்ஜமம் பிடிக்கிறது. கர்ர்ர்ர் என்று கால் நிமிஷம் கூறிவிட்டு சுவர்க் கடிகாரம் மணி அடிக்கிறது. இந்தக் காரலைப் பார்த்தால், புல்லூர் அண்ணு கீழ் ஷட்ஜமம் பிடிக்கிருப் போலிருக்கிறது. பாலூர் ராமு சொல்கிருப் போல், அவருக்குச் சாராய சாரீரம். கீழே பேச மறுக்கிறது, குரல். காருகிறது. இந்தக் கடிகாரம் எந்தக் கடையில் மது குடித்ததோ?'

நாவலில் குறிப்பிடத்தக்க சில வர்ணனைகள் இடம் பெற்றிருக்கின்றன. அப்படி வர்ணிக்கும் கட்டங்களிலும் ஜானகிராமன் தனித்தே நிற்கிருர்.

கிராமத்தில் ஆற்றின் கரை; சூரியன் மறையும் வேளை; சுற்றிலும் பச்சைப் பசுமை—இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலை

கிடைத்தால் நாவலாசிரியர்களுக்குக் கன குஷி. தம் கற்பனைத் திறனையெல்லாம், இந்த ஆற்றங்கரையை விட்டால் வேறு எங்கேதான் காட்டுவது? நாலைந்து பக்கங்களுக்கு எழுதிவிட்டுத்தான் ஓய்வார்கள். நல்லகாலமாக, 'மோக முள்' அந்தக் குற்றத்துக்கு ஆளாகவில்லை. இரண்டு, நான்கு வாக்கியங்களிலேயே பெருஞ் செயலை சாதிக்க முடிகிறது, ஆசிரியரால். உதாரணம் :

'அப்பா எதிரே வான் முகட்டில் தகதகத்த தங்க ஓடைகளையும் ரோஜா நிறப் பஞ்சுகளையும் பார்த்துக் கொண்டே நடந்து கொண்டிருந்தார்.'

'வளர்பிறையின் ஏழாம் மதியொளி, லேசாகக் குங்குமப்பூ போட்ட பாலைப் போல, தெருவில் நீலமும் மஞ்சளும் வெண்மையும் கலந்த ஒளிப் பரப்பாக விழுந்திருந்தது.'

வேறு சில :—

'கிழமைகள் தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டிருந்தன. எந்த அவசரத்தையும் சட்டை செய்யாத நடுத் தெரு எருமைகளைப் போல ஊர்ந்தன.'

'மல்லிகைப் பூவைவிட ஜாதிப் பூதான் ஓஸ்தி. மல்லிகைப் பூ வாசனை, சாந்திக் கல்யாண அறை வாசனை வீசுகிறது. ஜாதிப் பூவில் கோவிலின் மணம், பூஜையின் மணம் வீசுகிறது.'

•

கதாபாத்திரங்கள் எல்லோரும் தம் ஜாதிக்கும் தொழிலுக்கும், படிப்புக்கும் சுற்றுச் சார்புகளுக்கும் ஏற்பவே உரையாடுவது இந்த நாவலில் குறிப்பிடத்தக்க ஓர் அம்சம். கிராமியச் சொற்களும், கிராமவாசிகளின் அவலமும் ஆற்றுமையும், இன்பமும், ஈடுபாடும், உடையும் ஊணும்,

எழுச்சியும் ஏலாமையும், ஐயமும், ஒற்றுமையும் ஓரவஞ்சனையும்—ஜானகிராமனின் துருப்புச் சீட்டுகள். இவைகளில் சில இயல்புகள், பாத்திரங்களிடையே ஸ்வாபாவிகமாய் வெளிப்பட்டிருக்கின்றன.

*

சில சிறப்பான கருத்துக்களையும் நாவலாசிரியர் கதா பாத்திரங்களின் வாயிலாக வெளியிட்டிருக்கிறார்.

படி, படி என்று பாபுவை வற்புறுத்தியதே இல்லை, அவனுடைய தந்தை வைத்தி. அவன் புத்தகங்களைப் படிக்காததைக் கண்டு கோபித்ததும் இல்லை. ஆனால், அவனுடைய அம்மாவோ 'படி, படி' என்று தொண தொணக்கிறாள். இதைப் பற்றி ராஜம், பாபுவிடம் குறிப்பிடுகிறான் :

'நம்ப அம்மால்லாம் படிச்சதில்லே. அதனாலெதான் படிப்பினுடை அருமை அவாளுக்குத் தெரியறது. அப்பா எல்லாம் படிச்சிருக்கா. ஆனா புஸ்தகத்திலே சொல்றாப் பிலே நடக்க முடியறதில்லே. பிறத்தியார் படிக்காம இருந்தா இவாளுக்குக் கோபமும் வரதில்லே.'

கும்பேஸ்வரன் கோவில் மங்களாம்பிகையைப் பற்றிச் சொல்கிற இடம் :

'பெண்மையைப் போற்ற, பெண்ணையே கடவுளாக வைத்து, அதன் அழகையும் அருளையும் சிலையாய் வடித்துச் செய்த அழகிய சதி இது.'

பெண் கல்வி பற்றி, ராஜத்தின் அபிப்பிராயம் :

'படிச்சா, விஷமம் எங்கே இருக்குன்னு கண்டுபிடிச்சு வக்கவாவது முடியும். எது நல்லது, எது கெட்டது, எது பத்திரம், எது ஆபத்துன்னு புரிஞ்சுக்க முடியும். தைரியம்னா இதுதான். அறிவுதான் தைரியம்.'

நாவலில் நினைவோட்டங்கள் நிறையவே இடம் பெற்றிருக்கின்றன. பாபு, ஒரே சிந்தனை மயம்தான்! அவனு

டைய இருதயத்தின் உள்ளே உள்ளே சென்று, மிகவும் ரகசியமான இடத்தில், மிக மிக நுட்பமாக அதிரும் எண்ண அலைகளையெல்லாம், ஒரு திவலைகூட விடாமல் பிடித்துத் தந்திருக்கிறார், ஆசிரியர். ஓயாமல் ஒழியாமல் பாபு சிந்திப்பதைப் பார்த்தால், 'அவனுக்கு எப்படிப் பைத்தியம் பிடிக்காமல் இருந்தது?' என்ற ஆச்சரியம்கூட நமக்குத் தோன்றுகிறது. விரிவும் ஆழமும் தோன்ற பாபு தன் மனத்துக்குள்ளேயே சிந்திக்கிறான். சிந்தனை இயல்பானதுதான். ஆனால், அதை அப்படியே, மனத்தில் நிகழ்கிறபடியே வடித்துக் கொடுத்தால், படிப்பவருக்குப் புரிந்துகொள்வதில் முட்டுப்பாடு தோன்றுகிறது. குறிப்பாக, காலப் புள்ளிகளைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படாத ஆசிரியர், வெறும் உரை ஓட்டமாக எழுதியிருப்பதால், சில சிந்தனைகள் இடப் பொருத்தமற்றவையாகத் தோன்றுகின்றன. எனினும், பாபுவின் உள்ளப் போராட்டத்தை விளக்கும் ஓர் இடத்தில் ஆசிரியர் கையாண்டிருக்கும் ஒரு சோதனை உத்தியை நாம் பாராட்டவே செய்கிறோம் :

'யமுனா, யமுனா...என்ன பாபு......இப்படியேதான் இருக்கப் போறியா நீ...எப்படி...இப்படித்தான்...பின்னே எப்படி இருக்கணுங்கறே...எனக்கு என்ன சொல்றதுன்னு தெரியலே...என்ன சொல்லணும்...உனக்குப் புரியலியா... புரியறது...நீ மனுஷியில்லியா? மனித உணர்ச்சிகளே கிடையாதா?...இருக்கு...பின்னே? அதுக்காக நான் என்ன பண்றது!...பாபு, இதெல்லாம் வாண்டாம்...'

*　　　*

பாபுவுக்கும் யமுனாவிக்குமிடையே தோன்றிக் கிளர்ந்து வளர்ந்த உறவுதான்—எந்தச் சக்தியாலும் தகர்க்க முடியாத உறவுதான்—நாவலின் முடிச்சு. யமுனாவைப் பற்றி பாபுவின் சிந்தனையைக் கேட்போம் :

'தலையணையில் சற்று லேசாக வலது பக்கம் சாய்ந்திருக்கிறது, யமுனாவின் தலை. மல்லாந்து படுக்கை. காலிரண்டும்

மடங்காமல் நீண்டு கிடக்கின்றன. சற்றுத் துவண்டு தளர்ந்து ஓய்வுபெறும் துவட்சி. தலைப் பின்னல் தலையணை யில் ஏறி வளைந்து பின்னல் கிடக்கிறது. எனக்கு இருபத்து நான்கு முடிந்து விட்டது. இவளுக்கு முப்பத்து ஐந்து நடந்து கொண்டிருக்கும்.'

என்றாலும், யமுனா அவனுக்காகவே பிறந்தவள். அவளை அடைவதால் தோன்றக் கூடிய இன்னல்களைக் கண்டு, 'நான் அழமாட்டேன். நீயும் மனசிருந்தால் அழாமலிருக்க முடியும்' என்கிறான், பாபு.

'நாலைந்து மாசமாக வெவ்வேறு ஜோடிகளிலிருந்து பொறுக்கின இரண்டு செருப்பைப் போட்டுக்கொண்டு நடக்கிறாப் போல்' இருந்த பாபு, ஒரு நாள், தன் உள்ளத் துடிப்பை அவளுக்கு உணர்த்தியே விடுகிறான்.

'இப்படியெல்லாம் எங்கிட்டப் பேச எப்படி துணிஞ்சுது உனக்கு?...என்னிடம் யாரும் இதுவரை இந்தமாதிரி பேசின தில்லை' என்று முதலில் கேட்கிறாள், யமுனா. ஆனால், கடைசியில், அவனுடைய பிடிவாதம், பிடிவாதத்தின் ஆழம், அந்த ஆழத்தில் தன்னுடைய ஸ்தானம், அந்த ஸ்தானத்தில் தன் சான்னியத்தின் இன்றியமையாமை— அதை உணர்ந்து, 'பாபு, உன் திருப்திதான் என் திருப்தி. உன் சந்தோஷம்தான் என் சந்தோஷம்' என்று கூறி, அவனில் தன்னையே கரைத்துக் கொள்கிறாள்.

இந்த இரு தூய உள்ளங்களின் அலௌகிக ஆனால், தவிர்க்க இயலாத ஒன்றிப்புக்கு, சம்பந்தப்பட்ட பெரியவர் களின் ஒப்புதலைப் பெற்றுத் தருவது ஆசிரியரின் கடமை யாகிறது. இல்லையெனில், விளக்கம் பெறவந்த கரு, சிதைந்து தோற்றுப் போகும். எனவே, பார்வதிபாயை இப்படிப் பேச வைத்திருக்கிறார், ஆசிரியர்.

'ஆனா இந்த விஷயம் அவ்வளவா ஒத்துக்க மாட்டாங் கன்னு சொல்லிச்சு,' ராஜம். வாஸ்தவம்தான்...ஆனா...

வந்து...எனக்கென்ன?...நம்ம தேசத்திலேயே இந்தப்பழக்கம் இல்லாம இல்லெ...நான் யாரு வேண்டாம்னு, சரி யில்லேன்னு சொல்றதுக்கு? அப்படிச் சரியில்லேன்னு நான் நினைக்கவும் இல்லே. எல்லாரும் சந்தோஷமா இருக்குறதுக்குத்தான் பிறந்திருக்கோம்.'

இறுதியில் பாபுவின் தந்தையான வைத்தி யமுனாவுக்கு ஒரு கடிதம் எழுதுகிறார். கடிதத்தின் ஆரம்பமே, 'ஸ்ரீமதி யமுனாவுக்கு அநேக ஆசீர்வாதம்' என்பதுதான். தொடர்ந்து, '...டிஸம்பர் கடைசியிலோ பொங்கலுக்கோ லீவு விட்டால் நீ இங்கு வந்து இருந்துவிட்டுப் போகவும்......எனக்கு வயசாகிக்கொண்டே போகிறது. யாராவது அருகில் இருந் தால் தேவலை போல் இருக்கிறது' என்று குறிப்பிடுகிறார். வைத்தி, குடும்பத்தின் அரசர். 'அரசரின் ஆணையை மற்ற வர்கள் மீறமுடியாது' என்பது அங்கே தொனிப் பொருள்.

* *

இலைமறை காயாகத் தெரிவிக்கவேண்டிய ஒரு செய் தியை, சமிக்ஞை மூலமே காட்டி மகத்தான வெற்றி அடைந் திருக்கிறார், ஆசிரியர். யமுனாவுக்காகத் தவிக்கிறான், பாபு. 'பத்து வருஷம் என்ன? அதுக்கும் முன்னாலேயே பிடித்து அடிக்கிற ஜுரம் இது.' இரவு வேளை. தனிமையில் பாபுவும் யமுனாவும், யமுனாவுக்கோ பாபுவைத் தவிர வேறு எந்த உற்றமும் இல்லாத நெகிழ்ந்த நிலை. இப்போது, நாம், பொதுவாக என்ன நடக்கும் என்று எதிர்பார்ப்போமோ, அது நடந்தே விடுகிறது.

ஜானகிராமன் சொல்வதைக் கேளுங்கள் :

'உலகெல்லாம் தூங்குவது போலிருந்தது.

இங்கு, விழிப்பின் மடியில் உணர்வு துள்ளிக் கொண் டிருந்தது. உலகத்தின் மலைவெளிகளில் உள்ளம் ஏறித் தனிமையின் ஆட்சியை அருந்திக் கொண்டிருந்தது. குகை யும் சிகரங்களும் நிறைந்த மலைவெளியின் தனிமையில்

ஆழ்ந்த மறதியும் தன்மயமும் தோன்றுகின்றன. உலகில் காணாத அருவிகளில் கண்ணும் உள்ளமும் நனைகின்றன...'

பொழுது புலர்கிறது.

'யமுனா எழுந்துவிட்டாள்.

அருகே வந்து நின்றாள்; அவன் கையைப் பிடித்தாள்.

'திருப்திதானே?'

இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்கிறது?

'இதுக்குத்தானே?'

பாபுவுக்கு ஒன்றும் புரியவில்லை. 'இதுக்குத்தானா?' என்று அவனும் கேட்டுக்கொள்கிறான். தலை கவிழ்கிறான். அவள் மெல்ல நகைக்கிறாள். 'அந்தப் புன்னகையில்...அம்பு பாய்ந்த உயிரின் சிரிப்பு ஒளிர்ந்தது. நிலைத்து நின்ற விண்மீன்கள் பெயர்ந்து உதிர்ந்த குலைவு கிடந்தது.'

யமுனாவை ஒரு தியாகியாகக் கூறப்பட்டிருக்கிறது, நாவலில். நாவலின் தொய்வான பகுதி இதுதான். கதையின் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் வெகு அழுத்தமாக கூறியிருக்கும் ஆசிரியர், இந்த இடத்தில் சளைத்து விட்டார் என்றுதான் எனக்குப் படுகிறது. பாபுவிடம் தன்னையே ஒப்படைத்தது, யமுனாவின் தியாக சிந்தைக்குப் பதிலாக, சமய சந்தர்ப்ப நெருக்கடிக்கு ஏற்ப அவள் வளைந்து கொடுத்து விட்டாள் என்ற எண்ணத்தையே உண்டாக்குகிறது. பாபுவுக்குப் பணியாமல் அவள் வேறு என்ன செய்திருக்க முடியும், அவள் அப்போதிருந்த நிலையில்? சோக நதியில் மிதந்து கொண்டிருந்த யமுனாவுக்கு, பாபு ஒரு துரும்பு. அவள் பற்றிக்கொள்ளத் தக்க துரும்பாக அமைந்தது பாபுவின் நல்லூழேயாகும்.

நாவலின் இடைப் பகுதி வரை, வாயில் வெற்றிலையைப் போட்டுக் குதப்பிக் காலத்தைக் கழிக்கும் கும்பகோணத்து ஜனங்களைப் போல அவசரமில்லாமல் செல்லும் கதை, பிற்பகுதியில், பரக்கப் பரக்கச் சாப்பிட்டுவிட்டு பஸ்ஸைப் பிடிக்க ஓடும் பட்டணத்து ஜனங்களைப்போல விரைந்து செல்கிறது.

நாவலில் குறிப்பிடத்தக்க இரண்டு பிழைகள் உள்ளன. ஒன்று: ஒரு அழகு, ஒரு இல்லம், ஒரு உள்ளம் என்பன, ஓர் அழகு, ஓர் இல்லம், ஓர் உள்ளம் என்று அவை இருக்க வேண்டும். குறிப்பாக, ஆசிரியக் கூற்ருக வரும் இடங்களி லேனும் இத்தகைய இலக்கண வழு ஏற்படாமல் இருக்க வேண்டும்.

மற்றது: பத்யம், வைத்யம், பட்ணம், சத்யம் என்பன. இவை, பத்தியம், வைத்தியம், பட்டணம், சத்தியம் என்றிருக்க வேண்டும். வடசொற்களைத் தமிழ்ப் படுத்துவதற்கு சில விதிமுறைகள் உண்டு.

* *

'அணைக்கரை பஸ் ஆனையடியைக் கடந்துவந்து, டவுன் ஹைஸ்கூல் வாசலையும் கடந்து, நாற்சந்தியையும் கடந்து போயிற்று' என்ற வாக்கியத்துடன் 18-12-55 சுதேச மித்திரன் வாரப் பதிப்பில் தொடங்கிய இந்த நாவல், 'ஐப்பசிக் காற்று ஜில்லென்று வீசியது' என்ற வாக்கியத் துடன் 23-12-56-ல் நிறைவெய்தியது. பொறுமையும் பொறுப்புணர்ச்சியும் இல்லாத வாசகர்கள் இதைப் படிக்கத் தவறினுலும், எல்லா எழுத்தாளர்களும் படித்துப் பயன் பெற வேண்டிய நாவல்.

* *

பாபு மங்கள்வாடிக்குப் புறப்படுகிருன். ஸென்ட்ரலில் யமுனு வழியனுப்புகிருள். 'அவள் இளமை மறைவது

போலிருந்தது. வெண்கலச் சிலைபோல் அவள் அசைவற்று நின்ற மோகத்தைக் காலடியில் மிதிப்பதுபோல்' பாபுவுக்குப் படுகிறது.

'பூமி வானைத் தொட்டது; வானம் பூமியைத் தொட்டது.'

அதற்கும் அப்பால் ஒரு காட்சி என் கண்களுக்குப் படுகிறது.

டிஸம்பர் லீவு வருகிறது. யமுனா, கூடைப் பழங்களுடன் பாபநாசத்திற்கு வருகிறாள். வீட்டு வாசலில் உட்கார்ந்து ஜபம் செய்து கொண்டிருந்த வைத்தி, எதிரே நிற்கும் ஜப தேவதையைக் கண்டு பரவசப்படுகிறார். 'அடியே, உன் நாட்டுப் பெண்' என்று உட்புறம் நோக்கிக் கூவுகிறார். பாபுவின் தாய் ஆலத்தி சுற்றி அவளை உள்ளே அழைத்துப் போகிறாள். சில ஆண்டுகள் சென்று ஒரு மகா கலைஞனாக பாபு திரும்பி வருகிறான். சங்கீதத்தைத் தவிர வேறு சிந்தனையில்லை. வேறு நினைவு எழுந்தபோது, வித்யாரண்யர் பாமதியைப் பார்த்தாற்போல, யமுனாவைப் பார்க்கிறான். அழகு இருந்த இடமா, அது? மூப்படைந்த உடலில், மூப்பிலா ஆன்மாவின் அற்புதச் சுடரொளி மட்டுமே நின்று நிலவுகிறது.

ஆம், 'மோக முள்' முள்ளாகக் குத்தவில்லை; மாறாக, நம்மை அதன்பால் மோகமடையும்படிதான் செய்கிறது.

## நா. பார்த்தசாரதியின்
# குறிஞ்சி மலர்

---

பசுமதி ராமசுவாமி

சிறுகதை அமைப்பிலே, வாழ்க்கையில் அவ்வப்பொழுது நடக்கும் சிறுசிறு சம்பவங்களைக் கருவூலமாக அமைத்து எழுதுகின்றோம். அதில்வரும் கதாபாத்திரங்களுக்கு, ஒரு ஆரம்பமும், முடிவும் இல்லை. எனவே, ஆழ்ந்து, படிக்கவோ, படித்து உணரவோ தேவையான ஆழமும், சுவையும் இருப்பதில்லை. ஆனால் நாவல்கள் படிப்பது தனிப்பட்ட ஒரு இன்பம் மட்டுமல்ல; அறிவுக்கும்விருந்தாக அமைகிறது. ஒரு நல்ல நாவலைப் படிக்கும்பொழுது, வாழ்க்கையோடு ஒட்டிய அந்தச் சம்பவங்களும், இலட்சிய கதாநாயகன், கதாநாயகியின் குணச் சித்தரங்களையும், தேனினும் இனிய தமிழில், அருவிபோன்ற நடையில், எழுதிவிட்டால், ஊண் உறக்கமின்றி; பிரித்த புத்தகத்தை மடக்க மனமின்றி அதில் அமிழ்ந்து விடுகிறோம்.

ஆனால், படைக்கப்படும் எல்லா நாவல்களுமே, பல சிறந்த அம்சங்களின் கோர்வையாக அமைந்துவிடுவதில்லை. அதில் எத்தனை எத்தனையோ குறைபாடுகள்? வேண்டாத வர்ணனைப் பொருத்த மற்ற சம்பவங்கள், கருத்தில்லாத, அர்த்தமற்ற சொற்கள், முரண்பாடான குணச்சித்திரம்,

இப்படி எந்த ஒரு குறையாவது, ஒரு நாவலிலே புகுந்து விட்டால், எழுத்தாளருக்கு மட்டும் அதைப் படிப்பதில் குறை தெரியும் என்று நினைக்க வேண்டாம். அதைவிட வாசகர்கள் அதன் குறைபாடுகளை நன்ருக அறிவார்கள். சொல்வதுண்டு; மெக்காலேயின் புத்தக விமரிசனம் அந்தப் புத்தகத்தைவிட சுவையாக இருக்கிறதென்று, மக்கள் விரும்பிப் படிப்பார்களாம். எனவே, ஒரு நாவலாசிரியரின் பொறுப்பு மகத்தானது. அந்த நாவலுக்குத் தேவையான பலதரப்பட்ட அம்சங்களை அளந்து, அளந்து கையாள வேண்டும்.

மனிதன் இன்று இருக்கிருன் நாளை மறைகிருன். ஆனல் நல்ல இலக்கியங்கள் என்றென்றும் நிலைத்து நிற்பவை. கடந்த, நிகழ்கின்ற, வரப்போகின்ற சமுதாயங்களை இணைக்கும்போது, சீரிய, கொள்கைகளை புகுத்தி, உயரிய கருத்துகளைத் தொகுத்து, அதையும், வெறும் பிரசாரமாக இல்லாமல்-கலையுணர்வுடன் அமைப்பது அவசியமாகிறது. அப்படிப் பார்க்கும்போது, அவ்வப்பொழுது மேலெழுந்தவாரியாக தோன்றி மறையும் நவீனங்கள், காலம் என்ற அலைகடலில், சிறிது தூரம் சென்று அழுந்தி விடுகின்றன.

மேற்சொன்ன இந்தச் சிறந்த அம்சங்களைக் கொண்டு, உருவாக்கப்படும் மாபெரும் நாவல்—அதைக் காவியம் என்றுகூட சொல்லலாம்—ஆழ்கடலில், காலத்தை வென்று ஒளிவீசும் முத்துச் சிப்பியைப்போல் பிரகாசிக்கிறது.

இப்படி முழுமையான பூர்ணமான காவிய வரிசையில் இடம்பெறத் தகுதியான நாவல்தான் 'குறிஞ்சி மலர்' 'கல்கி'ப் பத்திரிகையில் வாரந்தோறும் தொடர் கதையாக வரும்பொழுது பல்லாயிரக் கணக்கான மக்கள் படித்து மகிழ்ந்தார்கள். பிறகு, புத்தக வடிவிலே, அதைப் படிக்கும்பொழுது, அடுத்த சுவையான பகுதியைப் படிக்க, ஒரு வாரம் காத்திருக்கத் தேவையில்லை. ஒரே மூச்சில் படித்து விடலாம் என்று களிக்கும் அளவுக்கு, உயர்ந்து நிற்கிறது.

கதையைச் சுருக்கமாக நினைவு படுத்திக் கொள்வோம்:

பேராசிரியர் அழகிய சிற்றம்பலம், தன்குடும்பத்தை விட்டு, அகாலத்தில் மறைந்து விடுகிறார். அவருடைய எளிய வாழ்க்கை, உயர்ந்த நோக்கம், இலக்கிய அறிவு, அருங் குணம், சிந்தையும், செயலும் ஒன்றாக இருக்கும் பண்பாடு இவை அனைத்தும் கதாநாயகி பூரணிக்குப் பின்னணியாக அமைந்திருக்கிறது. பூரணி, பேராசிரியரின் தலைப்பெண் ணாகப் பிறக்கிறாள். தமிழ்க் காவியத்திலே அவர் கண்ட பெண்களில் ஒருவளாகத் தன் மகள் வாழப்போகிறாள் என்று எண்ணித் தன் மகளுக்குப் பூரணி என்று பெயரிடுகிறார். தந்தையின் புத்தகங்கள், தமிழ் ஆராய்ச்சி நூல்கள், கையில் ஏழரை ரூபாய், இந்தச் செல்வச் செழிப்பில், பூரணி, இரண்டு தம்பிகளையும், ஒரு குழந்தைத் தங்கையும் வளர்த்து, ஆளாக்க வேண்டிய பொறுப்பை ஏற்றுக்கொண்டு, வாழ்க்கையை ஆரம்பிக்கிறாள். சாலை விபத்தொன்றில் சிக்கியதின் மூல மாக, பெருந்தன்மை வாய்ந்த செல்வச் சீமாட்டி மங்க ளேசுவரி அம்மாளின் பேராதரவு கிடைக்கிறது. அந்த அம்மா ளின் உதவியால், மங்கையர் சங்கத்தில் தமிழாசிரியை வேலை கிடைக்கிறது. தந்தையின் இலக்கியங்களை மலிவுப் பதிப்பாக வெளியிடும் நோக்கத்துடன் மீனாட்சி அச்சகத்தின் தொடர்பு ஏற்படுகிறது. அச்சகத்தைச் சார்ந்த அரவிந் தனின் சந்திப்பு, அவள் வாழ்க்கைக்கு மெருகூட்டுகிறது. குற்றமற்ற தமிழ் இலக்கியத்தின் கதாநாயகனின் வீரமும், நேர்மையும், அறிவும் நிறைந்த அரவிந்தன், பூரணிக்காக படைக்கப்பட்ட அரவிந்தன், புத்தக வெளியீட்டின் காரண மாக, அடிக்கடி பூரணியைச் சந்திக்க நேரிடுகிறது. ஒவ் வொரு சந்திப்பிலும், ஒருவருக்கொருவர் அன்பு வளர்வது மட்டும் அல்ல, மதிப்பும், தெய்வீகக் காதலும் வளருகிறது. ஒரு சமயம், குடில் வாழ் மக்கள், இயற்கையின் சீற்றத்தால் கஷ்டப்படும்போது, அதற்குப் பொருள் ஈட்டும் முயற்சியில் மங்களேசுவரி அம்மாளும், அரவிந்தனும், பூரணியை இலக் கியப் பிரசங்கம் செய்யுமாறு தூண்டுகிறார்கள். உணர்ச்சி

வயப்பட்டு, சொற்பொழிவாற்றும்போது மயங்கிவிழுந்து விடுகிருள் பூரணி. அவள் உடல் நலம் பெற, வைத்தியர் ஆலோசனைப்படி, மங்களேசுவரி அம்மாள் பூரணியை கோடை வாசத்திற்கு அனுப்பிவைக்கிருர்கள். பர்மாவிற்குப் போய் பாவத்தையும், பணத்தையும் மூட்டை கட்டிக் கொண்டு வந்த ஒரு 'பெரிய மனிதன்' அரவிந்தன்—பூரணி வாழ்க்கைக்கு வைரியாக அமைகிருன். பொதுத் தேர்தல் வருகிறது. மீனுட்சி அச்சகப் பொறுப்பாளர், மீனுட்சி சுந்தரம், பூரணி அரசியலில் புகுந்து, நேர்மையை நிலை நாட்டவேண்டும் என்று ஆசைப்படுகிருர். மங்களேசுவரி அம்மாள், அரவிந்தன் இருவரும் சிந்தித்து, பூரணியைச் சம்மதிக்க வைக்கிருர்கள். ஏற்பாடுகள் மும்முரமாக நடக் கின்றன. பூரணிக்குப் போட்டியாக நிற்கும் பர்மாக்கார ரால் பல துன்பங்களுக்கு ஆளாக நேரிடுகிறது. இலங்கை மக்களால் வெகுவாக அழைக்கப்பட்டு, பூரணி மங்களேசுவரி அம்மாள் துணையுடன் செல்கிருள். அங்கு, அநேக இலக்கிய பிரசங்கங்கள் நடத்திப் புகழ் மாலையுடன் திரும்புகிருள். ஆடம்பரமற்ற முறையில் பூரணியின் தேர்தல் வேலைகள் நடைபெறுகின்றன. உண்மைக்கும், உயர்வுக்கும் இந்தத் தேர்தலில் இடம் வேண்டும் என்று அரவிந்தனும் அவன் நண்பன் முருகானந்தமும் பாடுபடுகிருர்கள். வங்க நாட்டி லிருந்து, இலக்கிய பிரசங்களுக்காகப் பூரணிக்கு அழைப்பு வருகிறது. கலைக்கிருப்பிடமான வங்க நாட்டின் பல பகுதி களில் பூரணியின் சொல்லமுதம் பெருகி ஓடுகிறது. வெற்றி வாகை சூடி மதுரைக்குத் திரும்புகிருள் பூரணி. மதுரைக்கு அருகிலுள்ள கிராமத்தில் விஷக் காய்ச்சலில் அல்லற்படும் மக்களுக்குப் பணிபுரிய அரவிந்தன் சென்றிருக்கிருன். இரண்டு நாட்களுக்குப் பின் திரும்பி வரும்போது அந்த விஷக்காய்ச்சலுடனேயே திரும்பி வரு கிருன் அரவிந்தன். அன்று காலை அரவிந்தனுக்குக் காய்ச்சல் குறைகிறது. ஆம் தீபம் அணையும்போது ஒளிவிட்டுத்தானே தணியும்? அன்று, பூரணி நின்ற தொகுதியில், வோட்டுகளை எண்ணி, முடிவு சொல்லவேண்டிய நாள். வீட்டில் உள்ள

அனைவரும் அங்கு சென்றிருக்கிறார்கள். பூரணி மட்டும் அரவிந்தன் அருகில் இருக்கிறாள். திடீரென்று அரவிந்தனுக்குக் காய்ச்சல் அதிகமாகி ஜன்னி கண்டு விடுகிறது. மங்களேசுவரி அம்மாள், 'பூரணி, நீ வெற்றி பெற்று விட்டாய்' என்று முழக்கிக் கொண்டு வருகிறாள். பூரணியைப் பாராட்ட, மாலையுடன் ஒரு பெரிய ஊர்வலம் வருகிறது. அரவிந்தன் அறையிலிருந்து, பூரணியின் உள்ளத்தைப் பிளக்கும் அலறல் எதிரொலிக்கிறது. கூட்டம் மௌனமாக ஆகி விடுகிறது. அரவிந்தன் தெய்வமாக ஆகிவிடுகிறான்.

கலிப்பகையை, மனதில் கணவனாக வரித்து, போரில் மாண்ட அந்த வீரனின் வீர மனைவியாகத் துறவு பூண்ட திலக வதியைப் பின்பற்றுகிறாள் பூரணி.

இதுதான் கதையின் சுருக்கம்.

இனி நாவலின் தனி அங்கங்களைப் பார்ப்போம்.

கதை அமைப்பை நோக்கும்போது, பழைமையான உரத்திலே மலர்ந்த மணமுள்ள மலராகத்தான் அமைந்திருக்கிறது. நம் சங்க இலக்கியங்களிலும், தமிழ் காவியங்களிலும் இருக்கும் உயர்பண்புகளை அடிப்படையாகக் கொண்டது கதையமைப்பு. இது தமிழ் மொழியில், தனக்கென்று ஏற்பட்ட ஒரு தனிச் சிறப்பு. ஏறக்குறைய ஆசிரியர், திலகவதியின் தெய்வீக வாழ்க்கையைக் கருவூலமாகக் கொண்டு, காலத்திற்கு ஏற்ப மாற்றம் கொடுத்து எழுதியிருக்கிறார். கதாநாயகன், நாயகி குணங்களில் குறைபாடுகளுடன்கூட சுவையுள்ள நாவல் எழுதிவிடலாம். அது இயற்கையாகக்கூட இருக்கும். ஆனால் கதாநாயகன், நாயகியின் உயர்ந்த இலட்சியம், சிறந்த குறிக்கோள், எந்தத் துன்பத்திலும், தாழ்ந்து போகாத நேர்மையில் வழுவாத தீரம், இவைகளை ஆசிரியர் மிக மிகக் கவனத்துடன் கையாண்டிருக்கிறார். அவர்களுடைய அன்றாட வாழ்க்கையின் தூய்மை, அவர்கள் அறிவிலே முதிர்ச்சி, பேச்சிலே பண்பு, பொதுத் தொண்டிலே நேர்மை, தமிழ் இலக்கியத்

திலே ரசனை எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்ததுபோல், அவர்கள் உள்ளத்தால் மட்டும் ஒன்றுபட்ட காதல், அத்துடன் கதாநாயகன், அமரத்வம் அடைந்ததுவரை ஆசிரியர் வெகு அழகாக, மென்மையாகக் கையாண்டிருக்கிறார். இதில் ஆசிரியருக்குக் கிடைத்தது மாபெரும் வெற்றி. நமக்குக் கிடைத்தது பெரும் பயன்.

அடுத்தபடியாக, கதைக்கு நிலைக்களன்கள், சங்கம் வளர்த்த, தமிழ் வளர்த்த, மாமதுரை, தெய்வமணம் கமழும் திருப்பரங்குன்றம், இயற்கையன்னை கொலு வீற்றிருக்கும் கொடைக்கானல், தமிழ் நாட்டிலிருந்து நீண்ட தொலைவு சென்று, வாழ்ந்து, தமிழுக்காக உயிரைக் கொடுக்கும் இலங்கை, கலைகளுக்கிருப்பிடமான கல்கத்தா நகரம் ஆகிய இடங்களும் இந்த நாவலுக்குத் துணை நிலைக்களன்களாக அமைகின்றன. வர்ணனைக்கோர் சட்டதிட்டம் உண்டு. ஆசிரியர் இந்த இடங்களைப் பற்றி வெகு அழகாக, சுவையாக அலுப்புத் தட்டாமல் சித்தரிக்கிறார்.

கதாபாத்திரங்களைப் பார்க்கும்போது ஆசிரியருக்கு அமோகமான வெற்றி என்றுதான் சொல்லவேண்டும். தமிழ் நாட்டில் சீலவதிகளாக வாழ்ந்த ஔவையாரின் கல்வியறிவும், மணிமேகலையின் ஞானமும், சோதிப் பிழம்பான கண்ணகியின் வீரமும், பக்தி வடிவாக வாழ்ந்த காரைக்கால் அம்மையாரின் பக்தியும், கன்னிகையாக வாழ்ந்து, உலக இன்பத்தைத் துறந்த திலகவதியின் தியாகமும், பூரணமாகச் சேர்ந்து உருப்பெற்ற கதாபாத்திரம்தான் பூரணி; மிக மிக பொருத்தமான பெயர். நேர்மை, வாய்மை, தூய்மை, இந்த வார்த்தைகளுக்குப் பொருளாக விளங்குகிறான் அரவிந்தன். பூரணியின் அருங்குணத்திற்கும், வறுமையிலும் செம்மையாக வாழ்ந்த அவளுடைய உயர்ந்த நோக்கத்திற்கும் முன் ஆதாரமாக நினைவில் மட்டும் தோன்றும்படி சித்தரிக்கப்பட்டுள்ள அழகிய சிற்றம்பலம்; பூரணியின் குணச்சித்திரத்திற்கு மெருகூட்டுவதுபோல், கதையில் வரும் பெருந்தன்மை வாய்ந்த மங்களேசுவரி அம்மாள். நியாய புத்தி

யும், நிலையில்லாத, ஆனால் கபடமற்ற மனமும் கொண்ட முருகானந்தம், வளமான இளமையோடு, 'துருதுரு'வென்று சுற்றிவரும் வசந்தா, இப்படி எத்தனையோ இரத்தினங்களைத் தேர்ந்த பொற்கொல்லர் சேர்த்தமைப்பது போல், கதா பாத்திரங்களை அமைத்திருக்கிறார் ஆசிரியர்.

ஒரு இலக்கிய படைப்பைப் படைக்கும்பொழுது, ஒரு ஆழ்ந்த கருத்தைத் தேடுகிறது வாசகர்கள் மனம். கதையிலே ஒரு கருத்து, ஒரு நிறை இல்லாவிட்டால், நாவலாயிருந்தாலும், நாடகமாயிருந்தாலும் ஏன் சிறுகதையாக இருந்தாலும்கூட, வெறும் சொற்கள் நிறைந்த ஒரு அச்சுக் கோர்வையாகத்தான் இருக்கும். இந்த நாவலிலே, 'மனிதப் பண்பு காப்பாற்றப் படவேண்டும்; பொருளை நிறைப்பதற்காக, அக்கிரமத்தையும், அநீதியையும் செய்யக் கூடாது. அப்படி செய்பவன் மனிதனாக இல்லாமல் மிருகமாக இருக்கிறான்' என்பதை அழகிய சிற்றம்பலம் ஆரம்பத்திலேயே சொல்கிறார். ஆழ்ந்த கருத்துக்களைச் சொல்லவேண்டும் என்று, சில நாவல்களில், இரண்டு மூன்று அத்தியாயங்கள் பெரிய பிரசங்கமாக எழுதிவிடுவார்கள். அது ஆசிரியருக்கு வெற்றியை அளிக்காதது மட்டுமல்ல, தோல்வியையும் அளிக்கும். 'குறிஞ்சி மலர்' ஆசிரியர் ஒவ்வொரு கதாபாத்திரத்தின் வாயிலாகவும், அந்தந்த இடத்திற்கு ஏற்றபடி அழகிய கருத்துக்களை வெளியிடுகிறார். நாவலில் ஆங்காங்கு, கருத்தாழமுள்ள வசனங்கள் நிரம்ப உள்ளன.

'முள்ளோடு பிறக்கிற செடிக்கு, அந்த முள்ளே பாதுகாப்பு மாதிரி, இப்போது எனக்கிருக்கின்ற பாதுகாப்பு என் கவலைகள் மட்டும்தான்!' என்கிறாள் பூரணி. கருத்து நம் சிந்தனையைத் தூண்டுகிறது. துன்பத்திலே பிறந்து, துன்பத்திலே வளர்கின்ற மக்களுக்கு, அந்தத் துன்பங்களே துணையாக நிற்கின்றன. மலை போன்ற சுமையை மனதிலே தாங்க உறுதி பிறக்க, அந்த உறுதி சிந்தனையைத் தூண்டுகிறது; வாழ்க்கை எளிதாகிறது. அரிய கருத்து.

நாவல் ஆரம்பத்தில், கதையின் வளர்ச்சிக்கேற்ற கருத்தும், நாவல் நடுப்பகுதியில், அந்த அளவுக்கு வளர்ச்சியான கருத்தும், முடிவில் முழுமை பெற்ற கருத்தும் கோர்வையாக அமைந்திருப்பதை, வெகுவாகப் பாராட்ட வேண்டும்.

''மனிதர்களின் சிறுமைகளையும், தொல்லைகளையும் பார்த்துப் பார்த்து உன் ஞானக் கண் மலரப் போகின்றது'' என்கிறான் அரவிந்தன். ஆம்; முதலில் தன் வாழ்க்கைத் துன்பங்களையே ஊன்றுகோலாகக் கொண்டு, தன் வாழ்க்கைக்கு விடிவு காணும் பூரணி, பிறகு, பிறருடைய வாழ்க்கையில், மனிதப் பொது வாழ்வில் தோன்றும் இடர்களைக் கொண்டே சிந்தனையைச் செயல்படுத்தி சமூகத்திற்கே விடிவு காண விழைகிறாள்.

சம்பவங்களைப் பற்றி நினைக்கும்போது, கதையில் தேக்கமும் இல்லை; தொடர முடியாத அளவுக்கு வேகமும் இல்லை. கால அமைப்பும் சரிவர அமைந்துள்ளது.

அடுத்தபடி, தமிழ் நடையைப் பற்றிச் சொல்லும்போது, இந்த நாவலில் தமிழ்த்தாய், தன் பூரண அழகுடன் நிறைந்து விளையாடுவதைப் பார்க்கிறோம். ஆசிரியர் ஒவ்வொரு அத்தியாயத்தின் ஆரம்பத்தில், ஒரு பாடலை, தம்மால் எழுதப் பெற்றவையும், பிறரால் எழுதப்பட்டவையும் எடுத்துக் கையாள்கிறார். இந்தப் பாடல்கள், கதைக்குப் பொருத்தமாக அமைவதோடு, வாசகர்களுக்கு இலக்கிய உணர்வையும் ஊட்டுகிறது. அதிலே உயிர்நாடியாக,

**'பொன் காட்டும் நிறம் காட்டிப்**
**பூக்காட்டும் விழி காட்டிப்**
**பண்காட்டும் மொழி காட்டிப்**
**பையவே நடை காட்டி**
**மின்காட்டும் இடை காட்டி**
**முகில்காட்டும் குழல் காட்டி**

**நன்பாட்டுப் பொருள் நயம்போல்**
**நகைக்கின்றாய்; நகைக்கின்றாய்**
**பண்பாட்டுப் பெருமையெல்லாம்**
**பயன்காட்டி நகைக்கின்றாய்'**

என்ற அரவிந்தனின் இந்த எளிய பாடல் பூரணியைப் பூரண மாகச் சித்தரிப்பதுடன், காதலர்களின் ஒரே மொழியாகத் தோன்றுகிறது.

விசேஷ அம்சம் என்று நோக்கும்போது, பூரணியின் புனித நினைவில், அவள் கை விளக்கோடு உயர, உயரச் சென்று கொண்டிருப்பதையும், அவளைச் சுற்றி அநுதாபத் துக்குரிய மக்கள் கூட்டம் இருப்பதையும் அவளே அரவிந்த னிடம் சொல்கிறாள். அதைக் கேட்கின்ற அரவிந்தன், 'இதெல்லாம் உன் கற்பனை' என்று எள்ளி நகையாடவில்லை. அவள் உயர்வை உணர்ந்து, ''மற்ற ரோஜா மல்லிகை போன்ற தினமும் மலர்ந்து மறையும் மலர் அல்ல பூரணி; எட்டாத மலையில் மலரும் குறிஞ்சி மலர் அவள்'' என்று நினைத்து குறிப்பிலே பதிக்கும்போது, நம் உள்ளம் உருகு கிறது.

முடிவு எதிர்பாராதது. கதாநாயகி பூரணியின் தூய வாழ்க்கை, அரவிந்தனோடு உள்ளத்தால் மட்டும் ஒன்று பட்டு, வாழ்ந்து, நிறைவு பெறுமாறு, அரவிந்தனை இயற்கை எய்தச் செய்கிறார் ஆசிரியர். மனித இயல்புக் கேற்ப, அந்தப் பகுதியை எழுதும்போது, ஆசிரியரும் கண் ணீர் சிந்தியிருப்பார். நாமும் கண்ணீருடன் முடிக் கிறோம்.

குறிஞ்சி மலர் பன்னிரண்டு ஆண்டுகளுக்கொரு முறை தானே மலருகிறது?

வாடியும், மணம் பரப்பும் மகிழ மலரைப் போன்ற சிற்றம்பலம். எட்டாத மலையிலே, மலர்ந்து நிற்கும்

குறிஞ்சி மலரைப் போன்ற பூரணி, மணம் பரப்பி எளிதில் வாடிவிடும் சண்பக மலரைப் போன்ற அரவிந்தன்—இவர் களனைவரும் மறுபடியும் மறுபடியும் நம்மிடையே தோன்று வார்கள். தோன்றத்தான் வேண்டும். ஆனல் குறிஞ்சி மலர் போன்ற நாவல் அடிக்கடி தோன்ருததுதான். சில ஆண்டுகளுக்கு ஒருமுறை தோன்றினலும், அது இலக்கியத் திற்கு கிடைத்த மாபெரும் பேறு என்றுதான் சொல்ல வேண்டும்.

ஹெப்ஸிபா ஜேசுதாசனின்

# புத்தம் வீடு

---

சி. சு. செல்லப்பா

இன்று தமிழ் இலக்கியத்தில் சிறுகதை போல் இல்லாமல் நாவல் வளர்ந்து வருகிறது என்பது உண்மையே. வளர்கிறது என்கிறபோது தொகையளவில் மட்டும் இல்லை, தரத்திலும் கூடத்தான். இந்த நிலையில் நாவல்களை தரம் பிரிக்கிறபோது தலைசிறந்த நாவல், சிறந்த நாவல், நல்ல நாவல், சுமாரான நாவல் என்று ரகம் பிரிக்கத்தோன்றுகிறது எனக்கு. இந்த பாகுபாட்டின்படி பார்த்தால் தமிழில் சுமாரான நாவல்கள் என்று சொல்ல ஏதாவது கிடைத்தாலே பெரிய பாக்கியம் என்றே நான் கருதுகிறேன். மேலே சொன்ன தரப்பாகுபாடு பற்றி உதாரணம் காட்டிச் சொல்லப்போனுல், இதுவரை தமிழில் வெளி வந்துள்ள நாவல்களில் தலைசிறந்தது 'மோகமுள்'. சிறந்தவைகளில் 'போய்த்தேவு' நல்ல நாவல்களில் 'நாகம்மாள்' 'இதய நாதம்' என்று ஒன்றிரண்டு உதாரணம் காட்டுவேன். சுமாரான நாவல்கள் என்று வருகிறபோதுகூட எனக்கு அதிக சங்கடம் இல்லை.

எனக்கு திருப்தி தருகிற சுமாரான நாவல்களே மிகக் குறைவு. உதாரணத்துக்கு மற்ற சிலதை சொல்வதைவிட

எனக்கு விமர்சிக்கக் கொடுக்கப்பட்டிருக்கும் 'புத்தம் வீடு' நாவல் ஒரு சுமாரான நாவல் என்று சொல்வேன். என் 'சுமார்' என்பதுக்கு அளவுகோல் என்ன என்று கேட்டால், ஓஹோ என்று சொல்லும்படியான தனித் தன்மையான முயற்சிகள் விஷய, உருவ, உத்தி வகைகளில் கையாளப் படாவிட்டாலும் அதாவது அதிகபட்ச சாதனை இல்லாவிட்டாலும், 'எலிமெண்டரி' என்கிறோமே 'அரிச்சுவடி நியதிகள்' அஸ்திவார விதிகளையாவது கவனித்து, அதாவது குறைகள் நீங்கியாவது அல்லது குறைந்த பட்ச குறைகளுடன் இருக்கிற நாவலை சுமார் என்பேன். பாஸ் மார்க் நாவல் என்று வைத்துக் கொள்ளுங்களேன். முப்பத்தைந்து சதவிகித மார்க் பாஸ்.

ஸ்ரீமதி ஹெப்ஸிபா ஜேசுதாஸன் நாவல் 'புத்தம் வீடு' அவரது முதல் நாவல்; இதுவரை எழுதி இருக்கும் ஒரே நாவல். இந்த பதினைந்து நாவல்கள் விமர்சனக் கூட்டங்களில் கவனிக்கப்பட்ட நாவலாசிரியர்களில் ஒரே நாவல் எழுதியிருப்பவர் இவர்தான். எனவே ஆசிரியரின் முதல் நாவல் என்பதை மனதில் கொண்டே நான் இந்த நாவலைப் பார்க்கிறேன். விமர்சகனுக்கு அநுதாபம் இருக்க வேண்டும் என்று நேற்றுக் கூட்டத்தில் சொல்லப்பட்டது. அனுதாபம் என்றால், முன்கூட்டிய வெறுப்பும், அலட்சியமும் காட்டாமல் பார்ப்பது என்றுதான் அர்த்தமே தவிர, எதையும் தட்டிக் கொடுப்பது என்று அர்த்தம் இல்லை. நடை போட்டுச் செல்லும் சொரணையுள்ள வண்டிமாட்டின்மீது விரலை வைத்தால் அது எகிறிப்பாயும். சொரணைகெட்ட மாட்டை தட்டிக் கொடுத்தால் அது கொஞ்சுவதுக்கு நின்று விடும். அதேபோலத்தான் அனுதாபம் காட்டுவதும். அனுதாபம் பெற இடம் இருந்தால் கொடுத்தே ஆகவேண்டும். இந்த நாவலுக்கு என் அனுதாபத்தை கொடுத்தே பார்க்கிறேன். ஏன் என்றால் அதுக்கு இது இடம் தருகிறது.

இந்த நாவல் நமக்கு முன் காட்டுகிற தென்ன, போடுகிற கேள்வி என்ன என்பதே கேள்வி. ஜாதி, அந்தஸ்து

இரண்டும் விளையாடும் விளையாட்டு எப்படி இருக்கும், எதில் முடியும், எந்த விதமாக முடியும் என்பதை ஒரு கோணத்திலிருந்து பார்க்கப்பட்டிருக்கிறது. இந்த விஷயம் தமிழ் நாவலுக்கு அப்படி ஒன்றும் புதுசு இல்லை. சிறு கதைகளிலும் சில நாவல்களிலும் கையாளப்பட்டிருப்பது தான். எனவே புதுசான ஒரு கதையாகப் படவில்லை எனக்கு. ஆனால் அந்தஸ்தும் வறட்டு கவுரவமும் ஒரு சோக நிகழ்ச்சியாக துன்ப முடிவுக்கு இட்டுச் செல்லாமல், ரோமியோ—ஜூலியட் லைலா—மஜ்னூன் வாழ்வு போல் ஆகாமல் லிஸி—தங்கராஜ் உறவு ஒரு இன்பமான முடிவுக்கு உதவி இருக்கிறது.

அப்பட்டமாகச் சொல்லப்போனால் இது ஒரு காதல் கதைதான். லிஸி—தங்கராஜ் ஆசை நிறைவேற்றம் பற்றிய உத்தேசம்தான் ஆசிரியரின் முதன்மையான, ஏன், ஒரே நோக்கம் என்று சொல்லலாம். எனவே காதல்வழி கரடு முரடாகத்தானே இருக்கும். இருந்தாக வேண்டும் என்ற சம்பிரதாயமும் இருக்கிறதே. எனவே அதுக்குக் குறுக்கே வருகிறவர்கள், ஏற்படும் நிகழ்ச்சிகள், குரோதம், பொறாமை, இதெல்லாம் வந்தாக வேண்டும் இல்லையா? 'புத்தம் வீடு' பழம் பெருமை கொண்ட லிஸியின் தாத்தா கண்ணப்பச்சி, அவள் குடிகார தகப்பன், மூர்க்கனான சிற்றப்பா, குரோதம் காட்டும் சிற்றப்பா பெண் லில்லி, கபடமாக நடந்து கொள்ளும் அவள் கணவர் வைத்தியர் போன்றவர்கள் சிக்கல்களை ஏற்படுத்தி, அதிகப்படுத்தி விபரீதத்துக்கு கொண்டு விட்டு விடுகிறார்கள். பெரியவள் லிஸிக்கு மணம் ஆகாமல் சிற்றப்பா பெண் சிறியவள் லில்லி கல்யாணம், அந்தஸ்து குறைவான தங்கராஜ்லிஸியைமணக்க கேட்டல், இரண்டாலும் தந்தை ஆத்திரம், சிற்றப்பா கொலை, தங்கராஜ்மீது கொலைப்பழி, ஆனால் கொலை செய்தது குடிகாரத் தகப்பன், தந்தையின் தற்கொலை, உபதேசியாரின் ஆதரவான செயல், உண்மை வெளிவருதல், தங்கராஜ்—லிஸி திருமணம், ஓய்ந்த மனம் கொண்ட கிழட்டுக்

கண்ணப்பச்சியின் வேறு வழியில்லாத சம்மதத்தோடு—இப் படியாகக் கதை முடிகிறது.

நாவலின் கதையம்சம் உங்களுக்கு தெரிந்திருக்கும் இதி லிருந்து. இந்தக் கதை ஏதாவது புதுசாகத் தொனிக்கிறதா? நம் சினிமாக்கதை போல இருக்கிறது என்று நான் சொல்லத் துணிவேன். மோகமுள் மாதிரி பால் உணர்வு கலையாசை சம்பந்தமான ஒரு அடிப்படை மனோதத்துவப்போராட்டம், 'பொய்த்தேவு' மாதிரி நிஜத்துக்கும் பொய்க்கும் வித்தி யாசம் காண இயலாத ஒரு வாழ்க்கை யாத்திரைஅனுபவம். 'இதய நாதம்' மாதிரி குரலால் செய்த உபாசனையை இழந்து இதயத்தால் பகவானை உபாசனை செய்யும் நிலைக்கும் வடு ஏற்பட்டத்திலே நிம்மதி பெறுமுன் நடுவே பட்ட வேதனை. 'நாகம்மாள்' மாதிரி அப்பாவியாக இருந்து ஊர் அவருக்குக் கொடுத்த தொல்லையில் ஊரையே எதிர்க்கத் துணிந்த ஒருமனதின் போராட்டம் போல ஒரு 'விசேஷ' கதையம்சம் கொண்ட நாவல் இல்லை இது. அவை மாதிரி இருந்திருந்தால் ஒரு பெருமுயற்சி என்று நினைத்திருப்பேன்.

ஆக, ஒரு சாதாரணக் கதையம்சம் கொண்டது இந்த நாவல். ஆனால் அதுக்காக நான் அதை ஒதுக்க, புறக்கணிக்க முற்படவில்லை. அவரது நோக்கத்தை, உத்தேசத்தை, கதைக்கருவை அவரவருக்கே விட்டுவிட வேண்டியதுதான் விமர்சகன் தர்மம். படைப்பாளி கொடுப்பதை ஏற்க மறுத்து விமர்சகன் எதிர்பார்ப்பதை விரும்புவது சரியான காரியம் இல்லை. எனவே, நாவலுக்கான விஷயத்தை அங்கீ கரித்து, அதன் உள்ளடக்கத்துக்கு கைத்திறன் பயன்பட்டி ருப்பதையும் காணும் கலைத்திறனையும் நிதானிப்பதுமே விமர் சகன் வேலையாகும்.

பழகின கைகள் செய்கிற காரியத்தை புதுக்கைகளில் எதிர்பார்க்க முடியாது. ஆனால் ஹெப்ஸிபா ஜேசுதாஸன் கை சரியாக எழுத ஆரம்பித்திருக்கிறது. பனைவிளை கிராம மும் புத்தம் வீடும் நமக்கு அறிமுகப் படுத்தப்படுவது முதல்

பாத்திரங்களும் ஒருவர் பின் ஒருவராகச் சேர்ந்து வருகிற போக்கில் ஒரு இடத்து, ஒரு மத, ஒரு ஜாதி, ஒரு பழக்க வழக்கச் சித்திரம் உருவாகத்தான்செய்கிறது. இனம் காண முடிகிற அளவுக்குக் கற்பனையில் உருப்பெருகிறது. பிரதேச நாவல் என்றால் ஏதோ அந்தப் பிரதேசத்துக் கொச்சையை அள்ளிக் கொட்டி விட்டால் போதும் என்று தப்பாக கணித்துக்கொண்டிருப்பவர்கள் நமது எழுத்தாளர்கள் பலரும். அதோடு ஒரு இடத்தை பூகோள ரீதியாக வர்ணித்து விட்டால் போதும் என்றும் நினைக்கிறார்கள். இது இல்லை; பிரதேச நாவல் என்பது ஒரு இடத்து மண்ணுக்கு உரிய தனி வித சுபாவம், காற்றாக எங்கும் பரவி இருக்கவேண்டும். அது தான் பிரதேசநாவலுக்கு மூச்சு. அமெரிக்க நாவலாசிரியர் வில்லியம் பாக்ஸரின் நாவல்கள் தலை சிறந்த உதாரணம். என் நாவல் 'வாடி வாசல்' மதுரை ராமனாதபுரம் மாவட்டங்களில் அவைகளிலும் குறிப்பிட்ட பிரதேசங்களில்தான் நடக்கும்.

நாகம்மாள் 'நாவலுக்குப் பிறகு 'புத்தம் வீடு'தான் ஒரு புதிய பிரதேசத்தை இனம் காணச் செய்யும் நாவல் என்று நான் நினைக்கிறேன். கொச்சைக்காக மட்டும் இல்லை', சுபாவத்துக்காக. பனையேறிகளின் வாழ்வு இங்கே படமாகிறது. இந்த ஜாதியாரின், இந்தத் தொழிலில் ஈடுபட்டவர்களைப் பற்றிய முதல் நாவல் இதுதான். கிருஸ்தவக் குடும்பம் இங்கே பேசுகிறது. கிருஸ்தவ சமூக நாவல் நான் தமிழில் படிப்பதும் இதுதான் முதல் தட்வை. அன்று நாகம்மாள் கொங்கு நாட்டைக் காட்டியது. பி. எஸ். ராமையா தன் சிறு கதைகளால் மதுரை பிராந்தியத்தையும், புதுமைப்பித்தன் திருநெல்வேலி பிரதேசத்தையும் கோணம் காட்டினார்கள். இப்போது திருநெல்வேலிக்கும் தெற்கே கேரளத்தை ஒட்டிய தமிழ்ப் பகுதியில் உள்ள கன்யாகுமாரி பிரதேசம் இதில் கோடி காட்டப்படுகிறது.

நான் திருநெல்வேலி ஜில்லாவையும் குமரிப் பிரதேசத்தையும் கொஞ்சம் அநுபவித்தவன். தாம்ர பரணி அங்கு

ஓடினாலும் பனைமரம்தான் எங்கள் முன் நிற்கும். நாவலில் வரும் பனைவிளைபோல் பல கிராமங்களை, கிராம வாசிகளின் பேச்சை நிறையக் கேட்டிருக்கிறேன். திருநெல்வேலிப் பேச்சுக்கும் பனைவிளைக் கிராமத்தாரின் பேச்சுக்கும் அதிக வித்தியாசம் இல்லை. நான் இந்த நாவலை படிக்கிறபோது ஒரு சில சொற்கள், தவிர மற்றப்படி எனக்குப் புரிந்தது. உதாரணத்துக்கு, அனந்த ரத்தி, அடிச்சக் கூடு, பாட்டாக் காரர், அக்காணி, டீக்கனார், புரோகதி, இற்செறிப்பு, புளாயிடம் போன்றவை. ஆனால் சந்தர்ப்பத்தில் இவைகளைப் பொருள் அறிந்து கொள்ள முடிகிறது. ஒரு நாவலில் வரும் பிரதேசச்சொற்களை இப்படித்தான் வாங்கிக்கொள்ள வேண்டும். இந்த நாவலில் பிரதேச மணம் எழுகிறது. ஆனால் மென்மையாக வீசுகிறது. அழுத்தம் இன்னும் விழுந்திருக்கலாம். முதல் நாவல் இல்லையா? கோடி காட்டி இருப்பது வளரும் கைக்கு அறிகுறி.

இந்த நாவலின் ஆரம்பப் பாராவே எனக்குத் திருப்தி தருகிறது. அதேபோல் பல இடங்கள் இருக்கின்றன. ஆனால் வர்ணனையும் நடையும் நாவல் நெடுக இதேபோல போயிருந்தால் அதிகக் கனம் நாவலில் ஏறி இருக்கும். போஷாக்கும் சேர்ந்திருக்கும்.

இந்த நாவல் புறம்போக்கான கதை சொல்லல் வழி பின்பற்றியது. மூன்றும் மனிதப் பார்வை நாவல். ஆசிரியை கதையைத் தடம் பிசகாமலும் அவசியமான தகவல்களை மட்டும் தேர்ந்தெடுத்தும் சொல்லிச் செல்கிறார். சொல் செட்டு, வளர்த்தாத, நீர்க்காத சம்பாஷணை, இதெல்லாம் இருக்கிறது. கதாபாத்திரங்கள் வர்ணனை எல்லாம் கச்சிதமாகத்தான். பாத்திரங்கள் யாரும் அப்படி ஒன்றும் தீர்க்கமான, திடமான, அழுத்தமான பாத்திரங்கள் இல்லை. குறித்து முதன்மையாக இவர்தான் அடுத்தபடி இவன் என்றெல்லாம் சுட்டிச் சொல்லத்தக்க குறித்த தனிப்பாத்திரம் யாரும் இல்லை. ஏதோ குடும்பப் பெருமை மட்டும் பேசும்; இன்றுசீர்குலைந்து கிடக்கிற ஒருகுடும்பத்தின்

ஐம்பத்துக்குக் குறியீடுகளாக நிற்பவர்கள்தான் காணப் படுகிருர்கள். சீராக இருந்த நிலமை அநுபவித்துச் சீர் கெடும் நாட்கஇாயும் பார்த்து வரும் கண்ணப்பச்சிகூட முன் வந்து நிற்கவில்லை. எல்லோருமே லிஸி-தங்கராஜ் பிரச்னைக்கு உதவுகிற அளவுக்குத்தான் வந்து போகி ருர்கள்.

லிஸி, தங்கராஜ் இருவருமே இன்னும் உருவாகாத, சிறு வயது வளர்பருவத்தினர் போலத்தானேஇருக்கிருர்கள். தங்களைச் சுற்றியுள்ள தங்களவர்கள் ஆட்டுகிறபடி எல்லாம் தானே நடந்து கொள்கிருர்கள். தங்கள் காரியத்தை சாதிக்கத் தக்க வழி வகை தெரியாமல், தீர்மானிக்க முடி யாமல் தவிக்கிருர்கள். ஏதோ ஏசுநாதர் அருள் இருந்து அவர்களை சேர்த்து வைக்கிற மாதிரிதான் (உபதேசியார் தானே துப்பு துலக்கி தங்கராஜ் விடுதலைக்கு வழி செய்கிருர்) அவர்கள் பிரச்னை தீர்கிறது. இந்த நாவலில் லிஸி-தங்க ராஜ் பிரச்னைதான் முக்கியமே தவிர, லிஸியோ தங்க ராஜோ, வேறு யாரோ முக்கியம் இல்லை. ஒரு குறிப் பிட்ட கட்டத்தில் நிறுத்தப்பட்ட இரண்டு அந்தஸ்து வித்யாசக் குடும்பத்தவர்கள் சில சிறு மனப்பிராந்திகளைக் கொண்டு, நினைத்து, காரியம் செய்து சிக்கல்களை விளை வித்துக் கொள்கிருர்கள். அவதிப்படுகிருர்கள். அவர்களில் லிஸிக்குத்தான் பிரச்னை கொஞ்சம் கடுமையாக உள்ளது. உள்ளூரத் திடம் இருந்தாலும் வெளியே நடந்து கொள்கை யில் அதைத் தக்க சமயத்தில் காட்டச் சக்தியற்றவளாகவே இருக்கிருள். தங்கராஜோ தான் செய்கிற காரியம் என்ன என்பதை அவன் உணர்ந்தவன்தான். ஆனுல் ஆசையை சக்திக்கு மீறிக் கொண்டு விட்டவன். முன்னும் போக முடி யாமல் பின்னும் போக முடியாமல் இக்கட்டான நிலைமை யில் குழம்புகிருன். அவனுகப்பிரச்னைக்குத்தீர்வு காணவில்லை. அவன் சக்திக்கு மீறி அவன் ஆசைப்பட்டதுபோல் அவன் சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியால்தான், பிறரது சக்தி யால்தான் அவன் பிரச்னை தீர்கிறது.

மொத்தமாக, இந்த நாவல் ஒரு முழுமை பெற்றி ருப்பது படுகிறது; ஒருவிதத் திருப்தியும் தருகிறது. ஆனால் ஒரே ஜாதி ஆனாலும் பனையேறித் தொழில் குடும்ப அந்தஸ்து மாறுபாடு சம்பந்தமான ஒரு பிரச்னையை ஆரம்ப முதல் மென்மையாக, நாசூக்காகக் கையாண்டு மெது வாக லாகவமாக கதை வளர்த்து வந்த படைப்பாளி கடைசி அத்யாயத்துக்கு முந்தின அத்யாயத்திலே, அதாவது அண் ணன் மகள் மூத்த லிஸிக்கு மணமாகுமுன் தம்பி மகள் சின் னவள் லில்லிக்கு மணம் ஆகவும் வந்த அடுத்த அத்யாயத் திலேயே இதுவரை உளப்போக்கு ரீதியாக கதை ஜோடித்து வந்ததை கைவிட்டு விட்டு, ஒரு கொலை, கைது, விசாரணை, தற்கொலை, விடுதலை ஆகிய நிகழ்ச்சிகளை ராக்கெட் வேகத் தில் மளமளவென அடுக்கி, லிஸி-தங்கராஜ் மணத்தை முடித்துப் பார்க்க ஏன் இந்த அவசரம்? அதோடு அவர்கள் பிரச்னை தீர, தன் பெண்ணுக்கு முன் தம்பி பெண்ணுக்கு மணம் நடந்த ஆத்திரம், பனையேறித் தொழில் செய்யும் தங்கராஜ் தன் பெண்ணை கட்டிக்க கேட்ட கோபம் இரண் டும் சேர தங்கராஜ் அரிவாளாலேயே தன் தம்பியைக் கொன்று, தங்கராஜ்தான் கொலை செய்தவன் என்று பழி சுமத்தி விசாரணை நடக்கச் செய்து, பின் தன் குற்றம் தன்னை அறுக்க அண்ணன் தற்கொலை செய்து கொண்டது இதெல் லாம் அவசியமா இந்த நாவலுக்கு. இங்கே கொலையும் தற் கொலையும் பிரச்னையாக வந்திருந்தால் சரி. ஆனால் இவை ஒரு நொண்டிச்சாக்காக, கதை முடிச்சவிழப்புக்கு சுளுவாக உதவக்கூடிய ஒரு நிகழ்ச்சியாகவே வருகின்றன. உண்மை யில் இந்த அத்தியாயத்தைப் புத்தகத்திலிருந்து அப்படியே எடுத்து விட்டால் என்ன என்று தோன்றுகிறது எனக்கு. செய்து விடலாம். அதுக்கு பதில் இடைச் செருகல் செய்ய எனக்கு உரிமை கிடையாதே.

போகட்டும் இந்தப் பெரிய குறையிலும் ஒரு ஆறுதல் படிப்பவனுக்கு. கொலை, வழக்கு, தீர்ப்பு, தற்கொலை இத்யாதிகளுக்கெல்லாம் ஆசிரியை காட்சிகள் கட்டங்கள் ஆர்ப்பாட்டமாக எழுப்பாமல், க. நா. சுப்ரமண்யம்

'பொய்த் தேவு'வில் சொல்லி இருப்பதுபோல நிதானமாகச் சொல்லிச் சென்றுவிட்டார். இருந்தாலும் இந்தக் கட்டம் தேவையில்லை, இதுக்கு மாறாகக் கதையின் மென்மையான போக்குக்கு ஏற்ற இசைவான வேறு சந்தர்ப்பங்களை ஏற்படுத்தி சுதாவாக கதை விருவிருப்புக்கு வழி செய்திருந்தால் சுருதி மாறி இருக்காது என்று சொல்லத் தோன்றுகிறது.

இன்னொரு குறை உதாரணத்துக்கு:

இந்த மாதிரி எழுதுவது அறுபதுக்களில் பத்தாம் பசலி எழுத்துதான். வேத நாயகம் பிள்ளையும், ராஜம் அய்யரும் மாதவையாவும் அன்று முக்கால் நூற்றாண்டுக்கு மேற்பட்ட பழய காலத்தில் இந்த மாதிரி எழுதினதுக்கு மன்னிக்கலாம்—தமிழுக்கே முதல், ஆரம்ப நாவல்கள் என்பதுக்காக, அநுதாபமாகப் பார்த்து. வ.வெ.சு. அய்யரின் 'குளத்தங்கரை அரசமரம்' இப்படிப் பேசினபோதுகூட அது கதாபாத்திரமாகத் தன் உணர்ச்சியைக் கலந்தது. அது பொருத்தமானது. ஆனால் இங்கே சாட்சியாக உள்ள ஆசிரியை தன் உணர்ச்சியை அப்பட்டமாகக் கலக்கிறார். கதாபாத்திரங்கள் அசட்டு அபிமான இருக்கத்தோடு (செண்டிமென்டலாக) நடந்து கொள்வதுதான் நம் தற்போதிய நாவல், சிறு கதைகளில் காண்பது சகஜமாக. இங்கு ஆசிரியையே சென்டிமென்டலாக தன் வேதனைக்குரல் கொடுக்கிறார். இது கலைத்தரமானது இல்லை. இதே மாதிரி இந்த ஒரு இடத்தில் பனையேறிகளின் வாழ்க்கை பற்றி துயரக்குரல் கொடுத்திருப்பது; ஆசிரியை தன்னை முன் நிறுத்திக் கொண்டு 'பனையேறிகள் மகாநாட்டு' தலைமைப் பிரசங்கம் போல் தொனிக்கிறது. இதெல்லாம் தவிர்த்தாக வேண்டியவை, சுமாரான நாவல் என்பதிலிருந்து அடுத்த படிக்கு இது நல்ல நாவல் என்ற பிரமோஷன் பெற வேண்டுமானால்.

இந்த நாவலில் அங்கங்கே உபமானங்கள் யதார்த்தமாகவும் நல்ல கவனிப்பைக் காட்டுவதாகவும் இருக்கின்றன.

உதாரணமாக...(பக்கம் 6) இன்னும் 'சாது வடித்து அழகு பார்க்க', 'பேர் போடப் போறேம்' போன்ற அழகான பேச்சு வழக்கு பிரயோகங்கள் காணப்படுகின்றன. கொச்சைச்சொல்லை பாத்திரங்களின் பேச்சிலே தான்சொல்ல லாம், ஆசிரியர் எழுதக்கூடாது என்று மேடை மேல் தமிழ் எழுதச் சொல்லித்தரும் போதகர்களை பார்க்கிறேம். இந்த நாவலாசிரியை ஒரு கலாசாலைப் பேராசிரியர்: 'ஆனு லும் குறட்டையின் ஒலி **'பெலந்தான் பெலமாகக்'** காறித்துப் புவதிலிருந்து அறியலாம்' என்று எழுதி இருக்கிறுர். தெரிந்தேதான் அவர் இந்தச் சொல்லை உபயோகித்திருக் கிறுர் ஆசிரியை. எனக்கு இது உடன்பாடு.

இங்கிலீஷ் வாக்கிய அமைப்பு என்றும், இங்கிலீஷில் நினைத்து தமிழில் எழுதுகிறுர்கள் என்றும் ஒரு கிளிப்பிள்ளை புகார் உண்டு. 'அவள் பலர் காண வெளியில் வருவது கூடாது. **இது அவள் விலையை குறைப்பதாகும்'** என்று எழுதி இருக்கிறுர்...இதுவும் எனக்கு உடன்பாடு. வளரும் தமி ழுக்கு இதெல்லாம் தேவைதானே.

ஆக, 'புத்தம் வீடு' நாவலை நான் படித்து வந்தபோது இன்றைய பல நாவல்களை நான் உதறிவிடுவதுபோல் என் ஞல் புறக்கணிக்க முடியாதபடி அது என் கவனத்தை நீடிக் கச் செய்து கொண்டிருந்தது. அதன் நிறைகுறைகள் என் மனதில் பட்டதைக் கொண்டு சுமாரான நாவல் என்று சொல்லுகிறேன். அதோடு இந்த ஆசிரியரின் அடுத்த நாவலை எதிர்பார்க்கிறேன். அது நல்ல நாவலாகவோ சிறந்த நாவலாகவோ இருக்கக்கூடும்.

சிதம்பர சுப்பிரமணியனின்

# இதய நாதம்

---

ஜடாதரன்

''ஒரு நாத யோகியைக் கதாநாயகனுக வைத்து எழுத வேண்டும் என்ற ஆசை வெகுநாட்களாக இருந்துவந்தது. அதன் விளேவே இந்தப் புத்தகம்'' என்று தன்னுடைய முன்னுரையில் கூறுகிருர் ஆசிரியர், ந. சிதம்பர சுப்ரமணி யம் அவர்கள். நாதோபாசனேயில் தன் வாழ்வை அர்ப் பணித்துக்கொண்டுவிட்ட ஒரு மகானுடன் பழகிய அனுபவ நிறைவு இந்த நாவலேப் படித்து முடித்ததும் நமக்கு ஏற்படு கிறது.

கதையில் கந்தசாமி பாகவதர் என்பவரின் வாயிலாகக் குறிப்பிடும் கருத்தின்படி, ஆசிரியர் தன் கலேயின் பயனே அடைந்துவிட்டார் என்று சொல்லவேண்டும்.

''எங்கேயாவது ஒரு மூலேயில்அழுக்கு வேஷ்டியைகட்டிக் கொண்டு ஒரு பரம ரசிகன் உட்கார்ந்திருப்பான். நீ பாடும் பாட்டைக் கேட்டுவிட்டு, ஆத்மானந்தத்திஞல் உன்னே மனப்பூர்வமாக ஆசீர்வதிப்பான். அதுதான்நீ கற்ற வித்தை யின் பலன்'' என்று கதாநாயகனிடம் கந்தசாமி பாகவதர் கூறுகிருர். உண்மையான கலேயின் பயனே எவ்வளவு அழ

காகக் கூறிவிட்டார் அவர். பாரதப் பண்பில் நம்பிக்கையும் சங்கீதத்தின் தெய்வத்தன்மையில் ஈடுபாடும் கொண்ட ரசிக உள்ளங்களுக்கு ''இதய நாதம்'' ஒரு வரப்பிரசாதம்!

சொல்லப்போனல்இந்தக்கதையின் ஜீவநாடியே சங்கீதம் தான். ஆகவே வழக்கமாக நாம் படிக்கிற நாவல்களிலிருந்து சற்று விலகிய பாட்டையில்தான் கதை நடை போடுகிறது. அதுவே அதற்கு ஒரு சிறப்பாகவும் அமைந்துவிடுகிறது. சாதாரண மனிதனுடைய எண்ணங்களுக்கும் கலேஞெருவனின் எண்ணங்களுக்கும் வேறுபாடு உண்டு. அதிலும் கலேயை ஒரு யோகமாகப் பயிலும் ஒருவனேக் கதாநாயகனுக வைத்து எழுதும்போது, அப்படிப்பட்ட ஒரு யோக அநுபவத்தை உணர்ந்திருந்தாலன்றி, எழுத்தில் வெற்றிபெற்றுவிட முடியாது. ஆசிரியர் எழுத்தில் இந்த வெற்றியை அடைந்திருக்கிருர் என்று சொல்லும்போதே அவரது ''கலே உபாசனேயை'' நாம் வணங்காமல் இருக்க முடியவில்லே.

கதை:

''ஒழுங்குமுறையில்லாது ஊதாரியாக வாழ்ந்து அற்பாயுசிலேயே கண்ணே மூடிவிட்ட வைத்தியின் பிள்ளே கிட்டுவிற்குக் கேட்போர் அதிசயிக்கும் சங்கீத ஞானம் பிறவியிலேயே வாய்த்திருந்தது. ''அப்பா சங்கீதம் கற்றுக் கொண்டு சிரிப்பாய்ச் சிரித்தது போதும். இவனுக்குச் சங்கீதம் வேண்டாம்'' என்று நினேக்கும் அவனுடைய விதவைத்தாய், தன் தமையனுடன் அவனே அனுப்பிவைத்து சாஸ்திரோக்தமான கல்வி பயிற்றுவிக்க எண்ணுகிருள். கிட்டுவுக்கு மாமாவையும் பிடிக்கவில்லே. இந்த ஏற்பாடும் பிடிக்கவில்லே. ஆகவே தன்னேயே நம்பியிருக்கும் தாய்க்குக்கூடச் சொல்லாமல் வீட்டைவிட்டு வெளியேறி விடுகிருன் அவன்.

வழியில் ஒரு கல்யாணக் கோஷ்டியைச் சேர்ந்த கிழவர் ஒருவரின் அபிமானத்துக்குப் பாத்திரமாகி அவருடன் கிளம்பும் அதிருஷ்டம் அவனுக்குக் கிடைக்கிறது. பையனிடம் இருக்கும் சங்கீத ஞானத்தைக் கிழவர் தெரிந்துகொண்ட

போது, அந்தக் காலத்தில் மிகவும் பிரசித்தி பெற்ற வித்வானை திருவையாறு சபேசய்யரிடம் சிஷ்யனுக அவனேக் கொண்டு சேர்த்துவிடுகிருர் அவர். பத்து வருஷத்தில் குருவே வியந்து பாராட்டும் ஞான ஒளியைப் பெற்றுவிடுகிருன். இந்தப் பத்து வருட காலத்தில் அவனுக்குத் தன் ஊர் நினேவோ தாயின் நினேவோ வந்ததாகத் தெரியவில்லே. சபேசய்யர் காலமானபோதுதான் அவனுக்குத் தன் தாயின் நினேவும் ஊரின் நினேவும் வருகின்றன. அதுவரை தனக்குத் தாயார் உயிருடன் இருப்பதையே வெளியே சொல்லிக் கொள்ளாமல் இருந்தான். அதன்பின், சபேசய்யரின் மனேவியிடம் உண்மையைக் கூறி உத்திரவு பெற்றுக் கொண்டு ஊருக்குக் கிளம்புகிருன்.

அங்கே பாழ்மனேயும், ஆறு வருடத்துக்கு முன்பே தாய் இறந்துபோய்விட்ட செய்தியும் அவனே அறைந்து திருப்புகின்றன. வெதும்பிய மனத்துடன் திருவையாறு திரும்பி விடுகிருன்.

அவனுடைய கலேத்திறமை எல்லாராலும் ஒருங்கே பாராட்டப்பெறுகிறது. பேரும் புகழும் அவனேத் தேடி வந்து அடைகின்றன. செல்வம் வரும் வழியை அவனுகவே அடைத்துவிடுவதுதான் வேடிக்கை இதில்.

ஒரு பணக்காரர் வீட்டுக் கல்யாணத்தில் பாட ஒப்புக் கொண்ட அவன், கச்சேரிக்குக் குறிப்பிட்டிருந்த காலத்தில் வராமல் சந்தியா வந்தனத்தில் ஈடுபடவே, தனவந்தர் வெகு கோபமாயும் உதாசீனமாகவும் பேசிவிடுகிருர். அப்போது ஏற்பட்ட மனக் கொந்தளிப்பில் ''பணத்துக்காகப் பாடும் வழக்கம் இன்ருேடு தொலேந்தது'' என்று கூறி சங்கீதத்தை ஈசுவரார்ப்பணம் செய்வது என்று உறுதியெடுத்துக்கொள்கிருன். இதற்கிடையிலே சபேசய்யரின் மனேவி தருமாம்பாளின் முயற்சியில் அவளுடைய தங்கையின் பெண் நீலா கிட்டுவுக்கு மனேவியாக வந்து வாய்க்கிருள். பணத்தைத் துச்சமாக மதிக்கும் இவனுக்கு நேர் எதிரிடையான மனப்

போக்குள்ள அவளுடன் நடத்தும் குடும்ப வாழ்க்கை இடர் மிகுந்ததாக அமைகிறது. ஆயினும் கிட்டு தன் தீர்மானத்திலிருந்து கடைசிவரை பிறழவேயில்லை.

பணவிவகாரம் காரணமாக வீட்டில் சண்டை ஏற்படாமல் இல்லை. ஒரு நாள் வீட்டில் ஏற்பட்ட சண்டையில் மனம் வெறுத்துப்போய் வீட்டைவிட்டே வெளியேறிவிட எண்ணுகிறான் அவன். அவனுடைய நண்பர் கந்தசாமி பாகவதர் கூறும் நல்லுரைகள் அவனைப் பிடித்து நிறுத்துகின்றன. வீடு திரும்பும் கிட்டுவை அமைதியுடன் நீலா வரவேற்கிறாள். ''விதி செய்யும் கொடுமை போதும். நீயும் நானும் ஒருவருக்கொருவர் கொடுமை செய்துகொள்ள வேண்டாம்'' என்று கூறி கிட்டு அந்தச் சச்சரவுக்கு ஒரு முத்தாய்ப்பு வைக்கிறான்.

தவத்தின் மகிமையும் ஒளியும் அதற்கேற்படும் இடைஞ்சல்களினால்தான் வலுப்பெற்று மெருகேறுகின்றன. அதைப் போலவே, கிருஷ்ண பாகவதர் என்று எல்லோரும் கொண்டாடும் கிட்டுவின் வாழ்விலும் அவ்வப்போது இடைஞ்சல்கள் வெவ்வேறு உருவில் பிறந்து அவன் தன் தவமேன்மையை விளக்குகின்றன. அற்புதமான சாரீரமும், கிருஷ்ண பாகவதரின் வழியில் அந்தரங்க சுத்தியுடன் கூடிய ஈடுபாடும் கொண்ட தாஸி ஒருத்திக்கு சிக்ஷை சொல்லிவைக்கும் நிர்ப்பந்தம் அவனுக்கு ஏற்பட்டுவிடுகிறது. நண்பர் ஒருவர் வற்புறுத்தியபோது, இது தனக்கு ஒத்ததில்லை என்று தயங்கிய அவனே, நாளடைவில் அந்தப் பெண்ணின் குணத்தினாலும் சங்கீதாப்யாசத்தில் அவளுக்கிருந்த உண்மையான பக்தியினாலும் கவரப்பட்டு ஊராரின் ஏளனப் பேச்சுக்களைப் புறக்கணிக்கும் மனநிலையை அடைந்து விடுகிறான். ஆயினும் அவனே எதிர்பாராத நிலையில் அவள் உள்ளத்தில் அவனிடம் ஏற்பட்டிருக்கும் பிரேமையை தெரிந்துகொண்டபோது அதிர்ச்சியடைகிறான். அந்த நிமிஷம் முதல் அந்த சிக்ஷைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிடுகிறான்.

இந்த இடைக்காலத்தில் பாலாம்பாள் அவனிடம் காட்டிய குருபக்தியும் அவளது அன்பைக் கண்ட நீலாவின் உள்ளப் புகைச்சலும் ரசமான சம்பவங்கள்.

வாழ்க்கையில் ஒரு சாதாரண மனிதனுகத் தொடங்கி, கலையின் மகோன்னத சிகரத்தை எட்டிப்பிடித்து கிருஷ்ண் பாகவதர் என்ருல் சங்கீதத்தின் பாதுகாவலர் என்னும் நிலையை அடைந்த அவனுக்குக் கடைசியாக ஒரு பெரும் வீழ்ச்சி. அவனுடைய சாரீரம் அவனைத் திடீரென்று கை விட்டு விடுகிறது. வாழ்க்கையில் எத்தனையோ அடிகளைத் தாங்கிக்கொண்ட அவனுல் இந்த அடியைத் தாங்க முடிய வில்லை.

இந்த வேதனையிலிருந்து அவனை மீட்டு அவனுக்கு மன அமைதி கொடுக்கிருர் கந்தசாமிப் பாகவதர். கதையில் கிட்டுவுக்கு அவ்வப்போது நல்லுரை கூறி உதவும் இந்தப் பாத்திரம் பக்குவப்பட்ட மனநிலையுள்ள ஒரு அற்புதமான பாத்திரம்.

''உன்னுடைய அருமையான குரலை இழந்து நீ வேதனைப் படுகிருய். வாஸ்தவம்தான். அதனுல் என்ன குடி முழுகிப் போய்விட்டது? உன் காதுகள் கேட்ட நாத வெள்ளத்தில் இதுவரை ஈடுபட்டிருந்தாய். இனி, செவிக்கு எட்டாத இனிய நாதத்தில் ஈடுபடுவதற்குத்தான் உனக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்கிறது. நீ நாதத்தின் எல்லையைக் கடந்துவிட்டாய். அடுத்தபடியில் இருப்பது மௌனம்.'' என்று அவர் கூறியதும்,

''இதுவரையில் பகவானைக் குரல் கொடுத்துக் கூப்பிட்டு வந்தேன். இனி என் இதயத்தால் அவரைக் கூப்பிடுவேன்'' என்று பக்குவப்பட்ட மனத்துடன் கிட்டு பதிலளிப்பதும், கதையின் முடிவில் வரும் சுவையான சம்பாஷணைகள் மட்டு மல்ல; கதையின் இதயநாதமாக ஒலிக்கும் வார்த்தைகள்.

ஆடம்பரமில்லாத நடையில் அலுப்புத்தட்டாத வகையில் அவசியமான சம்பவங்களே மட்டும் கொண்டதாகக் கதையை ஆசிரியர் நடத்திச் செல்லும் பாணி வியக்கத்தக்கதாக இருக்கிறது. கதை முழுவதும் ஒரே சீரான அமைதி விரவிக்கிடக்கும் அழகு, கதை படிக்கும்போது, தெய்வசந்நிதானத்தில் நிற்கும் புல்லரிப்பை ஏற்படுத்துகிறது. அங்கங்கே முத்துக் கோத்தாற்போல் ஆசிரியர் தெளிக்கும் சில கருத்துக் களேப் பார்ப்போம்.

''சங்கீதத்தை ஒரு யோகமாகவும், தபஸாகவும், பெரியவர்கள் கருதி வந்தார்கள். ஆனுல் தற்காலத்திலே, பாடகர்கள் கீர்த்தியும் செல்வமும் செல்வாக்கும் அடைவதுடன் தங்கள் சாதனே பூரணத்துவம் பெற்றுவிட்டதாக நினேத்துவிடுகிறுர்கள். சங்கீதம் என்பது ஒரு தொழில் முறையாகிவிட்டது. மனிதனின் ஆத்ம ஞானத்தை உயரவைப்பதற்குப் பதில் அது கீழிறங்கிவந்து லௌகிக பேரம் பேசுவதாகிவிட்டது.''

''மரணம். வாழ்க்கையில் ஒரு நிச்சயமான அம்சமாக இருந்த போதிலும் அது எவ்வளவு தூரம் மனிதனுடைய உள்ளுணர்விலே தைத்து அவனுக்கு வாழ்க்கையின் தத்துவத்தைப் போதிக்கிறது. தருமபுத்திரர் நச்சுப் பொய்கையில் ஆச்சரியப்பட்டதுபோல், வாழ்க்கையிலே, மனிதன் ஏன் மரணத்தைப்பற்றிய சிந்தனேயேயின்றி வாழ்க்கையைச் சதமென்று எண்ணி ஈடுபட்டு நிற்கிறுன் என்பது ஆச்சரியப்படவேண்டிய விஷயமாகத்தானிருக்கிறது''

''உலகத்தில் பார்க்கப்போனுல், மனிதனுடைய தன்மை அவன் கையில் இருக்கும் பணத்தைப் பொறுத்ததாகத்தான் இருக்கிறது. ஏழையின் சொல் மாத்திரம் அம்பலம் ஏறமுடியாமல் இருப்பதில்லே. ஏழையே அம்பலத்துக்கு வரமுடிகிறதில்லேயே...''

''மனது பக்குவமடைய மயானம் ஒரு பயிற்சியைக் கொடுக்கிறது. வாழ்க்கையின் உண்மையே மயானத்தில் ஆரம்பமாகிறது.''

ஒரு நல்ல நாவலைப் படிக்கும்போது ஒரு வாழ்க்கையையே வாழ்ந்துவிட்ட உணர்வு தோன்றக்கூடுமானல் அதுவே பெரிய பாக்கியம். ''இதயநாத''த்தைப் படிக்கும் போது ரசானுபவம் நிறைந்த ஒரு நல்ல கச்சேரியைக் கேட்ட மனநிலைமை ஏற்படுகிறது.

இதயநாதம் ஒரு லட்சிய நாவல். வாழ்வில் ஒவ்வொரு துறையிலும் சில விசேஷங்கள் இருக்கின்றன. அவற்றை அறிந்தவர்கள்தான் அந்த விசேஷங்களைப்பற்றிப் பேசமுடியும். சங்கீதத்தின் அருமையை அநுபவித்து உணர்ந்திருக்கும் திரு. சிதம்பர சுப்பிரமணியம் இந்த நாவலை ஆக்கித் தந்திருப்பது தமிழுக்கு நல்ல தொண்டு.

இதயநாதம் தெய்வகீதம்பற்றிப் பேசும் ஒரு உயர்ந்த கதை. அதைப் பேசி விளக்கமுடியாது. அநுபவித்து அநுபவித்து நெக்குருகத்தான் முடியும்.

''எங்கே மகான்களும் மேதைகளும் வாழ்கிருர்களோ, அவர்கள் அனைவருக்கும் என் வந்தனங்கள்.''

## பொருளடக்கம்

